# முன்னுரை

உலகில் மக்கள் பிறக்கின்றனர்; வாழ்கின்றனர்; பின் இறக்கின்றனர். இவ்வாறு பிறத்தலும் வாழ்தலும் பின் இறத்தலும் உலக இயற்கையாகின்றது. ஆனால் அருட்செல்வர்கள், இவ்வுலகில் பிறக்கும் பிறப்பானது நோயைப் போன்றதாகும் என்பர். உண்மையில் பிறவி நோயினின்றும் விடுபடுவதற்கு வழியுண்டா என்று நாம் அவர்களைக் கேட்போமேயானால், அவ்வருட் செல்வர்களில் ஒருவரும் திருமுறைகளைத் தொகுத்தவருமான நம்பியாண்டார் நம்பிகள் விடுதலை உண்டு என்று உறுதியாகக் கூறுகின்றார். பிறப்பு என்பது பெருங்கடலை ஒப்பதாகும். அப்பெருங்கடலைக் கடப்பதற்கு, நம் சமய குருவான திருஞான சம்பந்தப் பெருமான் பாடியருளிய ஞானத்தமிழே தோணியாகும்; அத்தோணியின் உதவியினால் பிறவிப் பெருங் கடலைக் கடந்து பிறவாமையாகிய இறைவனது பேரின்பத்தை அடையலாம் என்று கூறுகின்றார். அவர்தம் பாடல் வருமாறு:

பிறவி எனும் பொல்லாப்
பெருங்கடலை நீந்தத்
துறவி எனுந் தோற்றோணி
கண்டீர்—நிறைஉலகில்
பொன்மாலை மார்பன்
புனற்காழிச் சம்பந்தன்
தன்மாலை ஞானத் தமிழ்.

—நம்பியாண்டார் நம்பி.

தி: 11; ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக் கோவை
பா. எ: 11

ஆக், ஞானத் தமிழால் உளமார இறைவனைப் போற்றி வழிபடுதலே சிறந்த ஞான வழிபாடாகும் எனக் கொண்டனர் நம் தமிழர்கள். அவர்கள் இறையருளைப் பெற ஊர்கள் தோறும் அலைதலை விரும்பினர்களில்லை; கண்ணிற் கண்ட ஆறுகளில் காலமெல்லாம் முழுகி இறையருளைப்பெறவிரும்பினர்களில்லை; விடுதுறந்து காடடைந்து கடுந்தவமியற்றி இறையருளைப்பெற விரும்பினர்களில்லை; தெளிந்த உள்ளத்தோடு திருப்பாடல்களை மந்திரப் பாடல்களை இறைவன் திருமுன் ஓதி வழிபடுதலையே இறைவழிபாடாகக் கொண்டனர். அவ்வகையில் இறை வழிபாட்டிற்குத் திருமுறை ஆசிரியர்களும் ஆழ்வார்களும் அவர்கள் வழிநின்ற பிற ஆசிரியப் பெருமக்களும்பாடித்தந்ததமிழே ஞானத்தமிழாகும். இவ்வாறு பத்திச் சுவையும் இலக்கியச் சுவையும் மிளிர அருட்செல்வர்கள் அருளித் தந்த ஞானத் தமிழ்ப் பாக்களில் தேர்ந்தெடுத்த பாக்களின் தொகை நூலே இந்த ஞானத் தமிழ் நூலாகும்.

இந்நூல் மொத்தம் ஐம்பது பாடல்களைக் கொண்டது. திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர். சுந்தரர், மாணிக்கவாசகர்; சேந்தனர், திருவாலியமுதனர், புருடோத்தம நம்பி, திருமூலர், காரைக்காலம்மையார், நக்கீரர், கபிலதேவநாயனர், பட்டினத்தார், நம்பியாண்டார் நம்பி, சேக்கிழார்

முதலிய அருட்செல்வர்கள் பாடிய [1] பன்னிரு திருமுறைப் பாக்களினின்றும் ஒருசில பாக்களையும், ஆண்டாள், பூதத்தாழ்வார், நம்மாழ்வார் முதலிய ஆழ்வார்கள் பாடிய [2] நாலாயிரத்தினின்றும் ஒரு சில பாக்களையும், அருணகிரிநாதர், தாயுமானவர், குமர குருபரர், இராமலிங்க அடிகள், தேசிகவிநாயகம்பிள்ளை முதலிய அருட் கவிஞர்கள் பாடிய பாக்களினின்றும் ஒரு சில பாக்களையும், என் பாடல் ஒன்றையும் சேர்த்து இந்நூல் ஐம்பது பாக்களால் ஆனது. தொகுக்கப்பெற்ற பாடல்கள் திருமுறைவைப்பு முறையில் அமைக்கப்பட்டுள்ளன. பாடல்களுக்குரிய

---

1 பன்னிரு திருமுறை:-
இஃது சைவப் பெருமக்களால் பாடப்பெற்ற தொகுப்பாகும். திருமுறை 1, 2, 3—திருஞான சம்பந்தர் அருளிய தேவாரம் 4, 5, 6—திருநாவுக்கரசர் அருளிய தேவாரம் 7—சுந்தரர் அருளிய தேவாரம் 8—மாணிக்கவாசகர் அருளிய திருவாசகமும், திருக்கோவையாரும் 9—திருமாளிகைத் தேவர்முதலிய ஒன்பதின்மர் அருளிய திருவிசைப் பாவும், சேந்தனர் அருளிய திருப்பல்லாண்டும் 10—திருமூலர் அருளிய திருமந்திரம் 11—திருவாலவாயுடையார் முதலிய பன்னிருவர் பாடியருளிய நாற்பது நூல்கள் 12—சேக்கிழார் அருளிய திருத்தொண்டர் புராணம்.

2 நாலாயிரம்:- நாலாயிர திவ்வியப் பிரபந்தம் எனப் பெயர் பெறும். இந்நூல் பன்னிரு ஆழ்வார்களால் பாடப்பெற்ற தொகை நூலாகும். பன்னிருவர் வருமாறு - பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகர ஆழ்வார், திருமழிசை ஆழ்வார், தொண்ட ரடிப்பொடி யாழ்வார், திருப்பாணாழ்வார், மதுர கவி யாழ்வார், திருமங்கை யாழ்வார், பொய்கை யாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார் ஆகியோராவர்.

தலைப்புக்கள் பாடலுக்கும், அதன் கருத்துக்கும் ஏற்றவண்ணம் அமைக்கப்பட்டமை காண்க. நம் அருட்செல்வர்கள் எல்லாம் வல்ல இறைவனை, மாதொருபாகனாகவும், ஆடும் அழகனாகவும், ஊனமிலா ஒருவனாகவும், இனியனாகவும், அன்பு வடிவினனாகவும், பெருந்துணைவனாகவும், அருளாளனாகவும், வள்ளலாகவும், வித்தகனாகவும், ஞானகுருவனாகவும், காதலனாகவும், தலைவனாகவும் கண்டு களித்துப் போற்றியிருப்பதை அவர்கள் தம் கற்பனை அழகும் உண்மையும் கலந்த கவிதைகளில் நாம் நன்கு உணரலாம்.

இத்தொகுப்புநூல், தமிழினத்தாரின் அருட்செல்வரும் மந்திரப் பாடல்களுமான தேவாரம் முதலிய பன்னிருதிருமுறைகளையும், திருவாய்மொழி முதலிய நாலாயிரத்தையும் அறிந்து போற்றுதற்கு உரையோடு கூடிய ஓர் நுழைவாயிலுமாகும். காலத்தைக் கடந்து நிற்கும் கடவுளுக்கு அவனோடொத்துக் காலத்தை வென்று நிற்கும் ஞானத்தமிழைத் தமிழ்ப் பெருமக்கள் நாளும் போற்றுவார்களாக!

நன்றி.

ரெ. முத்துக்கணேசன்
காரைக்குடி 1-10-1970

## ஆசிரியரின் பிற நூல்கள்

கவிதை:

நல்லுரை வெண்பா

முத்து மாலை

கட்டுரை:

தமிழர் வாழ்த்து

உரை நூல்:

முத்தொள்ளாயிரம்

(மூன்றும் பதிப்பு)

தமிழ்த்தொகை

(இரண்டாம் பதிப்பு)



# நல்லுரை வெண்பா

ஆங்கிலத்தில்
மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

# RUBIES OF WISDOM

## ENGLISH TRANSLATION

*by*

V. RM. CHETTIAR, B. A.



## பொருள்.

பக்கம்

# நால்வர் வாழ்த்து

திருஞானசம்பந்தர்.

முந்தை வினையறுத்து முத்தன் திருவடிக்கீழ்ச்
சிந்தை கலந்து சிவமாக்க—முந்துமே
நாதன் தமிழ்விரகன் ஞானசம் பந்தன்பேர்
ஓதத் தழைக்கும் உயிர்.

திருநாவுக்கரசர்.

பாவும் பொருளும் பதமுமெலாம் போற்றுதிரு
நாவுக் கரசன்தாள் நண்ணுகவே—பூவில்
எடுத்தபொற் பாதமே எண்ணும் அவன்பேர்
தடுத்தாளும் மந்திரமே தான்.

திருநாவலூரர்.

சிற்றம் பலத்தான் திருத்தோழன் சுந்தரன்
நற்றமிழ் மாலையணி நாவலூர்க்—கொற்றவன்
நம்பிஆ ரூரன்பேர் நாமொருகால் ஓதினல்
தம்பிக்கும் தீவினையே தான்.

திருவாதவூரர்.

செய்யதிரு மேனிச் சிவபாதச் சிந்தையன்
வையம் புகழ்மணி வாசகன்—உய்யவே
சொல்விருந்து வைக்கும் திருவாத வூரன்பேர்
நல்மருந்தாம் நம்பிழைக் கே.

—ரெ. முத்துக்கணேசன்.



# திருமுறை வாழ்த்து

திருக்கோயிற் கலையழகைத்
தெளிவடையார் மருள்நீக்கும்
அருள்வி ளக்கைப்

பெருக்கோடும் புனல்முதலாம்
ஐம்பூதப் பெற்றிகொளும்
அறிவுப் பேற்றை

மருக்கோல மலர்மணத்தை
மந்திரத்தைத் தெய்விக
மாலை தன்னைத்

திருக்கோல இசையமுதைச்
சிவமாக்கும் திருமுறையைப்
போற்றி செய்வாம்.

—ரெ. முத்துக்கணேசன்.

# 1

## பிச்சை எடுப்பதேன்?

நச்சித் தொழுவீர்கள்
    நமக்கிது சொல்லீர்!
கச்சிப்பொலி காமக்
    கொடியுடன் கூடி
இச்சித் திருப்பூனை
    யிடங்கொண்ட ஈசன்
உச்சித் தலையிற்
    பலிகொண் டுழல்வானே!

—திருஞானசம்பந்தர்
திருமுறை: 2 தேவாரப் பதிகம் 172;
பாட்டு எண். 4.

மனிதனுக்குள்ளே பல்வேறு வகையான உணர்ச்சிகள் தோன்றுகின்றன; அவ்வுணர்ச்சிகளுக்கெல்லாம் தலை சிறந்து நிற்கும் உணர்ச்சி அன்பு உணர்ச்சியாகும். விலங்கினம் முதல் மனித இனம்வரை எல்லாவகை இனமும் அன்பு உணர்ச்சியால் கட்டுண்டு வாழக் காண்கின்றோம். அன்பானது கருத்தொருமித்த உள்ளங்கள் ஒன்றுபடும் பொழுது அக்காதலிலே பிறக்கின்றது; மெல்லமெல்ல உள்ளத்தைப் பற்றுகின்றது; உள்ளத்தோடு ஒட்டி உறவாடுகின்றது; உள்ளத்தைப் பண்படுத்துகின்றது. உள்ளத்திற்குள்ளேயே ஒருவகைப் புது உலகைத் தோற்றுவிக்கின்றது. மற்றைய உணர்ச்சிகளைச் செம்மைப்படுத்துகின்றது. உயிரோடு உயிராக ஒன்றுகின்றது; மனிதனை

உயர்த்துகின்றது; இதனுல்தான் திருவள்ளுவர் ‘அன்பின் வழியது உயிர்நிலே’— என்று கூறினர்போலும்! மேலும் இவ்வாறு வளர்ச்சியடைந்த அன்பு முதிர்ந்து முழுமையை அடைகின்றது; முழுமை பெற்ற அன்பில் தெய்வமே வாழுகின்றது என்கிருர் திருமூலர். ‘அன்பே சிவம்’— என்பது திருமூலரின் திருவாக்கு! இத்தகைய நிறைந்த சிறப்பினைப்பெற்ற அன்பினையே உயிரினங்கள் எல்லாம் நாடுகின்றன; குழந்தைகள் நாடுகின்றன; பெண்கள் நாடுகின்றனர்; ஏன் குழந்தைகளேயும் பெண்களேயும் ஒருசேரக் காக்கும் கடமைகொண்ட ஆண்கள் நாடி ஓடுகின்றனர். இவர்கள் எல்லோரையும் காட்டிலும் இவர்களேப் படைத்து இவர்தம் நலத்தைக் காக்கும் எல்லாம் வல்ல இறைவனே அன்பை நாடுகின்ருன் என்கின்ருர் திருஞானசம்பந்தப் பெருமான். பார்ப்போம்!

இறைவனே நெஞ்சார விருப்பத்தோடு தொழுபவர்களே! ஈசனுர், காஞ்சிபுரத்து அறம் வளர்க்கும் நாயகியும் காமக் கொடியுமான காமாட்சியை இச்சித்தார்; இச்சித்து அந்தத் தேவியோடு திருஇரும்பூளே என்ற ஊரை இடமாகக் கொண்டார்; இங்ஙனம் தேவி உடன் இருக்க இடங் கொண்ட ஈசன் உணவுக்காகத் தலேயோட்டில் பிச்சை எடுக்கும் தொழிலேத் தலேமேற்கொள்வதேன்? நமக்கு இதைச் சொல்வீர்களாக! என்கின்ருர்!

குறிப்பு:- பொதுவாகப் பொல்லாத மனேவியைப் பெற்றவர் விட்டைத் துறப்பர்; ஒரு செல்வமும் இல்லாதவர் விட்டைத் துறப்பர்; பரதேசியாவர். இஃது இயற்கை. ஆனுல் இங்கு சிவபெருமான் முப்பத்திரண்டு அறங்களேயும் முறையாக வளர்க்கும் அன்பு மனேவியைப் பெற்றவர்; மேலும் அவளே விரும்பி மணந்தவர்; திருஇரும்பூளே என்ற வளமை நிறைந்த ஊரை இடமாகக் கொண்டவர். இங்ஙனம் அறம் வளர்க்கும் மனேவி, வளம்கொழிக்கும் இடம்

இவ்வளவும் பெற்றவர் பிச்சைத் தொழிலை மேற்கொள்வதேன்? என்று ஞானசம்பந்தர் கேட்கிறார். எல்லாம் நிறைந்த ஒருவர் இத் தொழிலை மேற்கொள்வாரேயானால் ஏதாவது ஒரு காரணம் இருக்கத்தானே வேண்டும்! எல்லாம் நிறைந்தவர் எளியர் ஆனார் என்று ஞானசம்பந்தர் சொல்வதின்மூலம் அன்பு ஒன்றினையே வேண்டி, அடியவர்பால் அவ் வன்பைப் பெற ஆண்டிக்கோலம் பூண்டார் என்பதைக் குறிப்பால் உணர்த்துகின்றார். ஒருவருடைய மனத்தகத்தே நிறைந்திருக்கும் அன்பு அவர்பால் சென்று ஒருவர் இரந்து பிச்சை கேட்கும்பொழுதுதானே வெளிப்படும். அதனால்தான் இப்பாடலின்மூலம் மெய்யடி யார்கள் அகம் கனிந்து முகமலர்ந்து இடும் பிச்சைக்கு அடிப்படையாய் அமைந்துள்ள அன்பைப்பெறவே இறைவன் பிச்சைத்தொழிலை மேற்கொண்டார் என்ற பெருந்தன்மையையும், எல்லாம் வல்லவர் – எல்லோராலும் போற்றப் படுபவர் - மக்கள் அன்பைப்பெற எளிய வடிவம் கொண்டதால் அவர் தம் எளிய தன்மையையும் குறிப்பால் அறிவுறுத்துகின்றார் ஞானசம்பந்தப் பெருமான்..

**திருஇரும்பூளை:-** தமிழ்நாட்டில் சோழநாட்டுப் பகுதியைச் சேர்ந்தது. நீடாமங்கலத்திநின்றும் நான்குகல் தொலைவிலுள்ளது. திருஞானசம்பந்தர் பாடல் பெற்ற தலம்.

**திருஞானசம்பந்தர்:-** ஏழாம் நூற்றாண்டில் சீர்காழியில் கவுணிய வேதியர் குலத்தில் சிவபாத இருதய ருக்கும் பகவதியம்மையாருக்கும் மகவாகத் தோன்றினார். இவர் தமது மூன்றாம் ஆண்டில் பார்வதி தேவியார் ஞானங்குழைத்துப்

பாலமுதம் தர வுண்டு, சிவஞானம் பெற்றுத் 'தோடுடைய செவியன்' எனத் தொடங்கும் பதிகத்தைப் பாடினர். இவர் நல்லூர்ப்பெரு மணம் என்ற தலத்தில் தமது பதினரும் ஆண்டில் மனைவியுடன் வைகாசி மூலத்தில் சிவத்தொடு கலந்தனர். இவர் தம் பிற பெயர்கள் ஆளுடைய பிள்ளையார், முத்தமிழ் விரகர் என்பன. சைவத்திருமுறை பன்னிரண்டில் முதல் மூன்று திருமுறைகளும் இவர் பாடிய தேவாரத் திருப்பதிகங்களைக் கொண்டவை. இவர் பாடிய திருப்பதிகங்கள் பதினருயிரம் என்று நம்பியாண்டார் நம்பிகள் கூறுகிறர். ஆனல் இப்பொழுது திருமுறைகளாக வகுக்கப் பெற்றவை 383; கல்வெட்டிலிருந்து திருவிடைவாய் என்ற தலத்தில் கிடைத்த பதிகம் ஒன்று என அறிவதால் 384 கிடைத் துள்ளன. இவரால் பாடல்பெற்ற தலங்கள் 214 என்பர்.

—கலைக்களஞ்சியம்
தொகுதி 5: ப. எ: 745, 746.

**தேவாரம்:-** நம் சமய ஆசிரியர்களான திருஞானசம்பந்தர் - திருநாவுக்கரசர் - சுந்தரர் - மூவரும் பாடிய பாடல்களின் தொகுப்பே தேவாரமாகும். சைவத்திருமுறை பன்னிரண்டில் தேவாரம் ஏழு திருமுறைகளாக நம்பியாண்டார் நம்பிகளால் வகுக்கப்பெற்றுள்ளது; அவற்றில் முதல் மூன்று திருமுறைகள் திருஞானசம்பந்தப் பெருமான் அருளியவை. தேவாரத்தில் கிடைத்த இவர்தம் பாடல்கள் மொத்தம் 4147 ஆகும்.

திருஞானசம்பந்தர்தம் ஞானத்தமிழைப் பற்றி நம்பியாண்டார் நம்பிகளின் பாடல்:

பிறவினனும் பொல்லாப்
பெருங்கடலை நீந்தத்
துறவினனுந் தோற்றேணி
கண்டீர்—நிறைஉலகில்
பொன்மாலை மார்பன்
புனற்காழிச் சம்பந்தன்
தன்மாலை ஞானத் தமிழ்!

—நம்பியாண்டார் நம்பி

தி: 11; ஆளுடையபிள்ளையார் திருமும்மணிக்கோவை
பா. எண்: 11.

**ஒப்புமை:-**

கடும்பகல் நட்ட மாடிக்
கையிலோர் கபால மேந்தி
இடும்பலிக் கில்லந் தோறும்
இழிதரும் இறைவன் நீரே!

—திருநாவுக்கரசர்

தி: 4; ப: 77: பா. எ: 1.

வாரிருங்குழல் வாணெடுங்கண்
மலைமகள்மது விம்முகொன்றைத்
தாரிருந்தட மார்புநீங்காத்
தையலாளுல குய்யவைத்த
காரிரும்பொழிற் கச்சிமூதூர்க்
காமக்கோட்டமுண் டாகநீர்போய்
ஊரிடும்பிச்சை கொள்வதென்னே
ஓணகாந்தன் தளியுளீரே!

—சுந்தரர்.

தி. 7: ப, 5: பா, எ. 6

இருந்தவா காணீர்
    இதுவென்ன மாயம்
அருந்தண் கயிலாயத்
    தண்ணல்—வருந்திப்போய்த்
தானும் பிச்சை
    புகும்போலும் தன்னடியார்
வானுள மண்ணுள வைத்து!

—நக்கீரர்;
தி: 11; கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி
பா. எ. 53.

இல்லாளே முப்பத்
    திரண்டறமும் செய்திருப்பச்
செல்லார் பொழிற்காசிச்
    செல்வனார்—மெல்ல
பரக்கின்ற புன்னீர்
    படுதலைகொண் டையம்
இரக்கின்ற வாறென்சொல் கேன்!

—குமரகுருபரர்;
காசிக்கலம்பகம்; பா. எ: 19.

# 2

## ஒன்றரைக் கண்ணன்

இன்றுஅரைக் கண்உடை யார்எங்கும்
இல்லை; இமயமென்னும்
குன்றரைக் கண்ணன் குலமகட்
பாவைக்குக் கூறிட்டநாள்
அன்றுஅரைக் கண்ணும் கொடுத்துஉமை
யாளையும் பாகம்வைத்த
ஒன்றரைக் கண்ணன்கண் டீர்!ஒற்றி
ஊர்உறை உத்தமனே!

—திருநாவுக்கரசர்

திருமுறை: 4; தேவாரப் பதிகம் 86, பா. எண். 7

உலகில் ஒவ்வொரு மனிதனுள்ளும் இருவேறுபட்ட பண்புகள் தோன்றுகின்றன; பின் அவை தாமாகவே மறைகின்றன. ஒரு நிலையில் மனிதன்—வெறுத்தொதுக்கும் சினத்தின் வடிவத்தை அடைகின்றான்; பின்னொரு நிலையில் அணைத்து மகிழும் அன்பின் வடிவமாகின்றான். அடக்கி ஆளும் வலிமை ஒருகால் எழுகின்றது; அடங்கி ஒடுங்கும் மென்மை பின்னொருகால் எழுகின்றது. உரக்கப் பேசிக் கட்டளை இடும் ஆண்மைக் குணமும் உளங் கனியப் பேசும் பெண்மைக் குணமும் எழுந்து மறைவதை நாம் காண்கின்றோம், இவ்வாறு மனிதனை ஆண்மைப் பண்பும் பெண்மைப்பண்பும் கலந்த உணர்ச்சி வடிவினனாக இயற்கை படைத்ததுபோலும்! ஒவ்வொரு ஆணுக்குள்ளும் ஒவ்வொரு பெண்ணுக்குள்ளும் இருவேறுபட்ட பண்புகள் கலந்து நிற்கக் காணுகின்றோம். அப்பொழுதுதான் அவர்கள்தம் வாழ்வு முழுமை பெறுகின்றது. இத்தத்துவத்தை உணர்த்தவேதான் இறைவன் ஆண்மையும் பெண்மையும் கலந்த மாதொரு பாகனாகக் காட்சியளிக்கின்றார். இங்ஙனம்

காட்சியளிக்கும் அம்மை அப்பனை—அவனுடைய தொன் மைக் கோலத்தைச் சுட்டிப் போற்றி இங்கு வணங்குகின்றார் அப்பர்.

என்றென்றைக்கும் இரு கண்கள் உடையார் உளர். ஆனால் அரைக் கண் உடையார் எங்குமே இல்லை; இமய மலைக் குரிய குன்றர்களின் அரசனுடைய கண்போன்ற குல மகள் பார்வதி. பார்வதியை மணந்தான் முக்கண்ணனாகிய சிவபெருமான். மணந்த உமையவளுக்குத் தன்னுடைய உடலைக் கூறுபோட்டுப் பாதியாகப் பிரித்துக் கொடுத்தார். அங்ஙனம் உடலைக் கூறு போட்டதில் தன் கண்களாகிய முக்கண்ணில் செம்பாதி ஒன்றரைக் கண்போக ஒன்றரைக் கண் மிஞ்சிற்று. இவ்வாறு சிவபெருமான் ஒன்றரைக் கண்ணன் ஆனார். திரு ஒற்றியூரில் வீற்றிருந்து அருளும் உத்தமனாகிய ஒன்றரைக் கண்ணனைக் காண்பீர் களாக! என்கிறார்.

குறிப்பு:- நம்முடைய தமிழ் மரபு இறைவன் வேறு, இறைவி வேறு என்று எண்ணுவதில்லை; இறைவனையும் இறைவியையும் ஒன்றாகவே உணர்ந்து மாதொரு பாகனைத் தமிழர்கள் வழிபட்டார்கள். நம் சமயப் பெரியோர்களாகிய பன்னிரு திருமுறை ஆசிரியப் பெருந்தகையோர்களும் மாதொரு பாகனைகவே கண்டு பாடிப் பரவியிருக்கின்றார்கள், பன்னிரு திருமுறைகளிலும் இறைவிக்கு என்று தனியே ஒரு பாடல் கூட இல்லை. திருப்பூவண நாதரை நோக்கி அப்பர், 'ஆணாகிப் பெண்ணாய வடிவு தோன்றும்' என்றே பாடுகின்றார். ஆணும் பெண்ணும் கலந்த அழகு வடிவமாகக் கண்டு பரவசமடையும் அப்பர் தம் அருட் காதல் உள்ளம் பாடலில் காட்சியளிக்கக் காணலாம். கவி அழகும் இறை உணர்வும், ஆண்மையும் பெண்மையும் கலந்த காட்சிபோல், இப்பாடலில் ஒரு சேரக் காணலாம்.

மேலும் எப்பொழுதுமே இறைவனை உமை யொருபாகனுகவே தொழவேண்டும். அப்பொழுது தான் அவன் அருள் பாலிப்பான் என்ற குறிப் பினையும் பெற வைக்கின்ருர்.

குன்றரைக் கண்ணன் குலமகள் என்ற தொடரைக் குன்றர் + ஐ + கண் + நன்குலமகள் எனப் பிரித்துப் பொருள் கொள்க.

**திருஒற்றியூர்:-** மூவர் பாடல் பெற்ற தலம். தொண்டை நாட்டுத் திருப்பதிகளில் ஒன்று. சென்னைக்கு வடக்கே ஐந்துகல் தொலைவில் உள்ளது. அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவரான கலிய நாயனுர் பிறந்த தலம். பட்டினத்தடிகள் வாழ்ந்து வீடு பெற்ற இடம். சுந்தரர் சங்கிலி யாரை மணம்புணர்ந்த பதி. இவ்வூருக்குச் சோழ—பாண்டிய — பல்லவ — இராட்டிரகூட மன்னர்கள் காலத்து வெட்டப்பெற்ற கல் வெட்டுக்கள் உள்ளன.

**திருநாவுக்கரசர்:-** தென்னார்க்காடு மாவட்டத்தில் திருவா மூரில் வேளாளர் குலத்தில் புகழனுர்க்கும் மாதினியார்க்கும் மகவாகத் தோன்றியவர். இவர் இயற்பெயர் மருணீக்கியார் என்பது, சமண சமயம் புகுந்து தருமசேனன் என்ற பெயர் பூண்டார். சூலை நோயால் துன்புற்றுத் தமக்கை திலகவதியாரின் உதவியால் சைவ சமயத்தை மேற்கொண்டு சிவனைப் பாடி நோய் நீங்கப்பெற்ருர். இறைவனுல் அளிக்கப்பட்ட பெயர் திருநாவுக்கரசர் என்பது, சீகாழியில் சம்பந்தரால் கொடுக்கப்பெற்ற பெயர் அப்பர் என்பது. மேலும் வாகீசர், ஆளுடைய அரசு, தாண்டகவேந்தர் எனப் பெயர்கள் பூண்டவர். தம் 81 ஆம் வயதில் சித்திரைச் சதயநாளில்

சிவன் சேவடி சேர்ந்தார். சைவத் திருமுறைகள் பன்னிரண்டில் 4—5—6 என்னும் மூன்று திருமுறைகளும் இவர் பாடிய தேவாரப் பதிகங்கள் அடங்கியவை. 4ஆம் திருமுறையில் 113 பதிகங்களும் (1070 பாடல்களும்) 5ஆம் திருமுறையில் 100 பதிகங்களும் (1015 பாடல் களும்) ஆறும் திருமுறையில் 99 பதிகங்களும் (1015 பாடல்களும்) உள்ளன. ஆக 312 பதிகங் களும் 3066 பாடல்களும் அடங்கியது இப்போது கிடைக்கும் திருநாவுக்கரசர் தேவாரம்.

—கலைக்களஞ்சியம்
தொகுதி 6. பக் 3

திருநாவுக்கரசர்தம் அருந்தமிழைப் பற்றி நம்பியாண்டார் நம்பிகளின் பாடல்:-

மணியினை மாமறைக் காட்டு
மருந்தினை வண்மொழியால்
திணியன; நீள்கத வம்திறப்
பித்தன; தெண்கடலில்
பிணியன; கல்மிதப் பித்தன;
சைவப் பெருநெறிக்கே
அணியன; நாவுக் கரையர்
பிரான்தன் அருந்தமிழே!

—நம்பியாண்டார் நம்பி
தி. 11: திருத்தொண்டர் திருவந்தாதி
பா. எ: 25

ஒப்புமை:

புதுவிரி பொன்செய்ஓலை ஒருகாது ஓர்காது
சுரிசங்கம் நின்று புரள
விதிவிதி வேதகீதம் ஒருபாடும் ஓத
ஒருபாடு மெல்ல நகுமால்

மதுவிரி கொன்றைதுன்று சடைபாகம் மாதர்
குழல்பாக மாக வருவார்
இதுஇவர் வண்ண வண்ணம் இவள்வண்ண
வண்ணம்
எழில்வண்ண வண்ண இயல்பே!

—திருநாவுக்கரசர்
தி. 4; ப: 8; பா. எ: 10

தோலும் துகிலும் குழையும்
சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும்
பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையும்
உடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய்
கோத்தும்பீ!

—மாணிக்கவாசகர்
திருக்கோத்தும்பி; பா. எ. 18

வலந்தான் கழல்இடம் பாடகம்
பாம்பு வலம்இடமே
கலந்தான் வலம்நீறு இடம்சாந்து
எரிவலம் பந்துஇடம்என்பு
அலந்தார் வலம்இடம், ஆடகம்
வேல்வலம் ஆழியிடம்
சலம்தாழ் சடைவலம் தண்ணங்
குழல்இடம் சங்கரற்கே!

—சேரமான் பெருமாள்நாயனர்
பொன்வண்ணத் தந்தாதி; பா. எ. 65

## 3

## அறமும் மறமும்

பெருகுவித்தென் பாவத்தைப் பண்டெலாம்
　　குண்டர்கள்தம் சொல்லே கேட்டு
உருகுவித்தென் உள்ளத்தின் உள்ளிருந்த
　　கள்ளத்தைத் தள்ளிப் போக்கி
அருகுவித்துப் பிணிகாட்டி ஆட்கொண்டு
　　பிணிதீர்த்த ஆரூ ரர்தம்
அருகிருக்கும் விதியின்றி அறமிருக்க
　　மறம்விலைக்குக் கொண்ட வாறே!

—திரு நாவுக்கரசர்
திருமுறை: 4 பதிகம் 5 பா. எ. 3

'தருமம் தலைகாக்கும்'—என்பர் ஆன்றோர். மனித வாழ்க்கைக்கு மிகமிக இன்றியமையாத ஒன்று அறம் செய்தலாகும். அறமானது வாழ்கின்ற உயிர்களுக்குச் சிறப்பை அளிக்கும்; செல்வத்தைக் கொழிக்கும்; நன்மை யையும் இன்பத்தையும் புகழையும் நாளும் கொடுக்கும் என்று கூறுகின்றார் திருவள்ளுவர். உண்மையில் மனித வாழ்க்கைக்குக் கவசம் போன்றது அறமாகும்; அவ்வறம் மனித வாழ்க்கையின் வளர்ச்சிக்கும் உறுதுணை யாக இருக்கும். இத்தகைய அறம்போன்று, சிவபெருமான் திருவருள் தன்னைக்காத்தது என்கின்றார் திருநாவுக்கரசர். அப்பர் திருவாரூர் வந்து சேர்ந்தார். அங்கு உறையும் ஆரூரனை வணங்கி வழிபட்டார். அவன் அருளை நினைந்து வியந்தார். அப்பர் முன்பு சமணசமயத்தைத் தழுவினார். தருமசேனர் என்ற பட்டம்பெற்று அறியாமையில் மூழ்கினார். இவரை ஆட்கொள்ளச் சிவபெருமான் எண்ணிச் சூலை நோயைக் கொடுத்தார். நோயால் துன்புற்ற அப்பர்

தமக்கை திலகவதியார் வழிகாட்டச் சைவசமயத்தை மேற்கொண்டார். இறைவன் அருளைப் பெற்ருர். இறைவன் திருவருள் நோயுற்ற அப்பரைக் காத்தது; அவருக்குத் திருநாவுக்கரசர் என்ற சிறப்புப் பெயரை அளித்தது; அருள் தொண்டு என்னும் செல்வத்தை வாரி வழங்கியது; இடையருது இறைவனை எண்ணும் இன்பப் பேற்றையும் புகழையும் கொடுத்தது. இங்ஙனம் பெயர்-செல்வம்–புகழ் முதலியவற்றை அளித்த சிவபெருமான் திருவடியை நினையாது முன்பு சமணசமயத்தை மேற்கொண்டு அலைந்து திரிந்தோமே என்று வருந்திக் கூறுகின்ருர் அப்பர் பெருமான்!

முன்பு சமணக் குண்டர்கள் சொற்களையே கேட்டுச் சமணசமயம் புகுந்தேன், அதனுல் பெரும் பாவங்களையே பெருக்கிச் சேர்த்துக்கொண்டேன்; ஆனல் சைவசமயத்தைச் சார்ந்தபின் இறைவன் திருவருள் என்னைத் தடுத்தாட் கொண்டது, சூலைநோயைத் தந்தது; அதன் காரணமாக உண்மையை உணர்ந்தேன்; சமண சமயத்தைத் துறந்தேன். சைவசமயத்தை மேற்கொண்டேன். சிவபெருமான் திருவருள் என் உள்ளத்தை உருக்கிவிட்டது; உள்ளத்தினுள்ளே இதுகாறும் ஒளிந்திருந்த சமணசமய வேட்கை என்னும் கள்ளத்தைப் போக்கிக் காத்தது; புகழை ஈந்து இறைவன் பெருங்கருணைக்கு என்னை உரிமை யாக்கி ஆட்கொண்டது. இங்ஙனம் உடற்பிணியையும், பிறவிப் பிணியையும் ஒருசேரத் தீர்த்தருளிய ஆரூரன் திருவடிக்கீழ் அருகிருந்து இன்பந்துய்க்கும் விதியினைப் பெருத என் செயலானது, அறம் கையிலிருந்தும் அறமல்லாத மறத்தினை விலை கொடுத்து வாங்குவார் அறிவிலாச் செயலை ஒப்பதாயிற்று என்கின்ருர்.

குறிப்பு:– அறமிருக்க மறம் விலைக்குக் கொள்வாருண்டோ? என்பது பழமொழி. வலிந்து தவங் கிடந்து பெறவேண்டிய ஒன்று அறமாகும்; அதனைவிடுத்து ஒருவர்விலைகொடுத்து மறத்தை

வாங்குவாருண்டா? அஃது அவர்தம் அறி வினத்தையல்லவா காட்டும். அப்பர், சமண சமயத்தைத் தாம் மேற்கொண்டது மறத்தை விலைக்கு வாங்கிய செயலுக்கும், அதனின்றும் தன்னைக்காத்த இறைவன் திருவருள் கிடைத் தற்கரிய அறத்திற்கும் உவமையாக்கிக் கூறு கின்ருர். 'ஆருரர்தம் அருகிருக்கும் விதியின்றி அறமிருக்க மறம்விலைக்குக்கொண்ட வாறே' — என்ற அடிகளில், பலநாட்கள் ஆருரனுகிய சிவனை வழிபடாமல் நாட்களைப் போக்கினேமே என்ற அவர்தம் உள்ளத்தின் ஏக்க உணர்வு வருத்தத்தோடு வெளிப்படக் காண்கின்ருேம். மேலும் பழமொழியைப் பாடலின் இறுதியில் வைத்துக் கையாளும் அப்பர்தம்திறன்போற்றத் தக்கதொன்ருகும்.

**திருவாரூர்:-** சோழநாட்டில் தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள பாடல் பெற்றதலம், மூவர் பாடலும் பெற்ற ஊர், இங்குள்ள கோயிலின் தலைமைபெற்ற மூர்த்தி வன்மீக நாதர், இவர் இருக்குமிடம் திருமூலட்டானம் என்றும் பூங்கோயில் என்றும் வழங்கப்பெறும். உற்சவமூர்த்திக்குத் தியாக ராசர் என்றுபெயர். இங்குள்ள சபை தேவ சபை எனப்படும். இங்குச் சுந்தரர் பரவை நாச்சியாரை மணந்து வாழ்ந்தார். திருத் தொண்டத் தொகையை இங்குப் பாடினுர்.

# 4

## ஒற்றியூரன் அருள்

மனமெனும் தோணி பற்றி
மதியெனும் கோலை ஊன்றிச்
சினமெனும் சரக்கை ஏற்றிச்
செறிகடல் ஓடும் போது
மதனெனும் பாறை தாக்கி
மறியும்போது அறிய வொண்ணா
துனைஉனும் உணர்வை நல்காய்
ஒற்றியூர் உடைய கோவே!

—திருநாவுக்கரசர்
தி: 4: ப: 46: பா. எ. 2.

பொதுவாக மனிதர்களில் எந்த ஒரு செயலையும் மிக நன்றாக ஒழுங்குபெறச் செய்வாரும் உண்டு; அச்செயலை ஒழுங்கின்றிச் செய்வாரும் உண்டு; அச்செயலின் நிலையறிந்து பிழையின்றிச் செய்வாரும் உண்டு, ஏதோ அறியாமை வயப்பட்டுப் பிழையாகச் செயலை ஆற்றுவாரும் உண்டு. இஃது இயற்கை! ஆனால் அறிந்து செய்வோர் அறியாது செய்வாரைச் சினந்து கடுமையாகத் தண்டிப்பதும் உண்டு; ஒரு சில சமயங்களில் அறிந்து செய்வோருடைய சினம் அளவுகடந்து போய்விடும்; அவர்கள் சின வேகத்தில் தங்கள் அறிவை இழந்து நிற்பர்; தாம் அறிந்தவர் என்ற அகந்தையை அடைவர்; நல்லனவற்றை எண்ணிப் பார்க்கும் சிந்தையை இழந்து வாடுவர்; செய்தவை சிறியபிழை என எண்ணாது பிழை செய்தார்க்குப் பெரிய தண்டனையை விதிப்பர்; உலகினர்க்கு ஒவ்வாத செயலைக்கூடச் செய்ய முற்படுவர்; இதனை நாம் வாழ்க்கையில் காணலாம். பொதுவாக ஒருவர் தம் கையை நிலத்தில் ஓங்கி அறைந்தால் அறைந்தவர் எங்ஙனம்

துன்புற்றுக் கேடுறுவரோ, அதுபோன்று சினத்தைப் பொருளாக மதிப்போர் சின மிகுதியினல் அகந்தைகொண்டு அறிவை இழந்து துன்புற்றுக் கேடுறுவர் என்று மிக அழகாகச் சினம் கொண்டோர் தன்மையைக் கூறுவர் திருவள்ளுவர்.சினத்தைப்பொருளென்றுகொண்டவன்கேடு நிலத்தறைந்தான் கைபிழையா தற்று! என்பது குறள்.(307)

இத்தகைய கேட்டினை விளைவிக்கும் சினத்தையும் அகந்தையையும் உள்ளத்தே கொண்டால் அவை வாழ்க்கையினையே அழித்துவிடும்; நாளும் நாம் அடையும் நன்மையையும் இன்பத்தையும் நாவார உண்டு, தீமை யையும் துன்பத்தையும் பரிசாகக் கொடுக்கின்றன; இக் கொடிய சினமும் அகந்தையும் நம்மை வந்து அடையா வண்ணம் காத்துக்கொள்வதற்கு ஏதேனும் வழியுண்டா என்று நாம் அப்பர்பெருமானைக் கேட்போமேயானல், அதற்கு அவர் திருவொற்றியூரனுடைய அருளை நாடுக என்றே கூறுவர். திருவொற்றியூரிலே வீற்றிருந்து அருளும் சிவபெருமானையே நாளும் துதித்து வழிபடுவாயேயானல் அவன் அருள் உன்னைச் சினத்தினின்றும் காக்கும். ஆகவே அவன் அருளை நாடுக என்கின்ருர் அப்பர்.

திருவொற்றியூரில் வீற்றிருந்து அருளும் தெய்வமே! வாழ்க்கையாகிய கடலில் என்மனம் தோணியாக அலை கின்றது; என் அறிவோ அதனை இயக்கும் துடுப்பாக அமைந்திருக்கின்றது. அத்தோணியில் ஏற்றியிருக்கும் சரக்கு கொடிய சினமாகும். இங்ஙனம் மனமாகிய தோணியில் சினமாகிய சரக்கை ஏற்றிக்கொண்டு அறி வாகிய துடுப்பின் உதவியால் வாழ்வாகிய கடலில் செலுத்தினேன். கடலில் ஓடும்பொழுது என்னுள்ளிருக்கும் செருக்கு வெளிப்பட்டுப் பாறையாக வந்து நின்றது. தோணி பாறையில்மோதிச் சிதறிற்று; மனமாகிய தோணி தடைப்படக் கலங்கினேன். கலக்கத்தால் அறிவு ஓடவில்லை; வாழ்வு கேடுற்றது. இவ்வாறு மனங்கலங்கித் துன்புறுங்காலத்தும் எப்பொழுதும் காக்கின்ற உன்னையே

எண்ணி நினைக்கின்ற உணர்வை, துன்பங்களுக்கெல்லாம் கவசம்போன்ற உன் அருளை-எனக்கு நல்கி அருள்வாயாக! என்கின்றார் அப்பர்.

குறிப்பு:- அப்பர் பெருமான் மனத்தைத் தோணிக்கும், அறிவைத் தோணியைச் செலுத்தும் துடுப்பிற்கும், சினத்தைத் தோணியில் ஏற்றும் சரக்கிற்கும், செருக்கைப் பாறைக்கும், ஒப்பிட்டுக் கூறுகின்றார். வெடி மருந்தினை ஏற்றிச் செல்லும் தோணி பாறையால் தாக்குண்டால் எத்தகைய கேட்டினை அடையுமோ அத்தகைய கேட்டினைச் சினத்தையுடைய உள்ளமும் அடையும் என்கின்றார். வாழ்வின் வளத்தைச் சினமும் செருக்கும் உண்ண, வாழ்வு பாழாகா வண்ணம் சிவபெருமானிடத்து ஆழ்ந்து அவனை எண்ணி வழிபடுக என்றும், அவன் அருள்தான் சினம் அணுகா வண்ணம் காக்கும் கவசம் போன்றது என்றும் குறிப்பிடுகின்றார்; மேலும் மனிதன் சினத்தையும் செருக்கையும் அடக்கிவாழும் வாழ்விற்குப் பயில வேண்டு மென்பதனையும் குறிப்பாலுணர்த்துதலைக் காண்க.

மதன் - செருக்கு; மனன் எனும் என்றும், மதமெனும் என்றும் பாடம் கொள்வாரும் உளர்.

மறியும்போது — தடைப்பட்டுக் கலங்கும்போது

## 5

## அருமருந்து

ஒருமருந்து ஆகியுள்ளாய்
உம்பரோ டுலகுக்கெல்லாம்
பெருமருந்து ஆகிநின்றாய்
பேரமு தின்சுவையாய்க்
கருமருந்து ஆகிஉள்ளாய்
ஆளும்வல் வினைகள்தீர்க்கும்
அருமருந்து ஆலவாயில்
அப்பனே! அருள்செயாயே!

—திருநாவுக்கரசர்
பதிகம்: 62 பா. எண்: 3 திருமுறை: 4

மனிதர்கள் நோய்வாய்ப்படுகின்றார்கள்; துன்புறுகின்றார்கள். பொதுவாக நோய்கள் இயற்கை மாற்றங்களினாலும் நம்மைத் தொற்றிக்கொள்கின்றன; நல்வழி அல்லாத வெளிப் பழக்கங்களினாலும் ஒட்டிக்கொள்கின்றன. உண்ணும் உணவுவகை முதலியவற்றினாலும் தோற்றுவிக்கப்படுகின்றன; வழிவழியாகப் பெற்றோர்களிடமிருந்தும் பற்றிக்கொள்கின்றன. இவ்வாறு பல்வேறு வழிகளாலும் பிறப்பிக்கப்படும் நோய்களைப் போக்குதற்கு முதலில் அந்த நோய்களின் தன்மையைப்பற்றி நாம் ஆராயவேண்டும்; பின் அந்த நோயைப் பிறப்பிக்கும் மூலகாரணத்தைக்கண்டு தெளிய வேண்டும்; அதன்பின் அதனைப்போக்கும் வழியறிந்து உடலுக்குப் பொருத்தமான நன்மருந்துகளை உட்கொள்ளவேண்டும்; ஆக நம்மிடத்து வந்த நோயின் தன்மை, அது பிறந்த நிலை, அதனை அறவே நீக்கும் வழி, ஆகியவற்றை எல்லாம் நாம் ஆராய்ந்து ஏற்ற மருந்தினை உட்கொள்ளுவோமேயானால் நோயை அறவே போக்கலாம் என்கின்றார் திருவள்ளுவர். அதனை,

'நோய்நாடி நோய்முதல் நாடி அது தணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்' (பா. எ: 948)

என்று திருக்குறளில் கூறுகின்ருர். இங்ஙனம் ஆராய்ந்து உட்கொள்ளும் மருந்து உடலோடு ஒன்றுகின்றது; நோய்களின் மூலத்தை அறிகின்றது; அதன் தன்மையை மாற்றுகின்றது; நோயைப் போக்கி உடலைக் காக்கின்றது. ஆனல் இந்த மருந்துகளுக்கெல்லாம் மேலாக அருமருந்து ஒன்று இருக்கின்றது என்று கூறுகின்ருர் அப்பர்பெருமான். அதுதான் மதுரைத் திருநகரிலே வீற்றிருந்து அருளும் சொக்கலிங்கப்பெருமான் என்கின்ருர். அவ்வருமருந்தைப் பற்றி அவரே கூறக் கேட்போம்!

ஆலவாய் என்று அழைக்கப்படும் மதுரைத் திருநகரிலே வீற்றிருந்து அருளும் அப்பனே! உடற்பிணியைப் போக்குதற்கு வேறு ஒப்புக்கூற முடியாத ஒப்பற்ற தனி ஒரு மருந்தாகி இருப்பவனும் நீ! தேவர்கள் வாழுகின்ற விண்ணுலகம் முதலிய மற்றைய உலகத்தவருக்குப் பேரமுதமாகி அதன் இன்சுவையால் அவர்கள் இறப்பை நீக்கி இறவாமையாகிய நிலைத்த வாழ்வை நல்கும் பெருமை பொருந்திய மருந்தாகி இருப்பவனும் நீ! அன்பால் உள் நினைந்து உன்அடி வணங்குவார்க்கு அவர்கள் தம் பிறவியாகிய பிணியையே வேரறுத்துப் பிறவாமையை நல்கிப் பிறவிப் பிணிதீர்க்கும் மருந்தாகி இருப்பவனும் நீ! இவற்றுக்கெல்லாம் மேலாக அடியவரை ஆளவரும் எல்லா வகைக்கொடிய வினைகளையும் தீர்த்து உன் திருவடிப் பேரின்பமாகிய சிவமாகும் தன்மையை அருளும் பெறுதற்கரிய அருமைவாய்ந்த அருமருந்தாய் இருப்பவனும் நீயே யாவாய்! எனக்கு அத்தகைய சிவமாகும் தன்மையை அருளி என்னைக் காப்பாயாக! என்கின்ருர்.

குறிப்பு:- பொதுவாக மருந்து என்று சொல்லப்படுவது உடலின் நிலையறிந்து நோயை அகற்றிக்காக்க வல்ல தன்மைவாய்ந்த ஒரு பொருள் என்பர் ஆன்ருேர். மருத்துவர் தரும் மருந்து உடற்

பிணியைமட்டும் போக்க வல்லது; ஆனால் மதுரைத் திருநகரிலே கொலுவிருக்கும் சொக்கலிங்கப் பெருமானாகிய சிவமருந்தானது உடற்பிணியையும் போக்கவல்லது; ஆசை - சினம் - காமம் முதலியவற்றால் பிறக்கும் உளப் பிணியையும் போக்க வல்லது; முன்வினைத் தொடர்பை அறுத்துப் பிறவிப்பிணியைப் போக்கிப் பேரின்பமாகிய சிவமாகும் தன்மையைத் தரவல்லது என்று கூறுகின்றார் அப்பர் பெருமான். மேலும் உடற்பிணிக்கும், இறப்பு எனும் பிணிக்கும், பிறவிப் பிணிக்கும், கொடிய முன்வினைப் பிணிக்கும் முறையே சிவன் திருவருளானது ஒரு மருந்தாகியும், பெருமருந்தாகியும், கருமருந்தாகியும், அருமருந்தாகியும் நோயகற்றிக் காக்கும் என்று கூறிப் போற்றுவதில் கவிதையும் கவின்மிகு பத்தி உணர்வும் கலந்து நிற்கக் காணுகின்றோம்.

**அமுது:-** இறப்பை நீக்கி இறவாமையாகிய நிலைத்த வாழ்வை நல்குவது அமுதமென்க.

**ஆலவாய்:-** பாடல்பெற்ற தலம். திருஞானசம்பந்தர் பாடலும் திருநாவுக்கரசர் பாடலும் பெற்றவை. இத்தலத்திற்குக் கடம்பவனம், நான்மாடக் கூடல், கன்னிபுரம், மதுரை என்று பல பெயர்கள் உண்டு. இறைவன் பெயர் சொக்கலிங்கம்; இறைவி பெயர் மீனாட்சி. இத்தலத்தில் நடராசப்பெருமான் இராசசேகர பாண்டியனுக்காகக் கால்மாறி ஆடிய வெள்ளியம்பலம் இருக்கின்றது. இறைவன் சங்கப் புலவர்களோடு அமர்ந்து தமிழ் ஆராய்ந்த நகரம். தமிழ்ச் சங்கம் கண்ட நகரம். இறைவன் அறுபத்துநான்கு திருவிளையாடல்கள் நிகழ்த்திய இடம். மங்கையர்க் கரசியார்,

குலச்சிறையார் வாழ்ந்த இடம். இத்தலத்திற்குப் பெரும்பற்றப் புலியூர் நம்பி, இயற்றிய திருவால வாயுடையார் திருவிளையாடற் புராணமும், பரஞ்சோதிமுனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணமும், குமரகுருபரர் இயற்றிய மீனாட்சி யம்மை பிள்ளைத்தமிழ், மீனாட்சியம்மை இரட்டை மணி மாலை, மீனாட்சியம்மை குறம், மதுரைக் கலம்பகம், ஆகிய நூல்களும் போரூர்ச் சிதம்பர சுவாமிகள் இயற்றிய மீனாட்சி கலிவெண்பா முதலிய நூல்களும் உண்டு. ஆலவாயுடையார், சேரமான்பெருமாள் நாயனாருக்குத் திருமுகப் பாசுரம் கொடுத்த திருத்தலம் என்பர்.

ஒப்புமை:

மருந்தின னேபிற விப்பிணிப்
பட்டு மடங்கினர்க்கே!

—மாணிக்கவாசகர்

நீத்தல் விண்ணப்பம். பா. எ: 18

வீர மருந்தென்றும்
விண்ணோர் மருந்தென்றும்
நாரி மருந்தென்றும்
நந்தி அருள்செய்தான்
ஆதி மருந்தென்று
அறிவார் அகலிடஞ்
சோதி மருந்திது
சொல்லவொண் ணாதே!

—திருமூலர்

திருமந்திரம்: பா. எ. 830

நல்ல மருந்திம் மருந்து—சுக
நல்கும் வைத்திய நாதமருந்து
பிறப்பை ஒழிக்கு மருந்து—யார்க்கும்
பேசப்படாத பெரிய மருந்து
இறப்பைத் தவிர்க்கு மருந்து—என்னுள்
என்றும் மதுரித் தினிக்கு மருந்து (நல்ல)

அம்பலத் தாடு மருந்து—பர
மானந்த வெள்ளத் தழுத்து மருந்து
எம்பல மாகு மருந்து—வேளூ
ரென்னுந் தலத்தி லிருக்கு மருந்து (நல்ல)

கோதிலா தோங்கு மருந்து—அன்பர்
கொள்ளைகொண் டுண்ணக் குலாவுமருந்து
மாதொரு பாக மருந்து—என்னை
வாழ்வித்த வென்கண் மணியாமருந்து!

—இராமலிங்கஅடிகள்
திருவருட்பா: இரண்டாம் திருமுறை

## 6
## சிரித்ததேன்!

கள்ளனேன் கள்ளத் தொண்டாய்க்
　　காலத்தைக் கழித்துப் போக்கித்
தெள்ளியேன் ஆகி நின்று
　　தேடினேன் நாடிக் கண்டேன்
உள்குவார் உள்கிற் றெல்லாம்
　　உடன்இருந்து அறிதி என்று
வெள்கினேன் வெள்கி நானும்
　　விலாவிறச் சிரித்திட் டேனே!

—திருநாவுக்கரசர்
தி: 4. ப; 75 பா. எ. 3

வாழ்க்கையில் நாம் ஒருவருக்கும் தெரியாதவாறு ஒரு செயலைச் செய்ய முற்படுவோம்; ஆனால் தெரியாதவாறு செய்ய முயன்ற அச்செயல் யாராவது ஒருவருக்கு எப்படியோ தெரிந்துவிட்டால் நம் திறமையைப் பற்றிய நாணம் நமக்கு மேலிடுவது இயற்கையல்லவா! இம்மாதிரி தம் வாழ்வில் நிகழ்ந்த நிகழ்ச்சி ஒன்றை அப்பர் குறிப்பிட்டுள்ளார். அப்பர் பெருமான் இறையருளை நாடினார்; இறைவனைத்தேடினார்; தலங்கள் தோறும் சென்றார்; ஆனால் பிறருக்குத் தெரியாமல் இறைவனைத் தேடியும் காணவில்லை; பின் உணர்வு மேலிட இறைவன் தன் உள்ளத்தினுள்ளே யல்லவா இருக்கிறான் என்பதை உணர்ந்தார்; உடனே நாண முற்றார்; இச்செயலை அவரே நமக்கு உணர்த்துவதை அறிவோம்.

இறைவா! நான் குற்றம் உடையவன்; பொய்யான வாழ்வையே தொண்டாகக் கொண்டு கள்ளத்தன்மை உடையவனாய்க் காலத்தைக் கழித்துவந்தேன்; பின் ,காலப் போக்கில் மயக்கம் தெளிந்தேன், தெளிவுற்றபின் இறைவனாகிய உன்னைத் தலங்கள் பலசென்று தேடினேன்; உன் அருளால் உன்னை நாடினேன்; நாடி உன்னைக்

கண்ணாரக் காணும் பேற்றினைப் பெற்றேன்; ஆனால் பின்; நான்சிந்தித்தேன்; ஊரெலாம் சென்று உன்னைத் தேடுவானேன்? உன்னையே நினைந்து உருகுபவர் உள்ளத்தில் எல்லாம் நீளப்பொழுதும் உறைந்து, அவர்தம் செயலை அறிபவனாயிற்றே என்று எண்ணினேன்; உடனே வெட்கப் பட்டேன். நாணத்தால் என்னுடைய விலா எலும்பு ஒடியுமாறு என்செயலை நினைந்து சிரித்து நின்றேன்! என்கிறார்.

குறிப்பு:- 'அவன் அன்றி ஓர்அணுவும் அசையாது' என்பர் ஆன்றோர். இறைவனைப்பற்றி எண்ணுகின்ற எண்ணத்திலும் இறைவன் வீற்றிருந்து நல்வழிப்படுத்துகின்றான் என்ற உண்மையை, ஏதோ வெளியில் இறைவனைத் தேடிப் பின் உள்ளத்தினுள்ளே கண்டு பேதைமையால் நாணினேன் என்று கூறுமுகத்தான் பெற வைக்கிறார் அப்பர் பெருமான். மேலும் இறைவனை ஊர்தோறும் சென்று தேடுவதில் பயனில்லை என்றும் உயிர்கள் செய்யும் நன்மை தீமைகளில், அவ்வுயிர்களின் உள்ளத்தினுள்ளே இறைவன் நின்று அறிவுறுத்துகின்றான் என்றும், அதனை நம்பாதார் பேதைமை வயப்பட்டவர் என்றும் அறிவுறுத்துகின்றார். எல்லாம் இறைவன் செயலன்றோ!

ஒப்புமை:

உள்ளத்தே உறையும் மாலை
உள்ளுவான் உணர்வொன் றில்லாக்
கள்ளத்தேன் நானும் தொண்டாய்த்
தொண்டுக்கே கோலம் பூண்டு
உள்ளுவார் உள்ளிற் றெல்லாம்
உடன்இருந்து அறிதி என்று
வெள்கிப்போய் என்னுள் ளேநான்
விலாவிறச் சிரித்திட் டேனே!

–தொண்டர் அடிப்பொடி ஆழ்வார்.
திருவாய்மொழி: திருமாலை, பா. எ, 34

# 7

## ஆடும்அழகர்

குனித்த புருவமும் கொவ்வைச்செவ்
வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம் போல்
மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற்
பாதமும் காணப்பெற்ருல்
மனித்தப் பிறவியும் வேண்டுவ
தேயிந்த மாநிலத்தே!

– திருநாவுக்கரசர்
தி. 4. ப. 81. பா. எ: 4

இவ்வுலகம் எல்லாம் அழகுமயமாகவே தோன்றுகின்றது; அழகு என்ற பொருள் எல்லோரையும் அடிமைப்படுத்தி விடுகின்றது; குழந்தை முதல் கிழவர்வரை யாவரையும் மயக்கி ஆட்சிபுரிகின்றது; விலங்கினங்களையும் மற்றைய இனங்களையும் தன் வயப் படுத்துகின்றது; இவ்வாறு ஆட்சிபுரியும் அழகிற்கு அதற்கென்று தனி உருவம் ஏதேனும் உண்டா என்ருல் இல்லை; ஆனல் உருவமற்ற இவ்வழகு ஒரு உருவத்தோடும், ஒருவடிவத்தோடும் கலக்குமேயாளுல் உருவமும், வடிவமும் பெற்று முழுமையை அடைகின்றது; முழுமை பெற்ற அழகு நிலைத்த சத்தியைப் பெறுகின்றது; காண்பார்தம் உள்ளங்களைக் கவர்கின்றது; பின் தன்பால் ஈர்க்கின்றது; ஆட்சி புரிகின்றது; இங்ஙனம் நம்மை ஆட்கொண்ட அழகைக்கண்டு நாம் நம்மை யறியாமலே வணங்குகின்ருேம்; வழிபடத் தொடங்குகின்ருேம். அப்பர்பெருமான் தில்லைத் திருநகரை அடைந்தார்; அங்கு அழகு நடமாடக்கண்டார். உலகம் வாழ அங்கு ஆனந்தத் தாண்டவம் புரியும் நடராசப்

பெருமான் திருவழகில் மயங்கினர்; அழகின் அகண்ட சக்தியில் மூழ்கினர்; தன்னைமறந்தார்; அதில் மறைந்து நிற்கும் அழகாம் இறையைக் கண்டார்; அழகு வடிவான ஆண்டவனைப்பற்றி மக்களை நோக்கிப் பேசுகின்ருர்.

ஆடும் அழகரின் திருமுக அழகை என்ன சொல்வேன்! அதில் வளைந்த புருவ அழகையும், கோவைப் பழம்போன்ற சிவந்த அழகுத் திருவாயில் அரும்பும் புன் சிரிப்பழகையும், குளிர்ந்த திருச்சடையழகையும், பவளம் போன்ற செம்மைத் திருமேனியில் பால்போன்ற வெண்மைத் திருநீறு திகழ் கின்ற திருஅழகையும், காண்பார்க்கும் கைதொழுவார்க்கும் எப்பொழுதும் எந்நிலையிலும் இனித்துப் பேரின்ப அருளைத் தருகின்ற எடுத்த பொற்பாத அழகையும் உண்மையில் காணப்பெறுவதற்காகவே இவ்வுலகப் பிறவியாகிய மனிதப் பிறவியும் வேண்டியதுதான்! என்கின்ருர்.

குறிப்பு:- இவ்வுலகத்தே பிறக்கும் பிறவியானது நோயைப் போன்றதாகும்; அப்பிறவி நோயை நீக்கிச் சிவகதி பெற வேண்டும் என்று இதுகாறும் இறைவனிடம் பிறவாமையை வேண்டிவந்தார் அப்பர் பெருமான். ஆனல், தில்லையில் ஆடும் நடராசப் பெருமானின் பேரழகைக் கண்ட தும் அழகனின் அழகை, அவன் ஆடும் நடன அழகை, எடுத்த பொற்பாத அழகைக் கண்டு கண்டு பேரின்பமுறுவதற்கு இவ்வுல கத்தே பிறக்கும் மனிதப் பிறவியும் வேண்டுவதுதான் என்று ஈண்டு வலியுறுத்திக் கூறுகின்ருர். இவ்வாறு வலியுறுத்திக் கூறு வதின்மூலம் அழகே இறை, இறையே அழகு என்ற தத்துவ உண்மையைக் கண்டு தரு கின்ருர் அப்பர். இவ்வுலகப் பிறப்பிற்கும் கலைப் பிறப்பிற்கும் - மனித நாகரிகப் பண்பிற்கும் அழகே ஆதாரம் என்றும், நம் ஐம்புலன்களை யும் ஒருசேர ஆட்கொள்ளும் அவ்வழகே

ஈண்டு நடனத் திருக்கோலத்தில் காணப்பெறுகின்றது என்றும், நடராசப் பெருமானின் முடிமுதல் அடிவரை காணுகின்ற அழகின் முழுமையைச் சுட்டி அவ்வழகைப் போற்றி வணங்குகின்ருர் அப்பர். ஆனல் இப்பாடலில் அப்பர் பெருமான் இறைவனை அழகன் என்று சுட்டவில்லையே? உண்மையில் அழகனுகவே கண்டாரா என்ற ஐயமும் நமக்கு எழும். உண்மையில் ஆடும் பெருமானை அழகனுகவே அப்பர் கண்டு போற்றினர் என்பதற்கு அகச் சான்றுகள் உள. அவர்பாடிய கோயில் திருப் பதிகத்தில்—

மஞ்சடை சோலைத் தில்லை
மல்குசிற் றம்பலத்தே
அஞ்சொலாள் காண நின்று
**அழக நீ ஆடுமாறே!**

(தி. 4; ப 23: பா. எ. 9)

என்றும், திருப்புள்ளிருக்கு வேளூர்ப் பதிகத்தில்–

அறையார்பொற் கழல்ஆர்ப்ப
அணியார் தில்லை
அம்பலத்துள் நடமாடும்
**அழகன்** தன்னை

(தி: 6: ப: 268: பா. எ: 6)

என்றும், திருக்குடந்தைக் கீழ்க்கோட்டத் திருப்பதிகத்தில்-

முடிகொண்ட வளர்மதியு மூன்ருய்த் தோன்றும்
முளைஞாயி றன்னமலர்க் கண்கள் மூன்றும்
அடிகொண்ட சிலம்பொலியும் அருளார் சோதி
அணிமுறுவற் செவ்வாயும் **அழகாய்த்** தோன்ற

(தி. 6. ப. 289 பா எ. 6)

என்றும் வரும் பகுதிகளில் தில்லை அம்பலத்துள் ஆடும் பிரானை அழகராகவே கண்டு போற்றுகின்றார் அப்பர் எனக்கொள்க! மேலும் அப்பர் அழகரைப் பாட எடுத்தாலும் மொழியழகும் நம்மை மயக்குகின்றது. கொவ்வைச் செவ்வாய்- குமிண்சிரிப்பு- பனித்த சடை- இனித்த முடைய எடுத்த பொற்பாதம் என்னும் சொற்கள் நம்மைப் பெரிதும் கவர்கின்றன. நம்மை மட்டுமென்ன?அக்காலத்து மக்களும் அச்சொற்கவர்ச்சிக்கு ஆட்பட்டனர் என்பதை ஔவை துரைசாமிப்பிள்ளை யவர்கள் கீழ்க்கண்டவாறு கூறுவர்.

'இனித்த முடைய எடுத்தபொற்
பாதமுங்கா ணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவ
தேயிந்த மாநிலத்தே

என்றாராக, எடுத்த பொற்பாதம் என்ற தொடரை நயந்த சான்றோர் ஒருவர் தில்லையில் ஊர்க்கணக்கராய் இருந்திருக்கின்றார்; இதனை "இவை அருளால் ஊர்க்கணக்கு எடுத்த பொற்பாதப் பிரியன் எழுத்து" எனத் தில்லைக் கோயிற் கல்வெட்டுக் கூறுவது காணலாம். இவ்வாறு திருநாவுக்கரசர் அருளிய திருப்பதிகத் தொடர்கள் பல ஆடவர்க்கும் மகளிருக்கும் இனிய பெயர்களாய் அழகு செய்திருக்கும் காட்சி கல்வெட்டுக்களில் மணிபோல் ஆங்காங்குக் கிடந்து இன்பஞ் செய்கின்றன' (சைவ இலக்கிய வரலாறு பக். 176)

**சிதம்பரம்:** தமிழ் நாட்டில் தென்னார்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்தது. மூவர் பாடல் பெற்ற தலம். சிற்றம்பலம், புலியூர், தில்லை, சித்திரகூடம், கோயில்முதலிய பெயர்களைக் கொண்டது. இங்கு மாணிக்க வாசகர் திருச்சிற்றம்பலக் கோவையும், சேரமான் பெருமாள் நாயனார் பொன்வண்ணத் தந்தாதியும் பாடியுள்ளனர். அனபாய சோழன் காலத்தில் சேக்கிழார்

பெரியபுராணம் பாடி அரங்கேற்றினர், மற்றும் கல்லாடர், திருமாளிகைத் தேவர், சேந்தனர், கண்டராதித்தர், கருவூர்த் தேவர், பூந்துருத்தி நம்பி காடநம்பி, பட்டினத்தார், அருண கிரிநாதர், சேரமான் பெருமாள், உமாபதி சிவம் முதலிய பலர் சிதம்பரத்தைப் பாடி யுள்ளனர். பெரிய புராணம், சிதம்பர புராணம். புலியூர்ப்,புராணம்,தில்லைக் கலம்பகம்,சிதம்பரச் செய்யுட்கோவை, சிதம்பர நாதர் பதிகம், புலியூர் வெண்பா, சோழமண்டல சதகம், கந்த புராணம் முதலிய நூல்களில் இத்தலத்தின் பெருமைகள் கூறப்பட்டுள்ளன.

இங்குக் கனகசபை என்ற அரங்கு சிறப்பானது. பரத நாட்டியச் சாத்திரப்படி 108 வகை நடனங்களைச் சிவபெருமான் ஆடினர் என்பர்.

இங்கு நம்பியாண்டார் நப்பியால் தேவாரத் திருப் பதிகங்கள் எடுக்கப்பெற்றன.

இங்கு வைணவப் பதியாகிய கோவிந்தராசப் பெருமாளின் திருச்சித்திரக்கூடம் ஆழ்வார்களால் பாடப் பெற்றது.

—கலைக்களஞ்சியம் தொ: 2: பக். எ. 658.

**ஒப்புமை:—**

ஆதியன் ஆதிரையன்
அனல்ஆடிய வார் அழகன்

—திருஞானசம்பந்தர்
தி. 3: ப. 319: பா. எ. 1

அருமையில் எளிய
அழகே போற்றி!

—மாணிக்கவாசகர்
போற்றித்திருவகவல்; அடி. எ 126

அரவம் ஆட அனல்கை
ஏந்தி அழகன் ஆடுமே!

—திருவாலி அமுதனர்
தி: 9 திருவிசைப்பா; கோயில்; பா. எ. 6.

## 8

## தீவினை

சுற்றிக் கிடந்துஒற்றி யூரன்என்
    சிந்தை பிரிவறியான்
ஒற்றித் திரிதந்து நீயென்ன
    செய்தி உலகமெல்லாம்
பற்றித் திரிதந்து பல்லொடு
    நாமென்று கண்குழித்துத்
தெற்றித் திருப்பதல் லால்என்ன
    செய்யுமித் தீவினையே!

—திருநாவுக்கரசர்
திருமுறை: 4.பதிகம் 86 பா. எண்: 9

நம்முடைய வாழ்க்கையிலே இன்பமும் எழுகின்றது; துன்பமும் தொடருகின்றது. இன்பம் எழும்பொழுது வரவேற்கின்றோம்; மகிழ்ச்சியடைகின்றோம்; பயனடைகின்றோம். துன்பம் தொடரும்பொழுது அஞ்சுகின்றோம்; நடுங்குகின்றோம்; அதன் ஆட்சிப்பிடியில் சிக்கி அல்லல் படுகின்றோம். இவ்வாறு வாழ்க்கையில் இன்புறுவதை நல்வினை என்றும் துன்புறுவதைத் தீவினை என்றும் பெரியோர் சொல்லுவர்! மேலும் முற்பிறப்பில் தீமையான செயல்களைச் செய்தமையின் இப்பிறப்பில் அஃது தீவினையாயிற்று என்றும் கூறுவர்! பொதுவாகத் தீவினை வந்து நம்மைத் தாக்கும்பொழுது துன்பத்தையடைகின்றோம்; அதைப் போக்குதற்கு வழிதேட முற்படுகின்றோம். தீவினை வந்து நம்மைச் சாடாமலிருப்பதற்கு வழி என்ன என்று நாம் அப்பர் பெருமானைக் கேட்போமேயானால் அவர் உடனே விடை பகருவார். திருஒற்றியூரிலிருக்கும் சிவபெருமானை நினைந்து வழிபாடு செய்வாயாக; அவன் புகழை நாளும் பாடுவாயாக; தீவினை ஒருபோதும் உன்னை அணுகாது; இஃது உறுதி என்று கூறுகின்றார். அப்பர் பெருமானே தீவினையை நோக்கி, ஏ தீவினையே! நீ என்னைச்

சுற்றிக்கொண்டிருப்பதில் பயனில்லை; ஏனெனில் எல்லாம் வல்ல சிவபெருமான் என் உள்ளத்தினுள் உள்ளான்; ஆகவே மரியாதையாக உன் நடையைக்கட்டு; ஓடுக என்று அதனை முன்னிலைப்படுத்திக் கூறுகின்றார்.

தீவினையே! திருவொற்றியூரில் வீற்றிருந்து அருளும் சிவபெருமான் என்நெஞ்சகத்தே கொலு வீற்றிருக்கின்றான். அவன் என் அகத்திலும் நினைவிலும் உறைந்து எப்பொழுதும் என்னையே சுற்றிக் காத்துக்கொண்டிருக்கின்றான். ஆனால் நீயோ உலகமெல்லாம் நான் போகும் இடந்தோறும் ஒற்றனைப்போல என்னைத் தொடர்ந்து வருகின்றாய்; வந்து என்னைப் பற்றிக்கொள்ளப் பார்க்கின்றாய்; முடியுமா? பற்ற முடியாத காரணத்தால் துன்புற்றுப் பல்லைக் கடிக்கின்றாய்; நாக்கை மெல்வதுபோலத் துருத்துகின்றாய்; குழிவிழுந்த உன் கண்களால் உருட்டி விழிக்கின்றாய்; என்னைப் பார்த்து அலைக்கழித்து வாய் கொன்னிக் காட்டுவதைத் தவிர வேறு உன்னால் என்ன செய்யமுடியும்? வெறுப்பைக் காட்டமுடியுமேதவிரத் தீவினையாகிய உன்னால் வேறு ஒன்றுமே செய்யமுடியாது! என்கின்றார்.

குறிப்பு:- எப்பொழுதும் இறைவனை மனத்தால் சிந்திக்க வேண்டும்; நாள்தோறும் அவன்புகழ் பாட வேண்டும். இவ்வாறு இறைவனை எண்ணியும் அவன் நாமம் சொல்லியும் வழிபடுவார்களுக்கு, அவர்கள்தம் அறியாமையினால் விளைகின்ற இரு வினைகளும் வந்துசேரமாட்டா என்று கூறுகின்றார் திருவள்ளுவர். “இருள்சேர் இருவினையும் சேரா இறைவன் பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு”— கடவுள் வாழ்த்து; பா. எ. 5 —என்பது திருக்குறள். குறளறிந்த பெருமானாகிய அப்பர் பெருமானும் நாளெல்லாம் சிவனை நினைந்து அவன் நாமம் நவிற்றி மக்கள் வழிபடுவார்களேயானால், இத்தீவினை வந்து அவர்களை என்ன செய்துவிடமுடியும்? என்று கேட்கின்றார். கண்ணை உருட்டிப் பல்லைக்

கடித்து நாக்கைத் துருத்தி வாயலைக்க முடியுமே தவிர, அதனுல் வேறு ஒன்றுமே செய்ய முடியாது என்றும் உறுதியாகக் கூறுகின்ருர். மேலும், இறைவன் பேரருளை மிக எளிதாக அடைவதற்குரிய சிறந்தவழி பூசை செய்வதாகும். தமிழ் மக்களுக்குரிய பூசை இறைவன் புகழ்நிறைந்த திருமுறைத் திருப்பாடல்களைக் கூறி மலர் தூவி வழிபாடு செய்வதாகும். இங்ஙனம் அவன் புகழ்போற்றும் பொற்பாடல்களை மனமார உணர்ந்து நாவார நவின்று மக்கள் வழிபட்டால் அவர்கள் வாழ்வு நலமுறும் என்ற திருக்குறிப்பினை மிக உறுதியாகக் கூறுகின்ருர் அப்பர் பெருமான். 'சொற்குறுதிக்கு அப்பரைச் சொல்'—என்பது முதுமொழியல்லவா?

**ஒப்புமை:**

(1)

அல்லல் என்செயும்?
அருவினை என்செயும்?
தொல்லை வல்வினைத்
தொந்தம்தான் என்செயும்?
தில்லை மாநகர்ச்
சிற்றம் பலவனுர்க்கு
எல்லை இல்லதோர்
அடிமைபூண் டேனுக்கே!

—திருநாவுக்கரசர் தி. 5. ப; 115: பா. எ. 4

(2)

உற்ற உறுபிணி நோய்காள்!
உமக்குஒன்று சொல்லுகேன் கேண்மின்
பெற்றங்கள் மேய்க்கும் பிரானுர்
பேணும் திருக்கோயில் கண்டீர்
அற்றம் உரைக்கின்றேன் இன்னம்
ஆழ்வினைகாள்! உமக்கு இங்கோர்
பற்றில்லை கண்டீர் நடமின்
பண்டன்று பட்டினம் காப்பே!

—பெரியாழ்வார்; திருமொழி பா. எ. 448

# 9

## திருவடிப் பயன்

சிந்திப் பரியன; சிந்திப்
பவர்க்குச் சிறந்துசெந்தேன்
முந்திப் பொழிவன; முத்தி
கொடுப்பன: மொய்த்திருண்டு
பந்தித்து, நின்ற பழவினை
தீர்ப்பன; பாம்புசுற்றி
அந்திப் பிறையணிந்து, ஆடும்,ஐ
யாறன் அடித்தலமே!

—திருநாவுக்கரசர்
திருமுறை: 4; பதிகம் 92; பா, எ. 1

நம்முடைய ஞான ஆசிரியர்கள் இறைவனைக் காட்டிலும் இறைவனுடைய திருவடியைப் பெரிதும் போற்றுவார்கள்; ஆராத காதல் கொள்வார்கள். நாவுக்கரசருக்கோ சொல்ல வேண்டியதேயில்லை. ஈடு இணையில்லா ஏற்றமிகு இறைவன் திருவடியில் தீராக் காதல் கொண்டவர்; அவர் திருவையாற்றிற்கு வந்தார். வந்து அடி பணிந்து அங்கு விற்றிருந்தருளும் இறைவன் திருவடி என்ன என்ன பேற்றை நமக்கு அருளும் என்பதைக் கூறுகின்றார்.

திருவையாற்றில் கோயில்கொண்டு ஆடும் பிரானாகிய இறைவன் பாம்பையும் மாலைக் காலப் பிறையையும் அணியாகப் பூண்டவன். அவனுடைய திருவடிகளோ யாரும் எளிதில் சிந்திக்க முடியாதனவாயுள்ளன. ஒருவாறு காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கிச் சிந்தித்து விட்டாலோ மிக விரைவில், அவா-அறியாமை-பிறவித் துன்பம் முதலிய இடர்களைப் போக்கிச் செம்மை பெறச் செய்யும்; தேனைப் பொழியும்; பிறவி நிலையைக் களைந்து வீட்டு நெறியைக் கொடுக்கும்; நெருக்கமாக அறியாமை இருட்டிலே தள்ளிக்

கட்டுப்படுத்தி உழலவைக்கும் பழைய வினையை விலக்கிக் காக்கும் என்கிறார்,

**குறிப்பு:-** இறைவன்பால் கொண்ட அப்பர் தம் பத்தி உள்ளம் அவன் திருவடிச் சிறப்பால் பெற்ற பெறுதற்கரிய பேற்றை எண்ணி இறும்பூதெய்துகிறது.

எல்லாம் நல்கும் இறைவன் திருத்தாளைப் பற்றிக் கொண்டால் இறைவன் திருவருள் தானே சுரக்கும் என்ற குறிப்பினையும் ஈண்டு நல்குகிறார் அப்பர் பெருமான். அதனாலன்றோ, பின்னர் அப்பர் திருவாக்காகத் 'திருவடித் திருத்தாண்டகம்' எழுந்தது போலும்!

இப்பாடலைத் தொடர்ந்து இவர் பாடியிருக்கும் திருவிருத்தங்கள் அத்தனையும் கற்கண்டே!

**திருவையாறு:-** மூவர் பாடல்பெற்ற தலம். சோழ நாட்டுத் திருப்பதிகளில் ஒன்று. தஞ்சாவூருக்கு வடக்கே ஏழுகல் தொலைவிலுள்ளது. வடவாறு, வெண்ணாறு, வெட்டாறு, குடமுருட்டி, காவிரி என்ற ஐந்து ஆறுகளை உடையதாகையால் ஐயாறு எனப் பெயர்பெற்றதென்பர். உயர்வு கருதித் திரு சேர்த்துத் திருவையாறு என வழங்குகின்றது.

**ஒப்புமை:**

பிறவிப் பெருங்கடல்
நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்.

—திருவள்ளுவர்; குறள்; பா. எ; 10

சார்ந்தாரை எவ்விடத்தும்
காப்பனவும் சார்ந்தன்பு
கூர்ந்தார்க்கு முத்தி
கொடுப்பனவும்—கூர்ந்துள்ளே
மூளத் தியானிப்பார்
முன்வந்து நிற்பனவும்
காளத்தி யார்தங்
கழல்!

— நக்கீரர்

தி. 11. கயிலைபாதி காளத்திபாதி பா. எ. 60

பிறவா திருக்க வரம்பெறல்
வேண்டும்; பிறந்துவிட்டால்
இறவா திருக்க மருந்துண்டு
காண்;இது எப்படியோ
அறமார் புகழ்த்தில் லைஅம்பல
வாணர் அடிக்கமலம்
மறவா திருமன மேஅதுகாண்
நன்ம ருந்துனக்கே!

—பட்டினத்தார்

திருப்பாடல் திரட்டு; திருத்தில்லை; பா. எ: 16,

# 10

## ஊனமிலா ஒருவன்

வானம் துளங்கிலென்? மண்கம்பம்
ஆகிலென்? மால்வரையும்
தானம் துளங்கித் தலைதடு
மாறிலென்? தண்கடலும்
மீனம் படிலென்? விரிசுடர்
வீழிலென்? வேலைநஞ்சுண்
டூனம்ஒன் றில்லா ஒருவனுக்
காட்பட்ட உத்தமர்க்கே!

—திருநாவுக்கரசர்
திருமுறை: 4. பதிகம் 113 பா. எண். 8

இயற்கை மனிதனுக்குத் தந்த பெரிய செல்வம் 'நம்பிக்கை'. நம்பிக்கையின் உதவியாலேதான் மனித வாழ்க்கை முழுவதும் வளர்ச்சியடைவதை நாம் பார்க்கலாம். குழந்தை நிலையில் மனிதன் தாயிடத்து நம்பிக்கை வைக்கின்றான்; வளர்ந்ததும் தந்தையிடத்து நம்பிக்கை வைக்கின்றான்; அறிவைப் பெறுகின்ற காலத்தில் ஆசிரியனிடத்தில் நம்பிக்கை வைக்கின்றான்; மணம்முடிந்த பின் மனைவியிடத்தில் நப்பிக்கை வைக்கின்றான்,; பின் தொழில் நடத்துங்காலத்து நண்பர்களிடத்தில் நம்பிக்கை வைக்கின்றான். இவ்வாறாகப் படிப்படியாக மனித வாழ்வு முழுவதிலும் 'நம்பிக்கை' என்ற தத்துவம் ஊடுருவி நின்று உதவக் காண்கின்றோம். ஆனால் இவற்றுக் கெல்லாம் மேலாக எக்காலத்தும் இறைவனிடம் உன்னுடைய நம்பிக்கையை வைத்து வாழ்வாயாக என்று கூறுகின்றார் அப்பர் பெருமான். சிவன் என்னும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மானாகிய சிவன்மாட்டு முழு நம்பிக்கையோடு உன்னை ஒப்படைத்து வாழ்க என்று வாழ்த்துகிறார் நாவுக்கரசர்.

பாற்கடல் கடைந்த காலத்துப் பெருநஞ்சினை உண்டான் சிவபெருமான். அவன் எந்த விதமான குற்றமும் இல்லாத தூயவன். அத்தூயவனுன சிவன் ஒருவனிடத்தே முழுநம்பிக்கை வைத்து அவனுக்கு ஆட்பட்டு நிற்கும் உத்தமர்களுக்கு எக்கவலையும் வேண்டுவதில்லை; ஒரு குறையும் வராது. அவர்களுக்கு மேலேயுள்ள இந்த வானமே அசைந்தால்தான் என்ன? இல்லை; இந்தப் பூமியே ஆடினுல்தான் என்ன? இந்தப் பெரிய மலைகளே தம் இடம் பெயர்ந்து தாறுமாருக ஆகிவிட்டால்தான் என்ன? குளிர்ச்சி பொருந்திய இந்தக் கடலில் மீன்வகைகளே இல்லாமல் மடிந்துவிட்டால்தான் என்ன? இந்த உலகிற்கு ஒளி நல்கும் கதிரவனும், மதியும் மேலிருந்து கீழே விழுந்தால்தான் என்ன? எதற்கும் அசையாது இறைவனை நம்பியிருப்பர்! என்கிருர்.

குறிப்பு:- குழந்தை முழுநம்பிக்கையோடு தாயை நத்துவது போல இறைவனிடத்துத் தன்னை ஒப்படைத்து இறைவனை நம்பவேண்டுமென்கிருர் அப்பர். சிவனை நம்பு; ஒரு குறையும் வராது என்பதைப் பலப்பல பேரதிர்ச்சி தரும் இயற்கை மாற்றத்தைக் கூறுவதன்மூலம் உணரவைக்கிருர். பழத்தில் சுவை கலந்தாற்போன்று, பாடலில் சிவனிடத்துக்கொண்ட பத்தி உணர்வு கலந்து நிற்கக் காண்கின்ருேம். இவ்வுலகையே சிவமயமாகக் கண்டு போற்றியவர் அப்பர். 'எல்லாம் சிவன் என்ன நின்ருய் போற்றி' என்பது அப்பர் திருவாக்கு!

ஒப்புமை:—

வான் நின்று இடிக்கில்என்
மாகடல் பொங்கில்என்
கான்நின்ற செந்தீக்
கலந்துடல் வேகில்என்
தான் ஒன்றி மாருத
சண்டம் அடிக்கில்என்
நான்ஒன்றி நாதனை
நாடுவன் நானே

—திருமூலர்

தி: 10: திருமந்திரம் பா. எ. 2806

# 11

## ஞானகுரு

கருவ னேகரு
 வாய்த்தெளி வார்க்கெலாம்
ஒருவ னேஉயிர்ப்
 பாய்உணர் வாய்நின்ற
திருவ னேதிரு
 விழி மிழலையுள்
குருவ னே!அடி
 யேனைக் குறிக்கொளே!

—திருநாவுக்கரசர்,
தி: 5 ப. 127: பா. எ. 5.

உலகில் எத்துணையோ வகையான பொருள்கள் தோன்றுகின்றன; வளர்கின்றன; பிற பொருள்களோடும் கலக்கின்றன; தோன்றிய நிலையினின்றும் மாறுபாட்டை அடைகின்றன; இஃது இயற்கை. கரும்பு இருக்கின்றது; அக்கரும்பைப் பிழிந்தால் சாறு கிடைக்கின்றது. கரும்பா யிருந்த நிலை மாறிவிட்டது; சாருகக் காட்சியளிக்கின்றது; பின் சாற்றைப் பிற பொருளோடு சேர்த்துப் பாகாகக் காய்ச்சும் பொழுது சாருக இருந்தநிலை மாறிவிடுகின்றது. கட்டியாகக் காட்சியளிக்கின்றது. இவ்வாறு கரும்பானது தான் தோன்றிய நிலையினின்றும் மாறுகின்றது; பல்வேறு உருவங்களாகத் திகழ்கின்றது; ஆனல் எத்தனை உருவங் களாக மாறினும் அதனுள் திகழும் இனிப்புச்சுவை உயிராக நின்று மாருவண்ணம் சுவையூட்டக் காண்கின்றேம் அல்லவா! இம்மாதிரிப் பொருள்கள் தோன்றி வளரலாம்; அவற்றேடு மனிதனின் கற்பனை கலக்கலாம்; எத்தனையோ விதவிதமான வடிவங்களை அப் பொருள்கள் பெறலாம்; இருந்தாலும் நாம் அவற்றின்

தோற்றத்தைக் கண்டு மயங்கக் கூடாது; அத் தோற்றக் கவர்ச்சியில் உள்ளத்தை இழக்கக் கூடாது; அப் பொருள் களின் உள்ளே உயிராகத் திகழும் உண்மையை உணர வேண்டும்; அவ்வாறு உண்மையை உணர்வது தான் உண்மை அறிவாகும் என்று கூறுகின்றார் திருவள்ளுவர்; இதனை,

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு (பா; எ: 355)

என்ற திருக்குறளால் கூறுவர், இங்ஙனம் உண்மைப் பொருளை அறிவதற்கு யாராவது ஒருவர் வழிகாட்ட வேண்டுமல்லவா? நம் அறியாமையை அகற்றி அறிவைத் தெளிவிப்பவரை நாம் ஞானகுரு என்று தானே அழைக் கின்றோம். அங்ஙனம் ஆசிரியராக-ஞானகுருவாக—வருபவர் முதலில் நமக்குப் பொருள்களின் தன்மையைப் பற்றிக் கூறுகின்றார்; பின் அப்பொருள்களின் உள்ளே உறைந்து நிற்கும் உண்மையைக் காட்டுகின்றார்; உண்மையை உணர்த்துவதின் மூலம் எல்லாவற்றிற்கும் மூலப் பொரு ளாம் இறை அருளை வழங்குகின்றார். இவ்வாறு அருளை வழங்கும் ஞானகுரு வடிவமாகத் திருவிழிமிழலையில் வீற் றிருக்கும் சிவபெருமானைக் காணுகின்றார் அப்பர் பெருமான். அவ்விறைவனையே முன்னிலைப் படுத்தி அவர் கூறுவதைக் கேட்போமாக!

உலகத்தே எத்துணையோ வகையான பொருள்கள் தோன்றுகின்றன; அப்பொருள்கள் எத்துணையோ தோற்ற வேறுபாடுகளோடும் பிறக்கின்றன. அத்துணைப் பொருள் களுக்கும் அடிப்படையாய்க் கருப்பொருளாக இருப்பவனே! மக்கள் பொருள்களின் வெளித் தோற்றத்தைக் கண்டு அறியாமை வயப்பட்டு மயங்குவர்; பின் ஞானகுருவாகிய உன்னருளால் அறியாமைநீங்கி அறிவுதெளிவர்; அங்ஙனம் அறிவு தெளிந்தவர்களெல்லாம், அணுவுக்கு அணுவாய் ஒரு பொருளாய் இருப்பவன் நீ ஒருவன்தான் என்பதை உணர்வர்; இவ்வாறு ஒப்பில்லாத ஒரு பொருளாய் இருப்

பவனே! பொருள்களைத் தோற்றுவித்து, தோற்றுவித்த பொருள்கள் இயங்க அவற்றுள் உயிராக இருப்பவனும் நீயே! உயிர்பெற்றவை இயங்கவும் வாழவும் உள்ளுணர்ச்சி தேவை; அங்ஙனம் உணர்தற்குரிய உள்ளுணர்ச்சிப் பொருளாக இருப்பவனும் நீயே! உயிராய் உணர்ச்சியாய் நின்று, எல்லாப் பொருள்களிடத்தும் அப் பொருள்களை ஆண்டருளும் அழகு வடிவமாய் அமைந்திருப்பவனே! திருவீழிமிழலை என்ற தலத்துள் விற்றிருந்து, அறியாமைவயப்பட்டு உண்மை அறியாது மயங்கித் தடுமாறிய எனக்கு, ஞானகுருவாக வந்து அறிவைத் தெளிவித்து ஞானவடிவான உன்னைக் காட்டிஅருளும் ஞான குருவனே! அடியேன் உன்னுள் ஒருவனாகச் சிவமாகும் தன்மையைப் பெற வேண்டும் என்ற குறிக்கோள் உடையேன்; அங்ஙனமே ஆக அருள்புரிவாயாக! என்கின்றார்.

குறிப்பு:- உலகில் உயிர்கள் பிறக்கின்றன; பொருள்கள் தோன்றிப் பல்வேறு வகைகளாக வேறுபடுகின்றன; ஆனால் எல்லா உயிர்களிடத்தும் எல்லாப் பொருள்களிடத்தும் இறைவன் உள்ளான் என்றும் அவனே அவ்வுயிர்களையும், அப்பொருள்களையும் இயக்குகின்றான் என்றும் கூறி, அக்கருத்தை இப்பாடலில் வலியுறுத்துகின்றார் அப்பர்பெருமான். இறைவன் அணுவாகவும் அடங்குவான்; அண்டமாகவும் விரிவான்; எல்லாம் ஆகியும் இயங்குவான் என்பதைப்போற்றித் திருத்தாண்டகத்தில், 'எல்லாம் சிவன் என்ன நின்றாய் போற்றி' என்று கூறி வழிபடுகின்றார். மேலும் எல்லாம் ஆகி நிற்கும் இறைவன் மக்கள்பால் அன்பு பூண்டு அவர்கள் அறியாமையை அகற்றி அறிவை உணர்த்த ஞானகுருவாக எழுந்தருளி ஞானத்தை வழங்குகின்றான் என்று கூறி இறைவனை ஞானகுருவாக ஈண்டுப் போற்றுகின்றார் அப்பர். திருவீழிமிழலையில் விற்றிருக்கும் இறைவன் பெயர் வீழி அழகு ஈசர் என்பதால் இப்பாடலில் இறைவனைத் 'திருவனே' என விளிக்கின்றார் அப்பர் என்க.

**திருவீழிமிழலை:-** மூவர் பாடலும் பெற்ற தலம். தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ளது. வீழிச் செடிகள் நிறைந்திருப்பதால் இவ்வூர் இப்பெயரினைப் பெற்றதென்பர். இறைவன் பெயர் வீழி அழகு ஈசர்; இறைவியின் பெயர் அழகுமுலையம்மை. திருஞானசம்பந்தருக்கும் அப்பர் பெருமானுக்கும் இங்கு கோயில்கள் உண்டு. இருவரும் இத்தலத்து இறைவன்பால் படிக்காசுகள் பெற்று மக்கள் பட்டினியைப் போக்கினர் என்பர், இத்தலம் சேந்தனாரின் திருவிசைப்பா பெற்றது.

**ஒப்புமை:-**

மெய்ப்பொருட்கண் தோற்றமாய்
மெய்யே நிலைபேறாய்
எப்பொருட்குந் தானேயாய்
யாவைக்கும் வீடாகும்
அப்பொருளாம் நம்சிவனைப்
பாடுதுங்காண் அம்மானாய்!

—மாணிக்கவாசகர்

தி. 8; திருவாசகம்: திருவம்மானை பா: எ. 12

ஒருவனே போற்றி ஒப்பில்
அப்பனே போற்றி வானோர்
குருவனே போற்றி எங்கள்
கோமளக் கொழுந்து போற்றி!

—மாணிக்கவாசகர்

தி; 8; திருவாசகம்; திருச்சதகம் பா: எ. 68

குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவமென் பதுகுறித் தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே யுரையுணர் வற்றதோர் கோவே!

– திருமூலர்.

தி:10;திருமந்திரம்:பா.எ:1556.

# 12

## இனியன்!

கனியி னும்கட்டி
    பட்ட கரும்பினும்
பனிம லர்க்குழற்
    பாவைநல் லாரினும்
தனிமு டிகவித்
    தாளும் அரசினும்
இனியன் தன்னடைந்
    தார்க்குஇடை மருதனே!

—திருநாவுக்கரசர்
திருமுறை: 5. பதிகம் 128 பா. எண். 10

பிறவிகளுக்குள்ளே சிறந்த பிறவி மனிதப்பிறவியாகும். அம்மனிதப்பிறவியோ சிறப்படைவது அதற்கென அமைந்திருக்கும் 'உள்ளம்' என்று சொல்லக் கூடிய ஒன்ருல்! ஆனல் அந்த உள்ளம் எப்பொழுதுமே இனிமையையே நாடக் காண்கின்ருேம்; உள்ளம் மட்டுமென்ன? உடலும் இனிமையையே நாடுகின்றது; இவ்விரண்டையும் இயக்கும் உயிரும் இனிமையையே அடையத் துடிக்கின்றது இங்ஙனம் உள்ளம்—உடல்—உயிர் எல்லாமே ஒருசேர இனிமையை நாடினும் அதன் அதன் அமைப்புக்கு ஏற்ற வண்ணம் வெவ்வேறுபட்ட இனிமையோடு கூடிய இயல்பையே இனிமை பயக்கும் பொருள்கள் தருகின்றன. மூன்றுக்கும் ஒரே பொருளாய் நின்று-ஒத்த தன்மையதாய் இனிமை பயக்கும் ஒரு பொருள் இவ்வுலகில் உண்டா என்று நாம் அப்பரைக் கேட்போமானல் அவர் பகரும் விடையைக் காணுங்கள்.

இந்த மண்ணுலகத்தில் பொதுவாக இனிமை பயக்கக் கூடிய பொருளாகப் பழத்தைச் சொல்லலாம். பழுத்த பழம் மிக்கஇனிமையுடையது, அடுத்துக்கருப்பஞ்சாற்றிலே விளைந்த கட்டி இனிமையுடையது. பின் குளிர்ச்சியும் கவர்ச்சியும் உடையவர்களாய் மலர்கள் அணியப் பெற்ற கூந்தலையுடைய மங்கைநல்லார்கள் இனிமையுடையவர்கள். இன்னும் சொல்லப்போனல் ஒப்பற்ற திருமுடியைச் சூடி நன்மைபயக்க. இவ்வுலகை ஆளும் அரசு இனிமையுடையது. ஆக இவையெல்லாம் உள்ளத்திற்கும் உடலுக்கும் இனிமை பயப்பனவேயன்றி உயிருக்கு இனிமை பயப்பன அல்ல. இவை எல்லாவற்றிற்கும் மேலாக உள்ளம்-உடல்-உயிர் இவையனைத்திற்கும் இனிமையானவன் தன்னை அடைந்த வர்களுக்கு அருளும் பேரருள் படைத்தவனுகிய திருவிடை மருதூரில் உறையும் சிவபெருமானே! என்கிருர்.

குறிப்பு:- இனிமைக்கு நான்கு பொருள்களைச் சொன்னுர் அப்பர். இரண்டு பொருள்கள் இயற்கை அளித்தவை; மற்ற இரண்டு பொருள்கள் செயற்கையால் ஆனவை. மொத்தம் நான்கு. கனியும் பெண்மணியும் இயற்கையின் படைப்பு; கருப்புக் கட்டியும் நாட்டாட்சியும் இயற்கை வழி செயற்கையின் படைப்பு. இந்நான்கும் உள்ளத்திற்கும்–உடலுக்கும் இனிமைபயப்பனவேயன்றி உயிருக்கு இனிமை பயப்பன அல்ல; உடலுக்கும் உள்ளத் திற்குமே யன்றிச் சிறப்பாக உயிருக்கும் இனிமையையும் விடுதலையையும் பயக்கவல்லது சிவபெருமானை நினைந்து வணங்குதலே என்று கூறுகிறது அப்பர்பெருமானது பத்தி உள்ளம்; மேலும் முன் கூறிய நான்கு பொருள்களும் அவற்றிற்குரிய காலத்திற்கு உட்பட்டுத்தான் இனிமை பயக்கும்; ஆனல் இறைவன் திருவருள் காலங்கடந்தும் உயிருக்கு விடுதலையையும் இனிமையையும் அளிக்க வல்லது என்ற கருத்தையும் பெற வைக்கின்ருர் அப்பர்,

**திரு இடை மருதூர்:-** தமிழ்நாட்டில் தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ளது. மூவர் பாடல் பெற்ற தலம். இவ்வூருக்குக் கொட்டையூர்ச் சிவக்கொழுந்து தேசிகர் மருதபுராணம் என்ற நூல் இயற்றியுள்ளார். பட்டினத்தார், பத்திரகிரியார் இருவரும் விரும்பி அமர்ந்திருந்த திருத்தலம்.

**ஒப்புமை:** கரும்பினிற் கட்டிபோல்வார்
கடவூர்வீ ரட்டனாரே!

—திருநாவுக்கரசர்
தி. 4: பதிகம்: 31: பா. எ: 4

எப்போதும் இனியானை
என்மனத்தே வைத்தேனே!

—திருநாவுக் கரசர்.
திருமுறை 4 பதிகம் 7 பா. எண். 3

நீற்றாரும் மேனியராய் நினைவார்தம்
உள்ளத்தே நிறைந்துதோன்றும்
காற்றானைத் தீயானைக் கதிரானை
மதியானைக் கருப்பறியலூர்க்
கூற்றானைக் கூற்றுதைத்துக் கோல்வளையாள்
அவளோடுங் கொகுடிக்கோயில்
ஏற்றானை மனத்தினால் நினைந்தபோது
அவர்நமக்கு இனியவாறே!

—சுந்தரர்
திருமுறை: 7; பதிகம்: 30 பா. எ: 2

மடலின்மட் டே!மணி யே!அமு
தே!என் மதுவெள்ளமே!

—மாணிக்க வாசகர்
தி: 8: திருவாசகம்; நீத்தல் விண்ணப்பம்: பா, எ, 13

கன்னலும் பாலும் தேனும்ஆ ரமுதும்
கனியுமாய் இனியையா யினையே!

—கருவூர்த் தேவர்
தி. 9. திருவிசைப்பா; திருமுகத்தலை பா. எ. 8

தீதுஅவம் கெடுக்கும் அமுதம்
செந்தா மரைக்கட் குன்றம்
கோதுஅவம் இல்என்கன்னல் கட்டி
எம்மான் என் கோவிந்தனே!

—நம்மாழ்வார்
திருவாய்மொழி: பன்னிரு நாமப்பாட்டு பா. எ. 2853

# 13

## திருவடிப் பெருமை

மாசில் வீணையும்
மாலை மதியமும்
வீசு தென்றலும்
வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை
பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை
இணையடி நீழலே!

—திருநாவுக்கரசர்
திருமுறை: 5. பதிகம் 204 பா. எண்1

தனக்கு உவமை இல்லாதவன் இறைவன். அவனுடைய திருவடியை இடையறாது சிந்தித்திருப்பவர்களைக் கவலைகள் அணுகா. சிந்திக்காத மற்றவர்களுக்கோ மனக் கவலையை மாற்றமுடியாது என்கிறார் திருவள்ளுவர். இடையறாது இறைவன் திருவடியைச் சிந்தித்தவர் அப்பர்பெருமான். அதுவே சிறந்த செல்வம் என்றும் கூறி வந்தார். இவர்தம் புகழைக் கேட்டுப் பொறாமைகொண்ட. சமணர்கள் பல்லவ அரசன்பால் சென்று அப்பர் பெருமானை நீற்றறையில் இட்டுப் பூட்டவேண்டுமென்றனர். உடனே அரசன் அவ்வாறே கட்டளை இட்டனன். அப்பரை நீற்றறையில் தள்ளினர். உலோகங்கள் உருகும் அளவுக்குரிய வெப்பங் கொண்ட நீற்றறையில் தன்னை மறந்து இறைவன் திருவடியையே சிந்தித்திருந்தார் அப்பர் பெருமான். நீற்றறை குளிர்ந்தது. இறைவன் திருவடிப் பெருமையை உணர்ந்த அப்பர் கூறுகின்றார்.

ஈசனும் எம்தந்தையுமான சிவபெருமானுடைய திருவடிகள் ஈடு இணையில்லாதன. அத் திருவடிகளின் நிழ

லானது குற்றமேயில்லாதவீணையின் இசையைப்போன்றது. மாலையில் தோன்றும் இன்பத்திற்குரிய மதியின் குளிர்ச்சியைப் போன்றது. வீசுகின்ற தென்றற் காற்றின் இனிமையைப் போன்றது. இளவேனிற் காலத்தின் இன்சுவையைப் போன்றது. ஒலிக்கின்ற வண்டுகள் நிறைந்த மலர்களையுடைய மலர்ப் பொய்கையின் மாட்சியைப் போன்றதாகும் என்கிறார்.

குறிப்பு:- இப்பாடலில், 'மாசில் வீணை'—செவிக்கும், 'மாலை மதியம்'–கண்ணிற்கும் 'வீசு தென்றல்'– மூக்கிற்கும், 'வீங்கிள வேனில்' –மெய்க்கும்: 'பொய்கை- வாய்க்கும் ஆக மெய், வாய், கண்,மூக்கு, செவியாகியஐம்பொறிக்கும் ஐவகையான இயற்கை இன்பத்தைக் கூறி இறைவன் திருவடிப் பெருமையை உணர்த்துகிறார் அப்பர். மேலும் ஐம்புலனும் இறைவன் திருவடியில் ஒருமைப்பட்டு நின்றால் எல்லாவகையான துன்பநிலையும் மறைந்து இன்பநிலை எழும் என்ற குறிப்பினையும் பெற வைக்கிறார்.

ஒப்புமை:-

மலர்மிசை ஏகினான்
மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

—திருவள்ளுவர்
திருக்குறள் பா. எண். 3

# 14

## பெருந்துணைவர்

அருந்துணையை அடியார்தம் அல்லல் தீர்க்கும்
அருமருந்தை அகன்ஞாலத் தகத்துள் தோன்றி
வருந்துணையும் சுற்றமும் பற்றும் விட்டு
வான்புலன்கள் அகத்தடக்கி மடவா ரோடும்
பொருந்தணைமேல் வரும்பயனைப் போக மாற்றிப்
பொதுநீக்கித் தனைநினைய வல்லோர்க் கென்றும்
பெருந்துணையைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே!

—திருநாவுக்கரசர்
திருமுறை: 6. பதிகம்: 215 பா. எ: 5

வாழ்க்கையில் புகழ்பெற வேண்டுமானல் செயற்கரிய செயல் ஒன்றையாவது செய்ய வேண்டும்என்பர் ஆன்ருேர்; ஆனல் நாம் தனித்து நின்று அத்தகைய செயலைச் செய்து முடிக்க முடிவதில்லை; யாராவது ஒரு நல்ல அறிஞருடைய உதவியை நாடவேண்டியதிருக்கின்றது; அவர் கண்காணித்து வழிகாட்டினல் நாம் செயலை ஆற்ற முடியும். நாம் தேர்ந்தெடுக்கும் அறிஞரோ வெறும் அறநூற் புலமை உடையவராய் இருந்தால் மட்டும் பயனில்லை; அவர் செயல் திறனும் படைத்தவரா யிருக்க வேண்டும்; நாம் செய்யும் செயலின் அருமையையும் தகுதியையும் உணர்ந்தவரா யிருக்க வேண்டும்; செயல் ஆற்றும் பொழுது நிகழ்கின்ற துன்பங்களை அவற்றின் வழியறிந்து துடைப்பவராயிருக்க வேண்டும்; செயலை ஒட்டிப் பின் வரும் தடைகளையும் துன்பங்களையும் தம் கூர்த்த மதியால் முன்பறிந்து அதனினின்றும் நம்மைக் காப்பவராகவும் அவர் திகழ வேண்டும். ஒழுக்கத்தின் வழி நிற்பவராகவும் மதிப்புடையவராகவும் இருக்கவேண்டும். இவ்வாறு மேற்கண்ட பண்புகளை உடைய அறிஞர் நமக்கு உதவியாகக் கிடைப்பாரேயானல்

நாம் செயற்கரிய செயலை மிக எளிதாக வெற்றியோடு ஆற்ற முடியுமல்லவா? இத்தகைய அறிஞர்களை—பெரியோர்களைத் தான் செயல் வெற்றிக்கு நட்பாக்கித் துணையாகக் கொள்ள வேண்டும் என்று திருவள்ளுவர் கூறுகின்றார்; அவர் 'உற்றநோய் நீக்கி உறுஅமை முற்காக்கும் பெற்றியார்ப் பேணிக் கொளல்'—(பா: எ. 442) என்றே தம் திருக்குறளில் உரைப்பர். இத்தகைய பெரியோர்கள்தான் நமக்கு மிகச் சிறந்த துணைவர்கள் ஆவார்கள். ஆனால் திருநாவுக் கரசரோ இந்தத் துணைவர்களுக் கெல்லாம் மேலாக—ஒப்பற்ற—ஒரு ''பெருந்துணைவர்'' உள்ளார் என்று கூறுகின்றார். அப்பெருந் துணைவர் முதற்கண் நம்முடைய ஐம்புலப் பற்றுக்களையும் அகற்றுவாராம்; எல்லாவிதமான துன்பங்களையும் துடைப்பாராம்; வரும் துன்பம் அறிந்து அதனை வாராது காப்பாராம்; இவை மட்டுமல்ல;யாருக்கும் கிடைக்காத பேரின்பத்தையும் நல்குவாராம். இத்தகைய ஆற்றல் வாய்ந்த பெருந்துணைவர்தாம் நம்மையெல்லாம் ஆண்டருளும் ஆனந்த நடமிடும் பாதர் ஆவார் என்று நமக்குக் கூறுகின்றார் அப்பர் பெருமான்.

சிவபெருமான் தன் திருவடியையே சிந்திக்கும் அடியார்களுக்கு, எச் செயல் நிகழ்த்தும் காலத்தும் பிரியாது நீங்காத் துணையாக அவர்கள் உடன் இருப்பவர்; அடியவர் தம் துன்பத்தையும் பிறவி நோயையும் தீர்க்க அருமருந்து போன்று துணையாயும் இருப்பவர்; மேலும் எதிர்காலத்தே தோன்றும் துன்பங்களையும் முன்பறிந்து வாராது காக்கும் துணையாயும் இருப்பவர். பொதுவாக அகன்று விரிந்த உலகமாகிய இந்த நிலத்தின்கண் பிறந்ததினால் கிடைத்த துணைவர் - சுற்றத்தார் முதலியவர்களின் உறவு வேட்கையையும், தனது என்று சொல்லக்கூடிய உடைமை, செல்வம், ஆசை, பாசம், இன்பம் முதலாய ஐம்புலப் பற்றுக்களையும் நீக்கி, மனத்தை ஒருமுகப்படுத்திச் செயலாற்ற என்றும் அடியவர்களுக்கும் உறுதுணையாய் இருப்பவர்; மேலும் மங்கை நல்லார்களோடு பொருந்தி வாழ்கின்ற அறமாகிய இல்லறத்தில் இருந்துகொண்டே இல்லறப் பயனையும்

ஆழ்ந்து அகன்ற இறைவனையே இடையறாது எண்ணி அடையும் இறையருட் பயனையும் ஒருங்கே கொண்ட அருள் வாழ்வாக மாற்றிக் கொண்டு, மக்கள் தங்கள் தங்கள் கருத்துக் கேற்பக் கூறும் பிற தெய்வங்களை எண்ணும் கருத்தை நீக்கிவிட்டுச் சிவபெருமான் ஒருவனையே முழுமுதலாகக் காலமெல்லாம் நினைந்து வழிபடுவார்களுக்கு அவர்கள் கருத்து ஈடேறத் துணையாய் இருப்பவர்; இவ்வாறு அடியார்களுக்கு நீங்காத அருந் துணைவராகவும் துயர்போக்கும் அருமருந்து போன்ற துணைவராகவும் காலத்தாலும், பிறவற்றாலும் மாறாத நிலைத்த பெருந்துணைவராகவும் இருந்து அருள்புரிபவர் பெரும்பற்றப் புலியூராகிய தில்லை நடராசப் பெருமான் ஆவார். அவர்தம் புகழ்பாடிப் பேசாத நாளெல்லாம் உண்மையில் நமக்குப் பிறவா நாளே யாகும். அவர்தம் புகழ்பாடிப் பேசும் நாட்களே நாம் பிறந்ததின் பயனை அடைந்த திருநாட்களாகும் என்று கூறுகின்றார் அப்பர்.

குறிப்பு:- மக்களுக்குப் பிற துணைகள் காலத்தாலும் பிறவற்றாலும் மாறலாம்; ஆனால் எல்லாம் ஈயும் இறையருள் ஒன்றுதான் எப்பொழுதும் நிலைத்த பெருந்துணையாகும் என்று கூறுகின்றார் அப்பர் பெருமான். மேலும் இறையருளைப் பெறக் காடு அடைந்து துறவறத்தை மேற்கொள்வதைக் காட்டிலும் வீடுடைய இல்லறத்தார் இல்லறநெறியில் அருள்வாழ்வைமேற்கொள்ளுதல் சிறந்ததென்றும் உறுதியாகக் கூறுகின்றார். மதத் தலைவர்கள் பலராவது போலத் தெய்வங்களுக்கும் பல பெயரினை இட்டு வணங்கும் மக்களுக்கு, ஒரு நாமம் ஒருருவம் இல்லாதவன் இறைவனென்றும் அவனுக்குப் பல நாமம் பயின்று வணங்காது உருவமும் அருவமுமாகத் தோன்றும் சிவலிங்க வடிவினனாகிய சிவபெருமானையே வணங்குக என்றும் அறிவுறுத்துகின்றார்.

அருந்துணை —நீங்காததுணை.

வரும் பயனைப்போக மாற்றி— இல்லறத்தில் இருந்துகொண்டே இல்லறப்பயனையும் இறையருட் பயனையும் உடையதொரு அருள்வாழ்வாக மாற்றிக்கொண்டு,

**பெருந்துணை:** துணைவர்களுக் கெல்லாம் மேலாக ஒப்பற்ற நிலைத்த துணைவர்.

'பேசாத நாளெல்லாம் பிறவா நாளே!' —இவ்வடி சொற் சித்திரமாய் நம்மோடு எதிர் நின்று பேசுவதுபோல் அமைந்தமை காண்க!

**ஒப்புமை:**

சொற்றுணை மாலைகொண்டு
 தொழுதெழு வார்கட்கெல்லாம்
நற்றுணை யாவர் போலு
 நாகவீச் சரவனாரே!

—திருநாவுக்கரசர்
திருமுறை 4 பதிகம்; 66 பா. எ. 3

தோழா போற்றி! துணைவா போற்றி!
வாழ்வே போற்றி!என் வைப்பே போற்றி!

—மாணிக்கவாசகர்
தி: 8. திருவாசகம் போற்றித்திருவகவல்: பா. அ. 120

சென்றநாள் செல்லாத
 செங்கண்மால் எங்கள்மால்
என்றநாள் எந்நாளும்
 நாளாகும்;—என்றும்
இறவாத எந்தை
 இணையடிக்கே ஆளாய்
மறவாது வாழ்த்துகஎன் வாய்!

—பேயாழ்வார்
நாலாயிரத்திவ்யபிரபந்தம் மூன்றும் திருவந்தாதி; பா.எ:2298

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப்
பாதங்கள்; மெய்ம்மைகுன்ரு
மொழிக்குத் துணைமுரு காவெனும்
நாமங்கள்; முன்புசெய்த
பழிக்குத் துணையவன் பன்னிரு
தோளும்; பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலும்செங்
கோடன் மயூரமுமே!

—அருணகிரிநாதர்
கந்தரலங்காரம் பா. எ. 70

திருந்து சிரடித் தாமரைக்
கன்புதான் செய்யப்
பொருந்து நாள்நல்ல புண்ணியம்
செய்தநாள் பொருந்தா
திருந்த நாள்வெகு தீவினை
யிழைத்தநாள் என்ருல்
அருந்த வாவுனைப் பொருந்துநாள்
எந்தநாள்? அடிமை.

—தாயுமானவர்
திருப்பாடல்கள்; எனக்கெனச் செயல்: பா. எ. 14

துப்புரவு பெறவெனக்கே அருளமுதந்
துணிந்தளித்த துணையை என்றன்
அப்பனைச்சிற் றம்பலத்தென் அருட்பெருஞ்
சோதியை

—இராமலிங்க அடிகள்
திருவருட்பா தி: 6: அச்சோப்பத்து: பா: எ: 3

# 15

## அருளாளர்

இருளாய உள்ளத்தின் இருளை நீக்கி
இடர்பாவம் கெடுத்தேழை யேனை உய்யத்
தெருளாத சிந்தைதனைத் தெருட்டித் தன்போற்
சிவலோக நெறியறியச் சிந்தை தந்த
அருளானை ஆதிமா தவத்து ளானை
ஆறங்க நால்வேதத் தப்பால் நின்ற
பொருளானைப் புள்ளிருக்கு வேளூ ரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கி னேனே!

—திருநாவுக்கரசர்

திருமுறை: 6 பதிகம்: 268; பா: எ. 4.

வாழ்க்கையில் ஒருவர் துன்பப் படும்பொழுது அவரைப் பார்த்துக்கொண்டு செல்பவரும் உண்டு; பாவம் நல்லவர் என்று அனுதாபப்பட்டுச் செல்பவரும் உண்டு; இந்த இருவகையினராலும் எந்தவிதப் பயனுமில்லை; உதவியுமில்லை. ஆனால் யாராவது ஒருவர் மற்றவர்படும் துன்பத்தைத் தம் துன்பம்போல் எண்ணி, உடனே உதவி செய்ய முற்படுவாரே யானால் அவரை மக்கள் அருள் உள்ளம் படைத்தவர்—'அருளாளர்' என்று தானே அழைக் கின்றார்கள். அருள்உள்ளம் படைத்தவர்கள் பொதுவாக ஈரநெஞ்சம் உடையவர்கள்; பிற உயிர்களையும் தன்னுயிர் போல் எண்ணும் பண்பாடுடையவர்கள்! பிற உயிர்களின் துன்பம் துடைப்பதே தங்களுடைய அறமெனக் கொள் பவர்கள்; அவர்கள் உளமறிந்து வழிகாட்டி அவர்களைக் காப்பதையே தொண்டாகப் புகழாகக் கருதுபவர்கள். அவ் வருளாளர்களை அவர்கள் வாழ்வில் ஒருபோதும் எந்த விதமான தீவினையும் அணுகாது என்று உறுதியாகக் கூறுகின்றார் திருவள்ளுவர்.

மன்னுயிர் ஓம்பி அருளாள்வாற்கு இல்லென்ப
தன்னுயிர் அஞ்சும் வினை — திருக்குறள்; பா: எ. 244

என்பது திருக்குறள். இத்தகைய அருளாளராகச் சிவபெருமான் காட்சிதந்தார் என்று கூறுகின்றார் அப்பர் பெருமான். நான் இருள்மயமான உலகில் வாழ்ந்துகொண்டிருந்தேன்; பெரும் பாவங்களைச் செய்து அதனால் துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருந்தேன்; துன்பம் துடைக்க வழியறியாது தவித்துக் கொண்டிருந்தேன்; இந்த நிலையில் என்னை ஏழை எனத் தள்ளாது எனக்கு அன்போடு சிவபெருமான் காட்சி நல்கினார்; ஒளி கொடுத்தார்; பாவங்களைப் போக்கினார்; துன்பம் துடைத்தார்; உள்ளம் தெளிவித்து ஞானம் ஈந்தார்; என்னை ஏற்று வீடுபேற்றை அளித்தார். இவ்வாறு துன்பம் துடைத்து அறிவூட்டி உயிர்காத்த அருளாளரை — சிவபெருமானை — நாளெல்லாம் போற்றி வணங்காது நாளைக் கடத்தி விட்டேனே என்று வருந்திக் கூறுகின்றார் நாவுக்கரசர்.

இவ்வுலகில் பிறந்த உயிர்களின் உள்ளங்கள் சிவனையறியாது மயங்குகின்றன; சிவனை அறியத் துடிக்கும் அவ்வுள்ளங்களின் உணர்வுகளை ஆணவ இருள் மயக்குகின்றது; அவ்வுள்ளங்கள் அறிவு தெளியாது அறியாமையில் மூழ்குகின்றன. இவ்வாறு, என் உள்ளமும் ஆணவமும் அறியாமையும் நிறைந்து இருள்மயமாக இருந்தது. அறிவு தெளியாத நிலையில் நான் பெரும் பெரும் பாவங்களைச்செய்தேன்; அதனால் பல்வேறு வகையான துன்பங்களை அனுபவித்துக் கொண்டிருந்தேன்; துன்பத்தையும் பாவத்தையும் துடைக்கும் வழியறியாது தவித்துக்கொண்டிருந்தேன்; இறைவன் என் துன்பத்தைக்கண்டு கருணைகொண்டார்; என்னை ஏழையெனத் தள்ளாது அன்பால் ஆதரித்தார்; பாவங்களைப் போக்கிப் பண்பை நல்கித் துன்பம் துடைத்தார்; அறிவைக் கொடுத்து ஆணவ அறியாமையாகிய இருளை நீக்கினார்; தெளிவில்லாதிருந்த என் உள்ளத்தைத்தெளிவித்தார்; ஐந்தெழுத்தின் உட்பொருளையும், சிவலோக நெறியாம் சிவபதத்தையும், தமிழ் மாலை பாடித்

தாளடையும் தகுதியையும் உணரச் செய்யும் உள்ளத்தை ஈந்தார்; என்னைச் சிவமாக்கித் தன்னில் ஒருவனாக ஆக்கிக் கொண்டார்; இவ்வாறு என் துன்பம் கண்டு துடைத்து அன்பையும் அருளையும் வாரிவழங்கிய அருளாளராகிய சிவபெருமானை, மிகப் பழமையானவனும் பெருமை மிக்க புண்ணியங்களின் வடிவை உடையவனுமான சிவபெருமானை, ஆறு அங்கங்களாலும் நால்வகைப்பட்ட வேதங்களாலும் கூறமுடியாதவனாய் அவற்றையும் கடந்து அப்பால் நிற்கும் முழுமுதற் பொருள் வடிவாம் சிவபெருமானை, திருப்புள்ளிருக்குவேளூரில் விற்றிருந்து அருளும் வைத்திய நாதனாகிய சிவபெருமானை நாளெல்லாம் போற்றி வணங்காது முழுமையான என் வாழ்நாட்களை வீழ்நாட்களாகப் போக்கி விட்டேனே! என்று வருந்துகின்றார் அப்பர் பெருமான்,

குறிப்பு:- அருள் உள்ளம் படைத்த அருளாளனாகவும், பழமையானவனாகவும், புண்ணியனாகவும், நால்வகைப்பட்ட வேதங்களாலும் ஆறுஅங்கங்களாலும் கூறவொண்ணாப் பொருளாளனாகவும், வைத்திய நாதனாகவும் காட்சியளிக்கும் சிவபெருமான், கேவலம்தகுதியற்றஎளியேனாகியதன்னை ஆதரித்து ஆட்கொண்டான்என்று அப்பர் கூறுவதின்மூலம், அப்பர்தம் எளிய தன்மையையும் நினைப்பவர்மனம் கோயிலாகக்கொள்ளும் ஆண்டவனின் அருள் தன்மையையும் இப்பாடல் விளக்கக் காண்கின்றோம்; மேலும் வேதாங்கங்களினாலும், மந்திரங்களினாலும், அறிவு ஆற்றல்களினாலும் அடையமுடியாத இறைவனை உளமாரச் சிந்தித்து அருந் தமிழ் ஒன்றினால் பாடிப் போற்றி உருகுவோமேயானால் மிக எளிதில் அவனை அடையலாம் என்ற பேருண்மையையும் அப்பர் குறிப்பிடுவதை நாம் உணரலாம்.

**ஆறங்கம்:-** சிட்சை, வியாகரணம். சந்தசு. நிருத்தம், சோதிடம், கற்பம் என்பன. இதனை வேதாங்கம் என்றும் வடமொழி நூலார் உரைப்பர்.

சிவலோக நெறி- சிவபதம்; வீடுபேறு,

'தன்போல் சிவலோகநெறியறிய' என்ற இடத்துச் சிவமாம் தன்மை தானாகுதல் எனப்பொருள் கொள்க; சிவபதவி நால் வகைப்படும் என்பர்.

**திருப்புள்ளிருக்கு வேளூர் -** இவ்வூர் வைத்தீசுவரன் கோயில் எனப்பெயர் பெறும். தேவாரத்தில் புள்ளிருக்கு வேளூர் எனப்படும். தஞ்சை மாவட்டத்தில் சீகாழிக்குத் தென்மேற்கில் நான்கு கல் தொலைவிலுள்ளது. புள் என்பது சடாயு, சம்பாதி என்ற பறவைகளையும், இருக்கு என்பது வேதத்தையும். வேள் என்பது முருகனையும் குறிக்கும், புள்ளும் இருக்கும் வேளும் வழிபட்டதனால் இத்தலம் புள்ளிருக்கு வேளூர் ஆயிற்றென்பர். இத்தலத்துச் சிவபெருமானுக்குப் புள்ளிருக்கு வேளூரான் என்றும், எல்லாவகை நோயையும் நீக்குபவனாகையால் வைத்தியநாதனென்றும் பெயர் வழங்கப்படுகின்றது. அம்மைக்குத் தையல்நாயகி என்று பெயர். இத்தலத்தைத் திருநாவுக்கரசரும், திருஞான சம்பந்தரும் பாடியுள்ளனர். இங்குச் செல்வமுத்துக்குமரர் கோயில் சிறப்புற்றிருப்பதால் குமரகுருபரர், முத்துக்குமரர்மேல் முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ் பாடியுள்ளார். வடுகநாத தேசிகர் என்பவர் பாடிய தலபுராணமும் உண்டு.

"புள்ளிருக்கு வேளூரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கினேனே"

—என்ற கருத்து,

"புரிந்தவந்நாளே புகழ்தக்க
அடிமைபோகுநாள் விழுநாளாகி''

—(தி: 7; ப: 14 பா. எ. 5)

என்ற சுந்தரர்தம் திருப்பாடலாலும் அறியலாம்.

ஒப்புமை:-

பித்தா!பிறை சூடி!பெரு
மானே!அரு ளாளா!

—சுந்தரர்

தி. 7. ப. 1. பா. எ. 1.

அருளாளன் என்பது திருவெண்ணெய்நல்லூரில் விற்றிருக்கும் சிவபெருமானுக்குப் பெயராகும்; அங்கே உள்ள கோயிலுக்கு அருள்துறை என்றுபெயர்.

மருளனேன் மனத்தை மயக்கற நோக்கி
மறுமையோ டிம்மையும் கெடுத்த
பொருளனே புனிதா பொங்குவாள் அரவம்
கங்கைநீர் தங்குசெஞ் சடையாய்
தெருளுநான் மறைசேர் திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அருளனே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே!

—மாணிக்க வாசகர்

தி: 8; திருவாசகம்; அருட்பத்து; பா. எ: 9.

தனக்கே அடியனாய்த் தன்னடைந்து வாழும்
எனக்கே அருளாவா றென்கொல்—மனக்கினிய
சீராளன் கங்கை மணவாளன் செம்மேனிப்
பேராளன் வானோர் பிரான்.

—காரைக்காலம்மையார்.

திருமுறை: 11. அற்புதத்திருவந்தாதி பா. எ: 44

# 16

## ஒண்தொடியும் ஒற்றியூரனும்

என்ன தெழிலு நிறையும் கவர்வான்
புன்னை மலரும் புறவிற் றிகழும்
தன்னை முன்ன நினைக்கத் தருவான்
உன்னப் படுவான் ஒற்றி யூரே!

—சுந்தரர்

திருமுறை: 7 பதிகம்: 91. பா. எ. 4.

உயிர்களை ஆளுகின்ற உணர்ச்சிகளுக்குள் தலைசிறந்த உணர்ச்சி காதல் உணர்ச்சியாகும். அக்காதல் உணர்வு காதலர்களைப் படாதபாடு படுத்தும்; சிந்தனையைத் தன்வயப்படுத்தும்; செயலில் மனம் செல்லாதவாறு செய்யும்; கவலையைப் பெருக்கும்; அது தருகின்ற முதற்பரிசு கவலைதான். பின் கவலையினால் உடல் நலியும், அழகு அதன் பொலிவை இழக்கும். தலைமகன் ஒருவனைக் காதலித்தாள் தலைவி; நாட்கள் சென்றன; தலைவனை எண்ணித் தவித்தாள்; கவலை நோய் பெருகிற்று; உடல் நலிந்தாள்; இந்த நிலையில் தலைவிதானே தனித்திருந்து தனக்குள் சொல்லிக் கொள்கின்றாள். இங்குக் காதல் தலைவியாகவே மாறி விட்டார் சுந்தரர். சிவபெருமான் திருவருளுக்கு ஏங்கினார். அவன் அருள் கிடைக்காதா என எண்ணி அல்லும் பகலும் தவிக்கின்றார். தவிக்கின்ற அந்த நிலையில் பேசுகின்றார்.

அவர் புன்னைமலர்கள் பூத்துக் கொழிக்கும் நெய்தல் நிலத்திற்கு உரியவர்; வீரம் செறிந்தவர்; அவர் ஆற்றலைக் கண்டு ஆராத காதலுற்றேன்; அவர் அருளுக்கு ஏங்கினேன்; காதல் நோய் பெருகக் கலங்கினேன்; அவரையே எண்ணி எண்ணி வாடினேன்; இவ்வாறாக முதலில் அவரை எண்ணித் தவிக்குமாறு என்னைச் செய்தார்; பின்னர் என்னுடைய பருவ அழகையும் நிறைந்த பெண்மையையும் விரும்பி ஏற்றார்; ஆனால் எனக்கு

அவர், தம்மையே எண்ணி உள்ளுருகித் தவிக்கும் துன்ப நிலையைத் தந்தார். இப்படிப்பட்டவர்தம் ஊர் தான் திருஒற்றி யூராகும் என்கின்றார்.

குறிப்பு:- பருவ அழகையும் பாவையின் பெண்மையையும் காதலர் ஏற்று, அவரையே எண்ணி அல்லும் பகலும் உள்ளுருகும் கவலைநோயைத் தந்தார் என்று எண்ணும் காதலியின் உள்ளத்தைச் சித்திரிக்கின்றது இக்கவிதை. ஆனால் உட்பொருளாகச் சிவபெருமானிடத்துக் காதலியைப்போல் நம்பிக்கையோடு நம் உள்ளத்தை ஒருங்கே ஒப்படைத்து அவனையே எண்ணிக் காதலாகிக் கசிந்து உள்ளுருகிச் சிவமாகும் தன்மையைப் பெற்றால் உடனே சிவம் வெளிப்பட்டு அருள் புரியும் என்ற கருத்தை அறிவுறுத்துகின்றார் ஈண்டுக் காதல் தலைவியாகிய சுந்தரர்.

இப்பாடலுக்குத் தத்துவ நூலோர், இறைவன் உயிர்களின் மருள் அழகைக் கவர்ந்து ஏக்கமுறச் செய்து, பின் அருள் அழகை வழங்கிப் பேரின்பமுறச்செய்வான் என உரைப்பர்.

நிறை-நிறைவுடைய பெண்மை.
புறவு-மணல்மேடு.
கவர்வான்—விரும்பி ஏற்பான்,

சுந்தரர்:- ஒன்பதாம் நூற்றாண்டில் தென் ஆர்க்காடு மாவட்டம் திருநாவலூரில் சைவவேதியர் குலத்தில் சடையனார்க்கும் இசை ஞானியார்க்கும் தோன்றியவர். இவரது இயற்பெயர் நம்பி ஆரூரர். இவர் நரசிங்கமுனையரால் ஆதரிக்கப் பெற்றுக் கல்வி கேள்விகளிற் சிறந்தார். திருமணம் ஆகும்

சமயத்தில் இறைவனால் ஆட்கொள்ளப்பட்டார். இறைவனையே தூதுவிடுத்துப் பின் பரவையாரையும் சங்கிலியாரையும் மணம் செய்துகொண்டார். இவர்தம் உயிர்த்தோழர் சேர நாட்டரசர் சேரமான் பெருமாள் ஆவார். தம் 18ஆம் வயதில் ஆடி சுவாதியில் இறைவனுடன்கலந்தார். இவர்தம் பிற பெயர்கள் ஆளுடையநம்பி, நம்பியாரூரர், வன்றொண்டர், தம்பிரான்தோழர் முதலியன.

இவர் பாடிய பாடல்கள் சைவத்திருமுறை பன்னிரண்டில் ஏழாவது திருமுறையாகும். மூவர் பாடல்களும் தேவாரம் எனப்பெயர் பெறுமுன் இவர்தம் பாடல்களுக்குத் 'திருப்பாட்டு' எனப் பெயர் வழங்கிற்று. இவர் பாடிய பாடல் களாக இன்று நமக்குக் கிடைத்திருப்பன மொத்தம் 1036. இவை 100 பதிகங்களாக உள்ளன. இவற்றில் சிலபதிகங்களில் சில பாடல்கள் இல்லை.

—கலைக்களஞ்சியம்

தொகுதி: 5 பக். எ: 60, 61,

சுந்தரர்தம் திருப்பாட்டைப்பற்றி இராமலிங்க அடிகளின் பாடல்:

தேன்படிக்கும் அமுதாம் உன்
திருப்பாட்டைத் தினந்தோறும்
நான்படிக்கும் போதென்னை
நானறியேன்; நாவொன்றோ
ஊன்படிக்கும்; உளம்படிக்கும்;
உயிர்படிக்கும்; உயிர்க்குயிரும்
தான்படிக்கும்; அனுபவம்காண்
தனிக்கருணைப் பெருந்தகையே!

—இராமலிங்க அடிகள்;

திருஅருட்பா; தி: 4; ஆளுடைய நம்பிகள் அருள்மாலை பா. எ. 7·

ஒப்புமை:-

சாயலும் நாணும்
அவர்கொண்டார் கைம்மாறு
நோயும் பசலையும்
தந்து

—திருவள்ளுவர்; திருக்குறள்; 1183

நிறம்பிறிதாய் உள்மெலிந்து
நெஞ்சுருகி வாளா
புறம்புறமே நாள்போக்கு
வாளோ! —நறுந்தேன்
படுமுடியாப் பாய்நீர்
பரந்தொழுகு பாண்டிக்
கொடுமுடியாய் என்றன் கொடி!

—கபிலதேவ நாயனார்

திருமுறை 11. சிவபெருமான் திருஇரட்டைமணிமாலை
பா. எ. 33

# 17

## காதல் உள்ளம்!

சூடுவேன் பூங்கொன்றை சூடிச் சிவன்திரள்தோள்
கூடுவேன் கூடி முயங்கி மயங்கிநின்று
ஊடுவேன் செவ்வாய்க்கு உருகுவேன் உள்ளுருகித்
தேடுவேன் தேடிச் சிவன்கழலே சிந்திப்பேன்
வாடுவேன் பேர்த்தும் மலர்வேன் அனலேந்தி
ஆடுவான் சேவடியே பாடுதுங்காண் அம்மானாய்!

—மாணிக்கவாசகர்

தி: 8; திருவாசகம்; திருவம்மானை; பா. எண்: 17

காதல் உள்ளமானது எண்ணாத எண்ணமெலாம் எண்ணும்; காதலனைப் பற்றியும் அவன் செயலைப் பற்றியும் அவனது பொருள்களைப் பற்றியும் சிந்தித்துப் பார்க்கும்; அவன் திருவுருவை மனத்தகத்தே பதித்து மகிழ்ந்து நிற்கும்; அங்க அழகைப் பருகி உவந்து நிற்கும்; இங்கு மாணிக்கவாசகர் காதலியானார்; காதல் தலைவனாகிய சிவபெருமானை எண்ணி எண்ணி உருகினார்; அவர் திருவுருவை மனத்தகத்தே பதித்து மகிழ்ந்தார்; அவரை அடையத் துடித்து வாடினார்; அவரை அணைவது போல் எண்ணி மகிழ்ந்தார்; மகிழ்ச்சி மிக்கூரப் பேசுகின்றார் மாணிக்கவாசகர்.

சிவபெருமானுக்குஉரிய கொன்றைமாலையைத் தலையில் சூடிக்கொள்வேன்; சூடிய அம்மாலையோடு அவர்தம் திரண்ட தோள்களை அணைவேன்; அணைந்து உடலாரத் தழுவுவேன்; தழுவிய நிலையில் மயங்குவேன்; பின் தனித்து நிற்பேன்; அவரோடு ஊடுவேன்; அவர்தம் அழகிய திருவாயின் இதழ் அமுதம் பருக உருகுவேன்; என்னுள்ளத்தினுள்ளே உருகி அவர்தம் திருவழகின் முழுமையைக் காணத் தேடுவேன்; அங்ஙனம் தேடிச் சிவபெருமான்

திருவடியையே சிந்திப்பேன்;அதைஅடையமுடியவில்லையே என்று ஒருகணம் எண்ணி வாடுவேன்; ஆனால் மறுகணம் அவன் உறுதியாக அருள்புரிவான் என்றுநினைவு மீண்டும் எழுந்தவுடன் என் பெண்மை பூரிக்க மலர்வேன். இவற்றிற் கெல்லாம் காரணமாயிருப்பவன் ஒருகையில் அனலைஏந்திக் கால்தூக்கி நின்றாடும் தில்லைக் கூத்தன் அல்லவா? அவன் திருவடிகளைப் போற்றிப் பாடி அம்மானை ஆடுவோமாக! என்கிறார்.

குறிப்பு:- தாய் தன் குழந்தையினிடத்துச் செலுத்துகின்ற அன்பும், காதலன் காதலியிடத்துக் காட்டுகின்ற அன்பும், அடியார் ஆண்டவனிடத்து அளிக்கின்ற அன்பும் 'காதல்' எனும் பெயரினைப் பெறும். ஒரு உயிர் மற்றொரு உயிரை முழுமை அன்பால் கவ்வி வேறின்றி ஒன்றுமேயானால் அங்குக் 'காதல்' தானாகவே பிறக்கின்றது. அத்தகைய காதல் நிலைய மானார் மாணிக்க வாசகர். உயிரைத் தலைவியாக வும் உயிரைப்படைத்த இறைவனைத் தலைவனாகவும் கூறுவது மரபு. அம் மரபுப்படி இங்குத் தலைவி யாகிய மணிவாசகர் தலைவனாகிய இறைவன்பால் தீராத காதல்கொண்டார்; அவனோடு இரண்டறக் கலந்தார்; அத் தன்மையைத் தித்திக்கும் சொல் லின்ப வடிவில் புலப்படுத்துகின்றார் இப் பாடலில். மேலும், இறைவன் திருவுருவைக் கண்ணாரக் கண்டு மலர்தூவிப் போற்றி வழிபாடு செய்கின்ற உருவ வழிபாட்டினைப் பற்றியும், பின் இறைவனை மனத்தகத்தே பதித்து மனத்தாலே சிந்தித்தும் போற்றியும் வழிபாடு செய்கின்ற ஞான வழிபாட்டி னைப் பற்றியும் அதற்குமேல் இறைவனோடு இரண் டறக் கலந்து சிவமாகும் அருள் வழிபாட்டினைப் பற்றியும், இங்ஙனம் உருவ-ஞான – அருள்-வழி பாடுகளின் முறைமையைச் சித்திரித்துக் காட்டு கின்றார் மணிவாசகப் பெருமான்.

உண்மையில், ஆடும் தில்லைக் கூத்தனை ஆடும் அழகராகவே கண்டு அவ்வழகை ஆராதிக்கிறார் மாணிக்கவாசகர்.

இப்பாடல் திருவண்ணாமலையில் மணிவாசகரால் அருளப்பட்டதாகும்.

**திருவம்மானை:** இது மகளிர் அம்மானை ஆடும்பொழுது பாடுகின்ற வரிப்பாடலாகும். மகளிர் தங்களுக்கு நல்ல கணவன் வாய்க்க, அக்கணவனின் சிறப்பு வகைகளை வரிப்பாடலில் பாடுவர் என்பர்.

**மாணிக்கவாசகர்:-** இவர் அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவர். சைவ சமய ஆசிரியர் நால்வரில் ஒருவர்; பாண்டிய நாட்டில் திருவாதவூரில் அமாத்திய சுந்தரகுலத்தில் பிறந்தவர்; பாண்டிய மன்னனுக்கு அமைச்சர் ஆனார். குதிரை வாங்கச் சென்ற பணத்தைத் திருப்பெருந் துறையில் கோயில் கட்டினார். அரசன் அதற்குத் தண்டனை கொடுக்க, அதனை இவர் ஏற்கும் பொழுது இறையருள் வெளிப்பட்டு அருள்புரியப் பெற்றார். பின் சிதம்பரம் அடைந்து தம் முப்பத் திரண்டாம் ஆண்டில் ஆனித்திங்கள் மகநாளில் இறை அருளோடு கலந்தார். இவருக்குத் திருவாதவூரர், ஆளுடைய அடிகள், மணிவாசகர், முதலிய பிற பெயர்கள் உண்டு. இவர் பாடிய நூல்கள் திருவாசகமும், திருக்கோவையாரும் ஆகும். மாணிக்கவாசகரின் வாசகத் தமிழைப் பற்றி இராமலிங்க அடிகளின் பாடல்:-

வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்துபால்கலந்து செழுங்கனித்தீஞ்சுவைகலந்தென்
ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே!

—இராமலிங்கஅடிகள்;

திருவருட்பா தி;4 ஆளுடையவடிகள் அருள்மாலை; பா. எ. 7

**திருவாசகம்:-** சைவத்திருமுறை பன்னிரண்டில் திருவாசகம் எட்டாம் திருமுறையாகும். ஐம்பத்தொரு சிறு தலைப்புக்களைக் கொண்ட நூல். இந் நூல் மொத்தம் 656 பாடல்களைக் கொண்டது.

**ஒப்புமை:-**

பாட வேண்டும்நான் போற்றி நின்னையே
பாடி நைந்துநைந் துருகி நெக்குநெக்கு
ஆட வேண்டும்நான் போற்றி அம்பலத்
தாடு நின்கழற் போது நாயினேன்
கூட வேண்டும்நான் போற்றி யிப்புழுக்
கூடு நீக்கெனைப் போற்றி பொய்யெலாம்
விட வேண்டும்நான் போற்றி விடுதந்
தருளு போற்றிநின் மெய்யர் மெய்யனே!

—மாணிக்கவாசகர்

தி. 8: திருவாசகம்;திருச்சதகம் பா. எண்:100.

சூடுவன்; நெஞ்சிடை வைப்பன் பிரான்என்று
பாடுவன்; பன்மலர் தூவிப் பணிந்துநின்று
ஆடுவன்; ஆடி, அமரர் பிரான்என்று
நாடுவன்; நானின் றறிவது தானே!

—திருமூலர், தி; 10; திருமந்திரம்; பா. எ. 50



## 18

## உலகின் வியப்பு!

அரிக்கும் பிரமற்கும்
அல்லாத தேவர்கட்கும்
தெரிக்கும் படித்தன்றி
நின்றசிவம் வந்துநம்மை
உருக்கும் பணிகொள்ளும்
ஏன்பதுகேட்டு உலகமெல்லாம்
சிரிக்கும் திறம்பாடித்
தெள்ளேணம் கொட்டாமோ!

—மாணிக்கவாசகர்

தி: 8 திருவாசகம்; திருத்தெள்ளேணம் பா. எண்: 3.

நிறைந்த செல்வம் படைத்தவர்கள் மற்ருெரு பெருஞ் செல்வம் படைத்தவர்களைத்தான் தங்களுக்குச் சமமாகக் கருதி வரவேற்பர்; அவர்களுக்கே சிறந்த மதிப்பைக் கொடுப்பர்; ஆனல் தன்னிலும் குறைந்த எளியவரை மனமார வரவேற்பதுமில்லை; அத்துணை மதிப்புக் கொடுப்பதுமில்லை; இதனை நாம் வாழ்க்கையில் காணலாம். இதனலன்ருே இனம் இனத்தோடு சேரும்; பணம் பணத் தோடு சேரும் என்ற பழமொழியும் எழுந்தது? ஆனல் இதற்கு நேர் மாருக மணிவாசகரது வாழ்க்கையில் ஒரு நிகழ்ச்சி நிகழ்ந்ததாம். அதை அவரே சொல்கிருர்.

இறைவர்களுக் கெல்லாம் இறைவனுகிய சிவபெருமான் காத்தற் கடவுளாகிய திருமாலும் காண முடியாதவராயிருந் தார்; படைப்புக் கடவுளாகிய நான்முகனும் காண முடி யாதவராயிருந்தார்; அதுமட்டுமன்று; வானவர் தலைவனுன இந்திரன் முதலான தேவர்களும் காண முடியாதவராயிருந் தார். அப்படிப்பட்ட பேரருள் படைத்தவர் சிவபெருமான். அவர், ஒரு தகுதியுமில்லாத என்னை—தாழ்ந்த எளிய நிலையிலிருக்கும் என்னை, வலிய வந்து தன்கருணையினுல்

ஆட்கொண்டார்; என் உள்ளத்தை உருக்கிக் கனியாக்கினர்; என் அன்புத்தொண்டை ஏ ற் று க் கொ ண் டா ர். பேரருள் படைத்தவர் அருளற்ற.தகுதியற்ற,எளிய என்னை ஆட்கொண்டதைக் கண்ட உலகம் மிகப்பெரிய வியப்பில் அல்லவா ஆழ்ந்து சிரித்து நிற்கின்றது! அப்பேரருள் படைத்த சிவபெருமானின் கருணைப் பெருக்கின் திறத்தைப் பாடிப்பாடி நாம் தெள்ளேணம் கொட்டி விளையாடுவோமாக! என்கின்ருர்.

குறிப்பு: வாழ்வில் கு றை ற வு உடையவர்களை ஒதுக்கித் தள்ளாது, அவர் உயர வழிகாட்டி உ த வு வ து தானே கருணை எனப்படும். அத்தகைய கருணையின் வடிவமான இறைவன், குறைவும் எளிமை நிலையும் படைத்த தன்னை உயர்வுபடுத்தியதால் இறைவர் பெருமையையும் தமது சிறுமையையும் எண்ணி எண்ணிப் பாடி மகிழ்கிருர் மணிவாசகர். மேலும் இறைவன் ஆண்டானுக்கு ஆண்டானுய், எளியனுக்கு எளியனுய்க் காட்சி நல்கும் திறத்தைப் போற்றுகின்ருர். 'அடக்கம் அமரருள் உய்க்கும்' என்பதற்கேற்ப, மணிவாசகர் தன்னை மிகமிக எளியனுக்கிக் கூறும் பண்பு பாராட்டத்தக்க தொன்ருகும்.

அடுத்து, இறைவன் திருவருளால் தாம் மெய்யுணர்வு பெற்ற நிலையை இப்பாடல்மூலம் வெளிப்படுத்துகின்ருர் மணிவாசகர்.

தென்னேணம்: தெள்ளேணம் என்பது மகளிர் விளையாடும் விளையாட்டுவகை. மகளிர் சிலர் கை கோ த் து வட்டமாக நின்று இடமும் வலமும் சாய்ந்து குதித்துக் கைகொட்டியாடும் விளையாட்டென்றும், அக்காலத்தே அவர்கள்பாடும் பாட்டுத் தெள்ளேணப் பாட்டு என்றும் கூறுகின்றனர். இதன்செயல்முறை இனிது விளங்கவில்லை. ஆயினும் இப்பாட்டுக்கள் தென்னு—தென்னு

என்ற சந்தக்குழிப்புடையவை என்று அறிகின்றோம்.

—சைவ இலக்கியவரலாறு. பக். எ. 363

ஒப்புமை:-

பொய்யாநஞ் சுண்ட பொறையே போற்றி
பொருளாக என்னையாட் கொண்டாய் போற்றி

—திருநாவுக்கரசர்.
திருமுறை 6: ப: 270: பா. எ: 9.

நாயனைய என்னைப்
பொருட்படுத்தி நன்களித்துத்
தாயனையன் ஞயருளுந்
தம்பிரான்—தூயவிரை
மென்துழாய் மாலோ
டயன்தேட வியன்தில்லை
மன்றுளே ஆடும் மணி!

—பட்டினத்தார்.
தி: 11; திருப்பாடல்கள் கோயில்நான்மணிமாலை
பா. எண். 25

பாம்பணைத் துயின்றோன் அயன்முதல் தேவர்
பன்னெடுங் காலம்நிற் காண்பான்
ஏம்பலித் திருக்க என்னுளம் புகுந்த
எளிமையை என்றும்நான் மறக்கேன்!

—கருவூர்த்தேவர்
தி: 9. திருவிசைப்பா; திருப்பூவணம் பா. எ. 2

## 19

## பெண்கொண்ட பித்தன்

தென்பால் உகந்தாடும்
　　தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பால் உகந்தான்
　　பெரும்பித்தன் காணேடீ!
பெண்பால் உகந்திலனேற்
　　பேதாய் இருநிலத்தோர்
விண்பா லியோகெய்தி
　　வீடுவர்காண் சாழலோ!

—மாணிக்கவாசகர்

தி: 8; திருவாசகம்; திருச்சாழல் பா. எண்: 9

இந்த மண்ணுலகில் மனிதர்களாய்ப் பிறப்பதே மிகச் சிறப்புடையது என்பார்கள் ஆன்றோர்கள். பிறந்த மனிதன் புகழ்பெற வாழ வேண்டாமா? புகழைப் பெறுவதற்கு அவன் உள்ளத்தில் அன்புணர்ச்சி பெருகி இருக்கவேண்டும்; அற உணர்ச்சி நிறைந்திருக்க வேண்டும். அன்பும் அறமும் அவன் உள்ளத்தில் நிலைத்திருக்கவேண்டுமானால் நல்ல மனைவியை மணக்க வேண்டும். இல்லறம் சிறப்புற நடத்தவேண்டும். காதல் பெருக உளமொத்துக் காதலர்கள் நடத்தும் இல்லறத்தினால் உயிர்கள் பிறக்கின்றன; உலகம் நடக்கின்றது; அன்பு செழிக்கின்றது; அறம் நிலைபெறுகின்றது; புகழ் மணக்கின்றது; வாழ்வு வடிவெடுக்கின்றது; ஆக அன்பும்—அறமும்-புகழும்-உலக வாழ்வும் நிலைத்து நடக்க உயிர்கள் ஆண் பெண்ணாய்-கணவன் மனைவியாய் மணப்புரிந்து வாழவேண்டும் என்ற தத்துவத்தை விளக்கவே, இறைவன் நமக்குச் சிவசத்தியாய்க் காட்சி தருகின்றான் என்ற உண்மையை மணிவாசகப்பெருமான் தோழிகளின் வாயிலாகக் கூறுகின்றார்.

தோழி! இறைவன் விரும்பும் திசை தென்திசையாகும். அத்திசையில் போற்றுதற்குரிய ஊராகிய தில்லையம்பதி யிருக்கின்றது. அத்தில்லையிலே இறைவனாகிய சிவன் அல்லும் பகலும் நின்றாடும் சிற்றம்பலம் அமைந்திருக் கின்றது. அச்சிற்றம்பலத்தில் ஆடுகின்ற சிவபெருமான் ஒரு பித்தன்; பெண்ணையே விரும்பும் பித்தன்; காண்பாயா என்கின்றாள் ஒரு தோழி. அதற்கு மற்றவள்,

அறியாது கூறும் தோழியே! நட்டம் பயிலும் நாதனாகிய சிவபெருமான் அந்தப் பெண்ணாகிய உமையம்மையை விரும்பிக் காதல் கொள்ளவில்லையானால், இந்தப் பெரிய நிலவுலகத்து மக்கள் தனித்து யோகம் பயின்று துறவிகள் ஆகி வீடுபேற்றைப் பெற்றுவிடுவர். பின் உலகமே இல்லை காண்க! என்று கூறிச் 'சாழல்' என்ற விளையாட்டினை விளையாடுவோமாக! என்கின்றாள்.

குறிப்பு:- ஆண் தனித்து வாழ்வதில் பயனில்லை; பெண்ணும் தனித்து வாழ்வதில் பயனில்லை. ஆண்மையும் பெண்மையும் கலந்து இன்ப வாழ்வு பெற வேண்டும். ஆண் பெண் காதலிலேதான் உலகம் பிறக்கின்றது; அக் காதல்வழி அவர்கள் உளமொத்து நடத்தும் சிறப்புமிக்க இல்லறத் திறல்தான் அன்பும் அறமும் மலர்கின்றன; காக்கப்படுகின்றன. இங்ஙனம் அன்பும் அறமும் தழைக்கின்ற இல்லற வாழ்வுதான் தெய்வீக வாழ்வாகின்றது என்று கூறுகின்றார் திருவள்ளுவர்.

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப் படும்"- என்பது வள்ளுவர் திருவாக்கு. இவ்வாறு உயிர்கள் ஆண் பெண்ணாய், கணவன் மனைவியாய் வாழ்வு நடத்த வேண்டுமென்ற தத்துவத்தை உலகினர்க்கு உணர்த்தவே இறைவன் பெண்ணாகிய உமையை விரும்பி மணந்தார்; உமையொரு பாகனாகத்

திருமணக்கோலத்தில் நமக்குக் காட்சி தருகின்றார் என்கின்றார் மணிவாசகர். ஆண்மை பெண்மையை விரும்பி இல்லறம் நடத்தாவிடில் உலக அமைப்பே இல்லை என்பதை மிக உறுதியாக அழுத்தமாகக் கூறுகிறார் இப்பாடலில். மேலும் எந்நாட்டவர்க்கும் இறைவனாகச் சிவன் விளங்கினாலும் அவன் சிறப்பாகத் தென்னாடுடையவன் என்பதையும், உமையொரு பாகனைச் சேர்த்தே பண்டைத் தமிழர்கள் சிவ வழிபாடு ஆற்றினர் என்பதையும் பெற வைக்கின்றார் மணிவாசகர்.

சாழல்:- திருச்சாழல் என்பது மகளிர் விளையாட்டு வகையுள் ஒன்றாகும். அறுவருக்குக் குறையாமலும் பன்னிருவர்க்கு மேற்படாமலும் மகளிர் கூடி, இரு பிரிவாகப் பிரிந்து ஒரு பிரிவினர் வினா ஒன்றை எழுப்ப, மறு பிரிவினர் அதற்கு விடை யிறுத்து விளையாடுவர். அவர்கள் தம்மிற் கைகோத்து நிற்குங்கால் வினவுவோரும் விடை கூறுவோரும் தம்மை யடுத்தடுத்து நேர் நின்று கைகொட்டி விளையாடுப என்பர். பண்டை நாளை வரிக்கூத்து வகையில் பல்வரிக்கூத்து என்னும் பகுதியிற் காணப்படும் கூத்துக்களுள் இச்சாழலும் ஒன்று.

இதன் நன்மையை உணர்ந்த நம் முன்னோர் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் விக்கிரம சோழன் காலத்தில் தென்னார்க்காடு வட்டத்து எலவானாசூர் என்னும் ஊரிலுள்ள சிவன்கோயிலில் இத் திருச்சாழலை ஓதுதற்கு ஏற்பாடு செய்துள்ளனர்.

—சைவ இலக்கிய வரலாறு; பக்: 363.

திருச்சாழல் திருப்பதிகம்:- புத்த குருமார்களை உரையாடலில்

வென்றூர் மணிவாசகர். பின் அவர்கள் சைவரா யினர்; அதுபோழ்து அவர்களுடன் வந்த ஈழ நாட்டு மன்னன் மகளின் பிறவி ஊமையை அகற்றி அருளினர். அவ்வூமைப் பெண்ணின் வாய்மொழியாக இத் திருப்பதிகம் விஞவிடையாக வெளிவந்தது என்பர்.

இப்பதிகம் எல்லாம் வல்ல சிவபெருமானின் பெருங்கருணைத் திறத்தைப் போற்றி நிற்கும்.

ஒப்புமை:-

கரையு லாங்கட லிற்பொலி
    சங்கம்வெள் ளிப்பிவன்
திரையு லாங்கழி மீன்உக
    ளுந்திரு வான்மியூர்
உரையு லாம்பொரு ளாயுல
    காளுடை யீர்சொலீர்
வரையு லாமட மாதுடன்
    ஆகிய மாண்பதே!

—திருஞானசம்பந்தர்.
தி: 2; ப; 140; பா. எ. 1

மொழிக்கும் நினைவுக்கும் எட்டாத
    நின்திரு மூர்த்தியென்தன்
விழிக்கும் வினைக்கும் வெளிநின்ற
    தால்விழி யால்மதனை
அழிக்கும் தலைவர் அழியா
    விரதத்தை அண்டம் எல்லாம்
பழிக்கும் படி,ஒரு பாகம்கொண்டு
    ஆளும் பராபரையே!

—அபிராமிபட்டர்
அபிராமிஅந்தாதி: பா. எ: 87

# 20

## ஆனந்தநடம் ஆடுவதேன்?

தேனாடு கொன்றை
சடைக்கணிந்த சிவபெருமான்
ஊனாடி நாடிவந்து
உள்புகுந்தான் உலகர்முன்னே
நானாடி ஆடிநின்று
ஓலமிட நடம்பயிலும்
வானாடர் கோவுக்கே
பூவல்லி கொய்யாமோ!

—மாணிக்கவாசகர்,

தி; 8; திருவாசகம்; திருப்பூவல்லி, பா. எ. 5.

வாழ்க்கையில் நாம் பல்வேறுகுணம் உடையவர்களைப் பார்க்கலாம். ஒரு சிலர் அதிகச் சினம் உடையவர்களாயிருப்பர்; மேலும் சிலர் தான்கொண்ட கொள்கையினின்றும் மாருத பிடிவாத குணம் உடையவர்களாயிருப்பர்; இன்னும் சிலர் ஒருவருக்கும் ஈயாதவராய்க் கஞ்சத்தனம் படைத்தவர்களா யிருப்பர்: இங்ஙனம் இக்குணம் படைத்தவர்களை மாற்றுதல் மிகமிக அரிதான செயலாகும். இமயமலையைக் கூடச் சிறுசிறு கற்களாக ஆக்கிவிடலாம்; இவர்கள் குணங்களை மாற்றவே முடியாது; ஒருவாறு யாராவது ஒருவர் மாற்றிவிட்டாராஞல் மாற்றியவரை மக்கள் கொண்டாடி மகிழ்வர். மாற்றியவரும் தாம்கொண்ட செயலின் வெற்றியில் ஆடிப்பாடி மகிழ்வதும் இயல்புதானே! மாணிக்க வாசகரும் மேலே கண்ட குணம் படைத்தவரா யிருந்தாராம். உயிர்களின்பால் அன்பின்றிச் சினம் உடையவரா யிருந்தாராம்; இறையருளைச் சிந்திக்காத பிடிவாத குணம் படைத்தவரா யிருந்தாராம். மேலும் கஞ்சனைப்போல் அறியாமையை விடாப்பிடியாய்ப் பிடித்துக்கொண்டு வாழ்ந்திருந்தாராம். இந்த நிலையில் இறைவன் அருளைப்பெய்து அவரை அருள் உள்ளத்தவ

ராக மாற்றி விட்டாராம்; இங்ஙனம் யாராலும் மாற்ற முடியாத தன்னையே மாற்றி வெற்றிபெற்றதின் காரணமாக இறைவன் ஆனந்த நடனம் ஆடுகின்றான் என்று தோழிநிலையில் நின்று பாடுகிறார் மணிவாசகர்.

வண்டுகள் விரும்பி உண்ணும் தேனைக் கொண்டது கொன்றைமலர். அம்மலர்களைச் சடையில் அணியப் பெற்றவர் சிவபெருமான். நான் அறியாமை இருளிலே மூழ்கி இருந்தேன். என் அறியாமையைப் போக்கி அருளைப்பெய்ய மானிட வடிவத்தோடு இவ்வுலகிற்கு வந்தார் சிவபெருமான். அன்போடு என்னை விரும்பி என்னைத் தொட்டார்; உள்ளத்தினுள்ளே புகுந்தார்; உலகினருக்கு முன்னே என்னை ஆட்கொண்டார்; அருளைப்பெய்தார்; உடனே நான் என்னை உணர்ந்தேன்; அறியாமை விலகப் பெற்றேன். இறையை அறிந்தேன். அவனை நாடினேன் அவன் புகழ்பாடினேன்; நீயே துணை என்று கூறி ஓல மிட்டேன்; ஆனால் இறைவனே, யாராலும் மாற்றமுடியாத கடின உள்ளம் படைத்த என்னையே மாற்றிவிட்ட வெற்றிப் பெருமிதத்தில் தில்லைச் சிற்றம்பலத்தில் நின்று ஆனந்த நடனம் ஆடிக் கொண்டிருக்கின்றான். வெற்றி நடனம் ஆடும் அந்த வானகத்தார் வேந்தனுக்கே, அவன் பேரன்பை-பெருமையை வாயாரப் பாடிக் கொடிப் பூவினைக் கொய்வோமாக! என்கின்றார் தோழியாகிய மணிவாசகப் பெருமான்.

குறிப்பு:- கல்நெஞ்சினராய் இருந்தார் மணிவாசகர்; கல்நெஞ்சைக் கனிவித்தார் இறைவன்; அருளற்ற அறியாராய் வாழ்ந்தார் மணிவாசகர்; அறியாமையை அகற்றி அருளைப் பெய்தார் இறைவன். இங்ஙனம், இமயமலையைச் சிறுசிறு கற்களாக ஆக்கும் செயலைப்போலக் கடின நெஞ்சம்படைத்த தம்மை நாடி வலிய வந்து காதல் நெஞ்சினராய் ஆக்கினார் இறைவன் என்றும், அச்செயலில் வெற்றியும் பெற்று அவ்வெற்றியின் காரணமாகப் பெருமிதத்தோடு அம்பலத்தே நின்று ஆனந்த

நடனம் ஆடுகின்ருர் என்றும் கூறிப் போற்றுகின்ருர் மணிவாசகர், 'அடக்கம் அமரருள் உய்க்கும்' என்பதுபோல மணிவாசகர் அடக்கத்திஞல் தம்மைக் கடின நெஞ்சப் படைத்தவராகத் தாழ்த்திக்காட்டி ஆடும் பிரானின் உயர்வைப் புலப்படுத்துகின்ருர் இப்பாடலில். மேலும் விம்பினைக் காட்டுவது மனிதப்பண்பு; ஆனல் அவ்விம்பினையும் பாராட்டாது வலிய வந்து ஆட்கொள்வது தெய்வப் பண்பு என்ற உண்மையினையும் பெறவைக்கின்ருர் மணிவாசகப் பெருமான்.

**திருப்பூவல்லி:** மகளிர் விளையாடும் விளையாட்டுக்களில் ஒன்ருகும்: கொடிப் பூவினைக்கொய்து விளையாடுதல் என்பர். அவ்விளையாட்டிற் பாடப்பெறும் வரிப்பாடலாகும் இப்பதிகம்.

**ஒப்புமை:—**

நானே பிறந்த
பயன்படைத் தேன்அயன் நாரணன்எங்
கோனே எனத்தில்லை
அம்பலத்தே நின்று கூத்துகந்த
தேனே திருவுள்ள
மாகியென் தீமைஎல் லாம்அறுத்துத்
தானே புகுந்துஅடி
யேன்மனத் தேவந்து சந்திக்கவே!

—பட்டினத்தார்.

தி: 11; கோயில் நான்மணி மாலை; பா. எ: 10

# 21

## வள்ளல்

தேன்பழச் சோலை பயிலும்
 சிறுகுயி லேஇது கேள்நீ
வான்பழித் திம்மண் புகுந்து
 மனிதரை ஆட்கொண்ட வள்ளல்
ஊன்பழித் துள்ளம் புகுந்தென்
 உணர்வது வாய ஒருத்தன்
மான்பழித் தாண்டமெல் நோக்கி
 மணாளனை நீவரக் கூவாய்!

—மாணிக்கவாசகர்

தி: 8; திருவாசகம்; குயிற்பத்து: பா: எண். 4

உலகில் செல்வம் படைத்தவர்கள் பலர் உண்டு; அவர்களிலே பணச்செல்வம் உடையவர்களும் உண்டு; கலைச்செல்வம் உடையவர்களும் உண்டு. எந்தவகைச் செல்வர்களாயினும் அவர்கள் தங்கள் செல்வங்களை நல்ல செயல்களுக்குப் பயன்படுத்துவதில்லை; வழங்குவதுமில்லை. இவர்களில் சிலர் செல்வத்தைப் பற்றிக் கொண்டு கைவிட மாட்டார்கள்; பூதம்போல் பாதுகாப்பார்; தானும் வாழார்; பிறருக்கும் ஈயார்; கஞ்சராய் வாழ்வர். இவர்களால் சமூகத்திற்கோ நாட்டிற்கோ எவ்வித நன்மையும் இல்லை. மனிதர்களோடு மனிதர்களாய் வாழ்வாரேயன்றிப் பயன்படார். இன்னும் சிலர் பெயருக்கு ஏதோ இரண்டொரு அறங்களை ஆற்றுவர்; தங்கள் வாழ்வைமட்டும் பெருக்கிக்கொண்டு வாழ்வர்; தங்களைக்காட்டினும் செல்வமிக்கவர் புகழ்பாடி நிற்பர்; எளியவரை ஏறிட்டும் பாரார். ஆனால், ஓரிருவரே தங்களிடம் செல்வம் மிகுந்திருப்பினும் தாம் செல்வர் என்ற எண்ணமே இல்லாது வாழ்பவர்கள்; அவர்கள் அன்புள்ளம் படைத்தவர்களாயிருப்பர்; ஏழை எளியவர்பால் கருணைகாட்டுவர்; அவர்கள்

உள்ளம் அறிந்து அள்ளிக்கொடுப்பர்; செல்வர்கள் தங்களைச் சூழ்ந்திருப்பினும் எளியவரைக் கண்டால் எட்டச் செல்லமாட்டார்கள்; கருணைகாட்டி ஆதரிப்பர்; செல்வ நிலையாமையை உணர்ந்து செல்வத்தால் நிலைக்கின்ற செயலைச் செய்வர்; புகழ்பெறுவர். இங்ஙனம் மக்களுக்கு வாரி வழங்கிப் பயன்பெறுமாறு நிலைத்த அறங்களை ஆற்றுபவர்களை நாம் 'வள்ளல்' என்றுதானே வழங்குகின்றோம். இங்கு மணிவாசகர் இத்தகைய வள்ளல்களுக்கெல்லாம் பெருவள்ளலாக விளங்குபவர் ஒருவர் உண்டு என்கின்றார். அவர்தான் சிவபெருமான் என்று கூறி மகிழ்கின்றார். சிவபெருமான் எல்லாம் நிறைந்தவர்; அவரைச் சுற்றிப் பெரும் பெரும் ஆற்றல் படைத்த தேவர்கள் வீற்றிருக்கிறார்கள்; கலைச்செல்வமும் செல்வச் செழிப்பும் மிக்கபலர் சூழ்ந்து நிற்கின்றார்கள்; இருப்பினும் செல்வரைக்காத்த சிவபெருமான் செல்வமிக்க விண்ணுலகை விட்டு எளிமை நிறைந்த மண்ணுலக மக்களை அன்போடு காண வருகின்றார். மண்ணுலகத்து எளிய மக்கள்பால் கருணை காட்டுகின்றார்; அவர்கள் உள்ளம் அறிந்து அவர்களோடு தங்கி அவர்களுக்குத் தம் செல்வமாகிய அருளை அள்ளிக்கொடுக்கின்றார்; கருணையினால் அவர்களை உயர்த்த முற்படுகின்றார்; இன்றியமையாத செயலைச் செய்யத் தலைப்படுகின்றார்; எல்லாவற்றிற்கும் மேலாக வீடுபேற்றை அளிக்கின்றார். இவ்வாறு அன்புகாட்டி ஆதரிக்கும் இவ்வள்ளல் விந்தையானவரல்லவா? வள்ளலாகிய சிவபெருமானுக்கு வரவேற்புக் கூறுவதுபோன்று நீ கூவுவாய் என்று சிறுகுயிலை நோக்கி மணிவாசகர் பேசுகின்றார்.

தேனைப்போன்று இன்சுவையை ஊட்டக் கூடிய பழங்கள் நிறைந்த சோலையில் தங்கி ஒலிக்கின்ற சிறிய குயிலே! நான் கூறுவதைக் கூர்ந்து கேட்பாயாக! எல்லாவகைச் செழிப்பும் நிறைந்தது வானுலகம்; எல்லாவகைச் செழிப்பும் நிறைந்தவர்கள் தேவர்கள்; செல்வமிக்க அவ்வானுலகையும் தேவர்களையும் விட்டு அகன்று எளிமைமிக்க

மண்ணுலகை நாடியவர் சிவபெருமான். அவர்இந்த மண்ணுலகத்து-எளிய மக்கள்பால் கருணைகொண்டார். இங்கு வந்தார். வந்து அன்பால் அவர்களை ஆட்கொண்டார்; அருட்செல்வத்தை வாரி வழங்கி ஆதரித்தார்; இங்ஙனம் எளிமைக்கு இரங்கி அருளை வழங்கிய வள்ளல் ஆனார். மேலும் இங்கு ஒருவிதத் தகுதியும் அற்றவனாக நான் இருந்தேன்; என்னை ஒரு பொருளாகக் கருதி என்பால் அன்புவைத்தார்; என் பிறவி நோயை ஒழித்தார்; அழியும் என் உடலை விடுத்து என் உள்ளம் புகுந்து அழியாத என் உணர்வோடு ஒன்றிக் கலந்தார்; இங்ஙனம் எனக்கு இரங்கி அன்பை அளித்த வள்ளல் ஆனார், நோக்கும் கண்களிலே மிகச்சிறந்ததுமான் நோக்கு என்பர். அந்த மான் நோக்கையும் புறங்கொள்ளுமாறு, அழகும்-அருளும் கலந்த கண் நோக்குடையவர் உமையம்மையார். அந்த உமையம்மையாரின் தவத்திற்கு இரங்கி அவரை மணந்து அழகை ஈந்த வள்ளலும் ஆனார். இவ்வாறு அருளை-அன்பை-அழகை வாரி வழங்கிய வள்ளலும், உமையம்மையின் மணவாளனுமாகிய சிவபெருமானை இங்கு வருமாறு அன்போடு கூவுவாயாக! என்கின்றார்.

குறிப்பு: சிவபெருமான் செல்வர்களோடு செல்வச் சூழ் நிலையில் இருந்தாலும் செல்வமில்லாத எளியவர் பாலும் அன்புள்ளம் கொண்டார்; ஆற்றல்மிக்க தேவர்களோடிருந்தாலும் ஆற்றல் குறைந்துள்ள மனிதர்களிடமும் அருளைப் பெய்தார். இங்ஙனம் செல்வர்களாயினும் எளியவர்களாயினும் வேறுபாடின்றி அருளை வாரிவாரி வழங்கினார்; அடியவர் குறையறிந்து, அவர்களை நிறைவுடையவராக்கிய சிவபெருமானை "வள்ளல்" என்றுகூறி வாழ்த்துகின்றார் மணிவாசகர். வேனிற்காலத்து இன்பம் அடிகளாருக்கு வினைத்துன்பம் போக்கும் சிவபெருமான் நினைவைத் தூண்ட, குயிலை நோக்கிக் குயிற்பத்துப் பாடினார்.

வான்பழித்து இம்மண் புகுந்து-என்ற இடத்தில் வானுலகை விட்டு அகன்று மண்ணுலகிற்கு வந்து எனப்பொருள் கொள்க; பழித்தல் என்பதை அதனைவிட்டு அகல்தல் எனக்கொள்க.

'ஊன்பழித்து'- என்ற இடத்தில் பிறவி நோயை ஒழித்து எனக்கொள்க.

ஒப்புமை:

உள்ளமாய் உள்ளத்தே நின்றாய் போற்றி
உகப்பார் மனத்தென்றும் நீங்காய் போற்றி
வள்ளலே போற்றி மணாளா போற்றி
—திருநாவுக்கரசர்
தி. 6 ப. 246: பா. எ. 8

ஊனங் கைத்துயிர்ப் பாய்உல கெல்லாம்
ஓங்கா ரத்துரு வாகிநின் றானை
வானங் கைத்தவர்க் கும்அளப் பரிய
வள்ளலை —சுந்தரர்
திருமுறை: 7. ப: 67பா. எ: 1

வள்ளலே மதுசூதனா என்மரகத
மலையே உனை நினைந்து
எள்கல் தந்த எந்தாய்! —நம்மாழ்வார்
திருவாய்மொழி-2; வைகுந்தா; பா. எ. 2843.

கள்ளலைக்கும் பூஞ்சோலைக்
காளத்தி யுள்நின்ற
வள்ளலை —நக்கீரர்
திருமுறை 11; கயிலைபாதி காளத்திபாதிஅந்தாதி பா.எ:92

அருள்எலாம் அளித்த அம்பலத்து அமுதை
அருட்பெரும் சோதியை, அரசை
மருள்எலாம் தவிர்த்து வாழ்வித்த மருந்தை
வள்ளலை மாணிக்க மணியை
—இராமலிங்கஅடிகள்
திருவருட்பா; தி: 6; வரம்பில் வியப்பு, பா. எ:1

# 22

## சதுரர் யார்?

தந்ததுஉன் தன்னைக் கொண்டதுஎன் தன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்?
அந்தம்ஒன் றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதொன் று என்பால்!
சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே ஈசா உடல்இடம் கொண்டாய்
யான்இதற்கு இலன்ஓர்கைம் மாறே!

—மாணிக்கவாசகர்

தி: 8; திருவாசகம்; கோயிற்றிருப்பதிகம் பா. எண். 10.

வணிகத் துறையில் பண்டமாற்று வியாபாரம் நடைபெறுவது இயற்கை. பொதுவாக அவரவர்களுக்குத் தேவையான பண்டங்களைத்தான் அவரவர்கள் வாங்குவார்கள். அதில் எதிர்பாராமல் ஒரு சிலருக்குச் சில சமயங்களில் உயர்ந்த பண்டங்கள் கிடைத்துவிடும்; வேறு சிலருக்குத் தாழ்ந்த பண்டங்களும் வந்துசேரும். தாழ்ந்த பண்டம் கிடைத்தவர் வருந்துவர்; உயர்ந்த பண்டம் கிடைத்தவர் மகிழ்வர்; பேரானந்தம் அடைவர். அவர் ஆனந்தத்திற்கு அளவேயிருக்காதல்லவா? தன்னிலை மறந்து கிடைத்திட்ட பொருளைப்பற்றியே எண்ணியும் கண்டும் கூறியும் இறும்பூது எய்துவர். இத்தகைய ஆனந்தத்தை மணிவாசகப்பெருமானும் அடைகின்றார் ஆற்றல்வாய்ந்த தவமுனிவர்களுக்கும் எளிதில் கிடைக்காத அருட்செல்வத்தை இறைவனிடம் பெற்றார்; கிடைத்தற்கரிய செல்வம் கிடைத்த பெருமகிழ்வில் இறைவனை நோக்கிப் பேசுகின்றார்.

என் உள்ளத்தையே கோயிலாகக்கொண்ட எம்பெருமானே! திருப்பெருந்துறை வாழ் சிவபெருமானே!

என் தந்தையே! ஈசா! நீ கொண்டது என் உள்ளத்தை மட்டுமல்ல; என் உடலைமட்டுமல்ல; என்னையே உன்பால் கொண்டுவிட்டாய். அதனால் நீ அறியாமையையும், அழிவையும், குறைகளையும் உடைய என்னைக்கொண்டாய்! ஆனால் எனக்கு நீ உன்னையே தந்தாய். அதனால் முடிவே இல்லாததும் அருள் நிறைந்ததும் அழிவில்லாததுமான பேரின்பத்தை உன்பால் பெற்றேன்! இதில் சங்கரா யார் சமர்த்தர்! முடிவே யில்லாப் பெறுதற்கரிய பேரின்பத்தை யல்லவா பெற்றேன்? என்பால் கைம்மாறாக நீ பெற்றதோ ஒன்றுமேயில்லை! இத்தகைய திருவருட் செல்வத்தைப் பெற்ற நான் உனக்கு என்ன கைம்மாறு செய்யமுடியும்? என்கின்றார்.

**குறிப்பு:** இறைவன் மணிவாசகப் பெருமானின் மருளைப் பெற்றார்; அருளைப் பெய்தார்; அழியும் ஊனுடலைக் கொண்டார்; அழியாப் புகழுடலைக்கொடுத்தார்; பிறந்து வாடும் இழிநிலையை ஏற்றார்; பிறவாத பெருநிலையை ஈந்தார்; துன்பம் துடைத்தார்; இன்பம் படைத்தார்; இத்தகைய பேரானந்தப் பேரின்பத்தை அடைந்தார் மணிவாசகர். இங்ஙனம் குறையை இறைவன்பால் கொடுத்துக் குணத்தைப் பெற்ற மணிவாசகர் உள்ளம் உயர்ந்த-கிடைத்தற்கரிய ஒன்று கிடைத்ததை எண்ணி இறும்பூது எய்துகின்றது. நம்மால் எல்லாம் முடியும் என்ற 'தான்' என்ற அகந்தையை இறைவனிடம் ஒப்படைத்துவிட்டால் அவன்அருள் மிக எளிதாகக் கிட்டிவிடும் என்ற உண்மையைப் பண்டமாற்றுமுறையில் வைத்து மிக மிக அழகுபடுத்தி உணர்த்துகின்றார் மணிவாசகர். மேலும் 'யான் இதற்கு இலன்ஓர் கைம்மாறே' — என்ற ஈற்றடியின்மூலம் இறைவா! என்னையே உனக்குக் கொடுத்துவிட்ட பிறகு, வேறு எதைக் கொடுப்பது; ஒன்றையும் கொடுக்க

இயலாது என்ற குறிப்பினையும் பெறவைக்கின்றார். நம்மை இறைவன்பால் ஒப்படைத்தால் அவனிடத்து எல்லாவற்றையும் பெறலாம் என்பதை இப்பாடல் முத்தைக் காக்கும் சிப்பி போல் காத்து நிற்கக் காண்கின்றோம். இப்பாடல் தில்லையில் அருளியதாகும்.

ஒப்புமை:

பொட்டடித் தெங்கும்
பிதற்றித் திரிவேனைப்
பொட்டடித் துள்ளமர்
மாசெலாம் வாங்கிப்பின்
தட்டொக்க மாறினன்
தன்னையும் என்னையும்
வட்டம தொத்தது
வாணிபம் வாய்த்ததே!

— திருமூலர்.

தி : 10; திருமந்திரம்; பா. எ : 1750 கழகப்பதிப்பு.

பொன்னாற்பி ரயோசனம் பொன்படைத்தாற்
குண்டு பொன்படைத்தோன்
தன்னாற்பி ரயோசனம் பொன்னுக்கங்
கேதுண்டத் தன்மையைப்போல்
உன்னாற்பி ரயோசனம் வேணதெல்
லாம்உண்டு உனைப்பணியும்
என்னாற்பி ரயோசனம் ஏதுண்டு?
காளத்தி யீச்சுரனே!

—பட்டினத்தார்

திருப்படல் திரட்டு; திருக்காளத்தி பா. எண். 2

பொன்னைக் கொண்டுஉரைகல் மீதே
நிறமெழ உரைத்தாற் போல்
உன்னைக் கொண்டுஎன் நாவகம்பால்
மாற்றின்றி உரைத்துக் கொண்டேன்

உன்னைக் கொண்டுஎன் னுள்வைத்தேன்
என்னையும் உன்னில் இட்டேன்
என்அப்பா என் இருடீகேசா!
என்உயிர்க் காவலனே!

—பெரியாழ்வார்
திருமொழி பா. எ. 467

என்றைக்கும் என்னைஉய்யக் கொண்டு போகிய
அன்றைக்கன் றென்னைத் தன்னாக்கி என்னால்தன்னை
இன்தமிழ் பாடிய ஈசனை ஆதியாய்
நின்றஎன் சோதியை என்சொல்லி நிற்பனோ!

—நம்மாழ்வார்.
திருவாய்மொழி; என்றைக்கு; பா. எ. 3425

நின்னால் எனக்குள எல்லா
நலனும் நினையடைந்த
என்னால் உனக்குள தென்னைகண்
டாய்எமை ஈன்றவளே,
முன்னால் வருக்குஅருள் ஒற்றியெம்
மான்கண் முழுமணியே
மன்னன் மறையின் முடிவே
வடிவுடை மாணிக்கமே!

—இராமலிங்க அடிகள்
திருஅருட்பா; தி: 1; வடிவுடை மாணிக்கமாலை;
பா எ. 91.

## 23

### அடிகளும் முலைச்சுவடுகளும்

துடிகொள்நே ரிடையாள் சுரிகுழல் மடந்தை
துணைமுலைக் கண்கள்தோய் சுவடு
பொடிகொள்வான் தழலிற் புள்ளிபோ லிரண்டு
பொங்கொளி தங்குமார் பினனே
செடிகொள்வான் பொழில்சூழ் திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அடிகளே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே என்று அரு ளாயே!

—மாணிக்கவாசகர்

தி; 8; திருவாசகம்; அருட்பத்து பா. எ. 5.

வாழ்க்கையில் மனிதனுக்கு ஊக்கம் மிகுதியாக வேண்டும் என்பர் திருவள்ளுவர். 'உரம் ஒருவற்கு உள்ள வெறுக்கை'— என்பது அவர் தம் திருவாக்கு. ஒரு செயலை நாம் செய்ய முற்படும்பொழுது அதற்கென்று பல்வேறு இடையூறுகள் வருவது இயற்கை; ஆனால் நம் உள்ளத்தில் ஊக்கம் மிகுதியாக இருக்குமேயானால் இடையூற்றை எளிதாகக் கடந்து செயலில் வெற்றி பெறுவது திண்ணம். உள்ள உறுதிப்பாடு கொண்டோர் ஒருமையுடன் ஆற்றும் தங்கள் செயலில் உண்மையிலே வெற்றி பெறுவதை நாம் வாழ்க்கையில் காணலாம். காஞ்சிபுரத்தில் ஓடும் கம்பை ஆற்றில் ஆற்று மணலால் சிவலிங்கம் அமைத்துச் சிவனை வழிபட்டாள் உமை அம்மை. வழிபாட்டைக் கெடுக்கக் கம்பை ஆற்றில் வெள்ளம் பெருகிற்று. உமை அம்மையின் உள்ளத்தில் உறுதி குலையவில்லை; மாறாக ஊக்கம் பெருகிற்று; கொண்ட செயலில் மீண்டும் காதலாகி விட்டாள். தான் வழிபடும் சிவலிங்கத்திற்கு வெள்ளத்தால் இடையூறு வாரா வண்ணம் காதன்மையோடு

சிவலிங்கத்தை அணைத்துக்கொண்டு காக்கலுற்றாள். உமையம்மையின் உறுதியையும் காதலையும் கண்ட இறைவன் திருவருள் புரிந்தான். உமையம்மை ஊக்கத்தோடும் ஒரே எண்ணத்தோடும் தான் கொண்ட செயலில் காதலாகி நின்றதனால் அச்செயல் வெற்றிபெற்றது. இந்த நிகழ்ச்சி மாணிக்கவாசகரின் உள்ளத்தைத் தொட்டது. அதன் உண்மையை உணர்த்த இந்த நிகழ்ச்சியைச் சுட்டி இறைவனிடத்து உறுதி வைத்துக் காதலாகி வழிபட வேண்டும் என்று கூறுகிறார் மணிவாசகர்.

வளம் நிறைந்த செடிகளையும் பெரிய சோலைகளையும் உடைய ஊர் திருப்பெருந் துறையாகும். அத் திருப் பெருந் துறையில் செழுமையும் வளமையும் உடைய மலர்களைத் தன்னகத்தே கொண்ட குருந்த மரத்தடியை விரும்பி வீற்றிருக்கும் சிறப்புமிக்க அடிகளாகிய இறைவனே! உடுக்கை வடிவம் போன்ற இடையை யுடையவள் உமையம்மை; மேலும் சுருண்டு நீண்ட அழகிய கூந்தலையும் உடையவள்; அவள் உம்மைக் காதலோடு தழுவினாள். உமது செந்தழல் மேனியிலுள்ள திருநீற்றுப் பூச்சு, உமையவளின் இருபெரும் முலைக்கண்களால் அழுத்தப்பெற்ற சுவட்டால் கலைந்து, அந்த இடத்தில் செந்தழல்மேனி வெளிப்பட்டு ஒளியை உமிழ்ந்தது. அத்தகைய ஒளி தங்கிய மார்பை உடைய சிவபெருமானே! நான் காதலோடும் ஒரே எண்ணத்தோடும் அன்போடும் விரும்பி உம்மை அழைத்தால் அஞ்சாதே என்று கூறி அருள் செய்வீர்களாக! என்கிறார்.

குறிப்பு:- உமையம்மை இறைவனைக் காதலொடு வழிபட்டாள்; வந்த இடையூற்றைச் சொந்த ஊக்கத்தோடு எதிர்த்து நின்றாள்; உளமாரச் சிவனை அன்போடு தழுவினாள்; இறை அருள்புரியச் செயலில் வெற்றிபெற்றாள். இதனைச்சுட்டி, இறைவனைக் காதலோடும் ஊக்கத்தோடும் ஒரே உறுதியோடும் தொடர்ந்து அன்போடு வழிபட்டால் இறையருள் தானே மலர்ந்து

மணக்கும் என்ற பேருண்மையை இப் பாடலில் புநித்துக்காட்டுகிருர் மாணிக்கவாசகர். மேலும் நீறு பூசிய சிவனடியாக இறைவனை வழிபடுவதைக் காட்டிலும் பெண்மை தழுவிய, முலைச் சுவடுபெற்ற மாதொரு பாகனை வழிபடலே மிகச் சிறந்தது என்பதையும் குறிப்பால் உணர்த் துகின்ருர்.

அதெந்துவே – அஞ்சாதே; திசைச்சொல்லாகும்.

திருப்பெருந்துறை:- இத்தலம் அறந்தாங்கியிலிருந்து 12 கல். ஆவுடையார் கோயில் என்ற மற்ருெரு பெயரும் உண்டு. மாணிக்கவாசகர் அமைச்சரா யிருந்தபொழுது, குதிரைவாங்கத் தாம் கொணர்ந்த பொருளைச் செலவிட்டு, இங்கு ஆலயத் திருப்பணி செய்துள்ளார். இறைவன் பெயர் ஆன்மநாதர். இறைவி பெயர் சிவயோக நாயகி. உருவங்கள் இல்லை. பீடங்களுக்கே பூசை உண்டு. தேவாரத்தில் வைப்புத் தலமாகச் சொல்லப் பெற்றுள்ளது. மாணிக்கவாசகர் உபதேசம்பெற்ற தலம் என்பர்.

இத்தல சம்பந்தமான நூல்கள்:-

சாமிநாதமுனிவர் இயற்றிய திருப்பெருந்துறைப் புராணம், சுந்தரலிங்கமுனிவர் இயற்றிய ஆதி கைலாச மான்மியம், சகாப்தம் 1550இல் இயற்றப் பெற்ற திருப்பெருந்துறைப் புராணம்,

திரிசிரபுரம் மகாவித்வான் மீனுட்சிசுந்தரம்பிள்ளை இயற்றிய திருப்பெருந்துறைப் புராணம், திருப்பெருந்துறை யமக அந்தாதி, சிவயோக நாயகி பிள்ளைத்தமிழ் முதலியன.

—கலைக்களஞ்சியம்
தொகுதி ஆறு; பக். 18

ஒப்புமை:—

எள்கல் இன்றி இமையவர் கோனை
ஈச னைவழி பாடுசெய் வாள்போல்
உள்ளத் துள்கி உகந்துஉமை நங்கை
வழிபடச் சென்று நின்றவா கண்டு
வெள்ளங் காட்டி வெருட்டிட அஞ்சி
வெருவியோ டித்தழு வவெளிப் பட்ட
கள்ளக் கம்பனை யெங்கள்பி ரானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே.

—சுந்தரர்

திருமுறை: 7. பதிகம்: 61. பா. எண்: 10.

தனமிட் டுஉமைதழு
வத்தழும் புற்றவர் தம்அடியார்
மனம்விட் டுஅகலா
மதிற்கச்சி ஏகம்பர்!

—பட்டினத்தார்

தி:11 திருஏகம்பமுடையார் திருவந்தாதி: பா. எண். 11

ஞாலம்தான் இடந்தவனும்
நளிர்விசும்பு கடந்தவனும்
மூலம்தான் அறிவரியார்
கண்ணளித்து முலைச்சுவட்டுக்
கோலம்தான் காட்டுதலும்
குறுகிவிழுந்து எழுந்துகளித்து
'ஆலந்தான் உகந்தவன்' என்
றெடுத்துஆடிப் பாடினர்!

—சேக்கிழார்

தி: 12; பெரிய புராணம்; ஏயர்கோன்கலிக்காம நாயனார்
புராணம்.பா. எ: 288.

பொருப்பரையன் மடப்பாவை
புணர்முலையின் முகடுதைத்த
நெருப்புருவம் வெளியாக
நீறணிந்த வரைமார்ப!

—நந்திக்கலம்பகம்

கடவுள் வாழ்த்து: பா. எ: 2.

# 24

## வித்தகனுர்

பத்திமையும் பரிசுமிலாப்
பசுபாசம் அறுத்தருளிப்
பித்தனவன் எனஎன்னை
ஆக்குவித்துப் பேராமே
சித்தமெனும் திண்கயிற்ருல்
திருப்பாதம் கட்டுவித்த
வித்தகனுர் விளையாடல்
விளங்குதில்லை கண்டேனே!

—மாணிக்கவாசகர்

தி. 8; திருவாசகம் கண்டபத்து: பா. எ: 7.

மனம் பொல்லாதது; தன் முனைப்பால் தான் எண்ணியவற்றையே செய்ய முற்படுவது; தீமை எனத்தெரிந்தும் பழக்கத்திற்கு அடிமைப்பட்டு அதனையே விரும்பும்; உணர்ச்சிக்கு ஆட்படும்; நான் செல்ல எண்ணும் இடந்தொறும் நம்மை இழுத்து ஏகும்; துன்பம் வரினும் தன் நிலையை மாற்றிக்கொள்ளாது; ஆனல் தூய அறிவை நாம் பெற்ருல் அவ்வறிவானது சிந்தனையைத் திருப்புகின்றது; நினைவோட்டத்தை ஒருமுகப் படுத்துகின்றது. மனத்தை அதன்போக்கில் செல்லவிடாது அடக்குகின்றது; தீமையை விளக்கி நன்மையை நாட வைக்கின்றது; ஆக அறிவானது மனத்தை அடக்குவதற்கு மிகச் சிறந்த கருவியாகும் என்பர் திருவள்ளுவர்.

சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்ப தறிவு. (பா. எ. 422)

இத்தகைய சிறப்புடைய அறிவினை நாம் பெறுவதற்கு வழிகாட்டியாக அறிஞர் ஒருவர் அமையவேண்டு மல்லவா? அங்ஙனம் வழிகாட்டியாக அமைபவர் நம் சிந்தனையைத்

தூண்டி அறியாமையை அகற்றி நல்வழிப்படுத்துபவ ராயிருக்கவேண்டும்; இவ்வாறு அறிவூட்டி வழிகாட்டுபவர் களை நாம் பேரறிவாளர் என்றுதானே அழைக்கின்றோம். மாணிக்கவாசகரும் தமக்கு வழிகாட்டிய ஒரு பேரறிவாளரை நமக்கு அறிமுகப் படுத்துகின்றார். அப்பேரறிவாளர் அதிசயமானவரும்கூட என்கின்றார். இறையருளாம் அறிவை நல்கி என்னை ஆட்கொண்டவர் பேரறிவாள ராகிய சிவபெருமான்தான் என்று அவர் புகழ் பாடுகின்றார். அப்பேரறிவாளரைப் பற்றி அவரே கூறுகின்றார்:—

நான் வாழ்க்கையில் பத்தி யற்றவனாக இருந்தேன்; பண்பாடற்றவனாக இருந்தேன். 'தான்'-என்ற அகங்காரம் உடையவனாக இருந்தேன்; மண்ணுலக வாழ்வில் கட்டுண்டு அறியாமை வயப்பட்டவனா யிருந்தேன்; ஆனால் சிவ்பெருமானாகிய பேரறிவாளர் என்னை ஆட்கொண்டார்; அவர் அருளினால் என் சிந்தனைகளை ஒருமுகப்படுத்தினார்; ஐம்புல உணர்வுகளைக் கட்டுப்படுத்தினார்; ஒருவிதத் தன்மையுமற்றிருந்த என்னைப் பண்பாடு உடையவனாக ஆக்கினார்; பிறவி நோயையும். இம்மண்ணுலக வாழ்வுத் தளைகளையும் அறுத்துத் தள்ளினார்; அறியாமை விலகிற்று; இறை உணர்வு பிறந்தது; பத்தி உணர்வு பெருகிற்று; என்னை நான் மறந்தேன்; நான் மறக்கினும் என் நா அவர் நாமம் புகன்றது; அவர்மேல் பித்தாகினேன்; உலகினர் என்னைப் பித்தன் என்றே உரைத்தனர். இங்ஙனம் என்னைச் சிவபித்தன் என்று உலகினர் சொல்லுமளவுக்கு என்னைப் பத்தி உணர்வினனாக ஆக்கினார்; இடையில் வினைவயத்தால் என் பத்தி உணர்வு சிதறிப் பெயராவண்ணம் – என் உணர்வை - ஐம்புல உணர்வை - ஒருமுகப்படுத்தினார். என் நினைவுகளைக் கொண்டே என் நினைவு என்னும் வலிமை வாய்ந்த கயிற்றினால் அவரது திருவடியைக் கட்டி என் மனத்தினின்றும் விலகாவண்ணம் அங்கேயே இருக்குமாறு செய்தருளினார்; இறையறிவை நல்கினார்; இறையை உணர்ந்தேன்; இவ்வாறு அறிவற்ற எனக்கு அறிவூட்டி அருளும் அளித்த பேரறிவாளர்தான் ஆனந்த நடமிடும்

பாதனாகிய நடராசப்பெருமான் ஆவார். அவருக்கு இம்மாதிரி செய்வதெல்லாம் திருவிளையாடல் போலும்! இத்தகைய பேரறிவாளரின் திருவிளையாடல்கள் பலவற்றையும் அருள் விளங்கும் தில்லைப் பதியின்கண் அவர் அருளால் கண்டேன் நான் என்கின்றார் மணிவாசகப் பெருமான்.

குறிப்பு: அறிவானது உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தும்; உள்ளத்தைத் திருத்தும்; பண்படுத்தும்; உயர்த்தும், இஃது உலக அறிவின் செயல்களாகும்; ஆனால் இதற்கும் மேலாகப் பிறவி நோயையும், பிறந்த உலகின் வாழ்க்கைத் தளையையும் வேர் அறுக்கும் ஆற்றல் இறையறிவின் பாற்பட்டதாகும் என்கின்றார். ஆகவேதான் இறையறிவைப் பேரறிவு—வித்தகம் என்ற சொற்களால் சுட்டி அழைக்கின்றார் மணிவாசகப் பெருமான். மேலும் ஒருமையுடன் இறைவனது திருவடி மலரினை உள் மனத்தால் நினைந்து தொழுவோமேயானால் இறையருள் தானே வெளிப்பட்டு அருள்புரியும் என்ற உண்மையையும் பெறவைக்கின்றார்.

இப்பதிகம், தில்லையில் இறைவன் திருநடனம் கண்டு களித்து, அக்களிப்பின் மிகுதியால் மணிவாசகரால் பாடப்பெற்றது என்பர்.

பரிசு-தன்மை; பசு-உயிர்: ஈண்டு உயிர்களின் பிறவித்துயர் எனக் கொள்க;

பாசம்-தளை;- வித்தகனார்—பேரறிவாளர்

ஒப்புமை:

உய்த்தவன்காண் உயர்கதிக்கே யுள்கி னாரை
உலகனைத்தும் ஒளித்தளித்திட் டுய்யச் செய்யும்
வித்தகன்காண் வித்தகர்தாம் விரும்பி ஏத்தும்
விண்ணிழிதண் வீழி மிழலை யானே!

—திருநாவுக்கரசர்
தி. 6; ப; 266. பா. எ, 8

அளைவாயில் அரவசைத்த அழகன் தன்னை
ஆதரிக்கும் அடியவர்கட் கன்பே யென்றும்
விளைவானை மெய்ஞ்ஞானப் பொருளா னானை
வித்தகனை

—திருநாவுக்கரசர்
திருமுறை 6. பதிகம் 281 பா. எ. 3

வித்தகன் நந்தி விதிவழி யல்லது
தத்துவ ஞானிகள் தன்மைகுன் றுரன்றே!

—திருமூலர்
தி:10 திருமந்திரம் பா. எ. 2803

உள்ளத்தை யுமிங்கெ னையுநின்
கையினில் ஒப்புவித்தும்
கள்ளத்தைச் செய்யும் வினையால்
வருந்தக் கணக்குமுண்டோ
பள்ளத்தின் வீழும் புனல்போற்
படிந்துன் பரமஇன்ப
வெள்ளத்தின் மூழ்கினர்க் கேளி
தாந்தில்லை வித்தகனே!

—தாயுமானவர்.
திருப்பாடல்கள்; பாயப் புலி. பா. எ. 40;

## 25

### உடைமைப் பொருள்

அன்றே என்றன் ஆவியும்
உடலும் உடைமை யெல்லாமும்
குன்றே அனையாய் என்னையாட்
கொண்ட போதே கொண்டிலையோ
இன்றோர் இடையூ றெனக்குண்டோ?
எண்தோள் முக்கண் எம்மானே!
நன்றே செய்வாய் பிழைசெய்வாய்
நானோ இதற்கு நாயகமே!

—மாணிக்கவாசகர்

தி: 8; திருவாசகம்; குழைத்தபத்து பா எண். 7.

ஒருவர் தம்பொருளைப் பிறர்க்குக் கொடுக்கலாம்; மற்றவரும் அப்பொருளைப் பெற்றுக் கொள்ளலாம். பெற்றுக்கொண்டவர் வாங்கிய அப்பொருளைச் சீர்திருத்தலாம்; சிதைக்கலாம்; அல்லது அழிக்கலாம். எது வேண்டுமானாலும் செய்யலா மல்லவா? பொருளைக் கொடுத்தவரோ அப்பொருளைப் பற்றி எதுவும் கேட்க முடியாது; அவருக்கு எவ்வித உரிமையும் இல்லை; இஃது இயற்கைதானே! மணிவாசகப் பெருமானும் பொருளைக் கொடுத்தவர் நிலையை அடைந்தார். அடிகளும் இறைவனைக் கண்டார்; அன்பு மேலிடப் பெற்றார்; தன்னுடைய உடல்-பொருள் உயிர் அனைத்தையும் இறைவனிடம் ஒப்படைத்துவிட்டார்; இறைவனும் மணிவாசகரை ஆட்கொண்டு விட்டார். இறைவன்பால் எல்லாவற்றையும் ஒப்படைத்த மணிவாசகர் பின் தன் உடலைப் பற்றியோ உள்ளத்தைப் பற்றியோ கவலைப்பட வேண்டியதில்லை யல்லவா? அவ்வாறே தான் எதற்கும் கவலை கொள்ளவில்லை என்றும், இறைவனே, நீ ஆட்கொண்ட பொருளை எது செய்யினும் செய்கஎன்றும் இறைவனை நோக்கி இப்பாடலில் மிக அழகாகக் கூறுகின்றார் மணிவாசகர்.

எட்டுத் தோள்களையும் மூன்று திருக் கண்களையும் உடையவராய்த் திருப்பெருந்துறையில் வீற்றிருந்து அருளும் எம்பெருமானே! மலையைப் போன்றுபெருமைமிக்க தலைவனே! உன்னைக் கண்டு கைதொழுதேன். கைதொழுத அன்றே என் உயிரையும், என் உடலையும், என் உடைமையையும் ஏற்று ஆட்கொண்டு அருளினாய்! இங்ஙனம் அன்றே என் உயிர்-உடல்-உடைமை எல்லாவற்றையும் ஏற்றுக்கொண்டது உண்மையாயிருக்க, இன்று எனக்கு ஒருசிறு துன்பமாயினும் உண்டாகுமா? இறைவா! ஆகவே நீ ஏற்றுக்கொண்ட பொருள்களைக் கொண்டு நல்லதைச் செய்யினும் செய்வாய்; இல்லை நல்லது அல்லாதனவற்றைச் செய்யினும் செய்வாய்; எது செய்யினும் செய்வாயாக; இனி அப்பொருள்களுக்கு நானா நாயகன்; இல்லை; நீயல்லவோ நாயகன்! என்று கூறுகின்றார்.

குறிப்பு:– மணிவாசகப் பெருமான் இறைவனை இறைஞ்சினார்; அவன் அருளை நாடித் தவங்கிடந்தார். இறைவன் அவர் அன்பை ஏற்று அருளை ஈந்தான். அவ்வருள் மணிவாசகர் தம் உள்ளத்தை ஆளுகின்ற அகந்தையையும், குறுகிய மன உணர்வையும் அகற்றியது. துன்பமே அணுகாத தூய்மை நிலையை அடைந்தார். அந்த நிலையை அடைந்தவர் இறைவனை நோக்கி, 'என்னை ஏற்றுக்கொண்ட நீ! நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகன்' —என்று இலக்கிய நயந்தோன்ற இறையருளை வாழ்த்துகின்றார். மேலும் நோயுற்றவர் தம் உடலை மருத்துவர் பால் ஒப்படைப்பது போன்று இறைவனிடத்து நம்மை ஒப்படைத்து, அவனே 'கதி' என்று இருந்தால் அவன் நம்மைக் காப்பான் என்று. அடைக்கலப் பொருளாகும் தத்துவத்தைப் பதியுமாறு கூறுகின்றார் மணிவாசகர். இதனை வடமொழி நூலார் சரணாகதி தத்துவம் என்றுரைப்பர்

**ஒப்புமை:**

உடல்பொருள் ஆவி உதகத்தாற் கொண்டு
படர்வினை பற்றறப் பார்த்து

—திருமூலர்
தி; 10: திருமந்திரம்; பா. எ: 1778

எனதாவி யுள்கலந்தபெரு
நல்லுதவிக் கைம்மாறு
எனதாவி தந்தொழிந்தேன்
இனிமீள்வதென்பதுண்டே?
எனதாவி ஆவியும் நீ
பொழில் ஏழும் உண்டஎந்தாய்
எனதாவியார்? யான்ஆர்?
தந்த நீ கொண்டாக்கினையே.

—நம்மாழ்வார்
திருவாய்மொழி பா. எ. 2810

கடுவினைப் பாசக் கடல்கடைந்து ஐவர்
கள்ளரை மெள்ளவே துரந்துன்
அடியிணை இரண்டும் அடையுமாறு அடைந்தேன்;
அருள் செய்வாய்; அருள்செயா தொழிவாய்;
நெடுநிலை மாடத்து இரவிருள் கிழிக்க
நிலைவிளக்கு அலகில்சா லேகம்
புடைகிடந்து இலங்கும் ஆவண வீதிப்
பூவணங் கோயில்கொண் டாயே!

—கருவூர்த் தேவர்
தி: 9: திருவிசைப்பா திருப்பூவணம்; பா. எ, 5

வாழ்த்துவாய் வாழ்த்தா தொழிவாய் மறுசுழியுட்
டாழ்த்துவாய் அஃதறிவாய் நீயன்றே—யாழ்த்தகைய
வண்டார் பொழிற்கயிலை வாழ்கென் றிருப்பதே
கண்டாய் அடியேன் கடன்.

—நக்கீரர்
திருமுறை. 11 கயிலைப்பாதி காளத்திபாதிஅந்தாதி
பா. எண்; 23,

## 26

## என் செய்கேன்!

ஆர்க்கோ அரற்றுகோ
ஆடுகோ பாடுகோ
பார்க்கோ பரம்பரனே
என்செய்கேன்!—தீர்ப்பரிய
ஆனந்த மாலேற்றும்
அந்தன் பெருந்துறையான்
தானென்பார் ஆரொருவர்
தாழ்ந்து!

—மாணிக்கவாசகர்

தி: 8; திருவாசகம்: திருவெண்பா. பா. எண்: 2.

காதல்வயப்பட்ட உள்ளத்திற்குக் காதலன் பெயரும் இனிக்கும்; அவன் உரையும் இனிக்கும்; அவனோடு தொடர்புடைய பொருள்களைக் காணுந்தோறும் உள்ளம் இனிக்கும்; எங்கேனும் யாராயினும் அவன் ஆற்றிய செயலின் புகழையோ—திறத்தையோ கூறிவிட்டால், அதனைக்கேட்டுக் கிடைக்காத ஒன்று கிடைத்ததாகக் கொண்டு மகிழத் தோன்றும்; அவ்வின்பத்தில் மூழ்கத் தோன்றும். இஃது இயற்கை! மணிவாசகப்பெருமான் திருப்பெருந்துறை இறைவனிடத்து ஆராத காதல் கொண்டார். பேரன்பு மிகுதியால் அவரை எண்ணி எண்ணிக் களித்தார். யாராவது அவன் புகழைப்பேசிப் பாடமாட்டார்களா என்று ஏங்கினர். இறை நினைவாம் இன்பவெள்ளத்தில் மூழ்கினர். காதல் நிலையில் நின்று அவரே பேசுகிறார்.

எல்லாவற்றிற்கும் மூலப்பொருளாகி யிருக்கும் பரம் பொருளே! எவ்வுலகிலும் யாராலும் போக்கமுடியாத பேரின்பத்தைத் தருபவன் நீயே என்றும், அவ்வின்பத்திலே திளைத்து மூழ்கும்படியான மயக்கத்தைத் தருபவன் நீயே என்றும், எல்லாவற்றிலும் உயர்ந்தோனாய் இருப்பவனும்

நீயே யென்றும் திருப்பெருந்துறையிலே வீற்றிருந்து அருளுபவனும் நீயே என்றும் உன் புகழை என்பால் யாராவது கூறமாட்டார்களா? அங்ஙனம் கூறியவர்களை வணங்கி, அவர்தம் இன்பச் சொல்லைக் கேட்டு ஆரவாரிக்க மாட்டேனா! அலற மாட்டேனா! பாடிப் பாடிக் களிக்க மாட்டேனா! அவர்களைப் பார்த்துப் பார்த்துப் பூரிக்க மாட்டேனா! இறைவா என்ன செய்கேன்! என்கின்றார்.

குறிப்பு:- இறைவன் திருநாமத்தை மனத்தால் சிந்திப்பதால்—மனத்தால் வழிபடுதலையும், அவன் புகழைக்கேட்டுக் கூத்தாடுவதால் உடலால் வழிபடுதலையும், அவன் புகழைப் பாவில் பாடுதலால் வாக்கால் வழிபடுதலையும் ஆக மனம் - உடல்-வாக்கு மூன்று நிலை வழிபாட்டினையும் இப்பாடலில் குறிக்கின்றார் மணிவாசகப் பெருமான். மேலும் இறைவனைப் பற்றிப் பலநூறு திருவாசகப் பாடல்கள் பாடியும் இன்னும் அவன் திறமுரைத்துப் பாடவேண்டும் என்ற அவ்வுள்ளத்தின் ஏக்க உணர்வும் இப்பாவால் பெறப் படுகின்றது. பாடலின் இரண்டாவது அடியிலுள்ள 'என்செய்கேன்'—என்ற தொடர் பத்தி உள்ளத்தின் முற்றிய உணர்வை வெளிப்படுத்தி நிற்கக் காணலாம்.

ஒப்புமை:—

வாயே! வாழ்த்துகண்டாய்—மத
யானை யுரிபோர்த்துப்
பேய்வாழ் காட்டகத்து ஆடும்பி ரான்தன்னை
வாயே! வாழ்த்து கண்டாய்!

—திருநாவுக்கரசர்

திரு அங்கமாலை. தி: 4. ப: 9. பா. எ: 5.

ஆடுமின் அன்புடையீர் அடிக்காட்பட்ட தூளிகொண்டு
சூடுமின் தொண்டருள்ளீர் உமரோடுஎமர் சூழவந்து
வாடுமிவ் வாழ்க்கைதன்னை வருந்தாமல் திருந்தச்சென்று
பாடுமின் பத்தருள்ளீர் பழமண்ணிப் படிக்கரையே!

—சுந்தரர்

திருமுறை; 7; பதிகம்: 22; பா. எ: 3.

ஆடிப்பாடி அரங்கவோ என்றழைக்கும்
தொண்டரடிப் பொடி
ஆடநாம் பெறில் கங்கைநீர் குடைந்தாடும்
வேட்கை என்னுவதே!

—குலசேகரப்பெருமாள்

பெருமாள் திருமொழி. பா. எ: 659,

# 27

## குமரனும் குமரியும்

**கோவினைப் பவளக் குழுமணக் கோலக்**
**குழாங்கள் சூழ்கோழிவெல் கொடியோன்**
**காவல்நற் சேனையென் னக்காப் பவன்என்**
**பொன்னை மேகலை கவர்வானே?**
**தேவின்நற் றலைவன் திருவிடைக் கழியில்**
**திருக்குரா நீழற்கீழ் நின்ற**
**தூவிநற் பீலி மாமயி லூரும்**
**சுப்பிர மண்ணியன் தானே!**

—சேந்தனர்

திருமுறை. 9. திருவிசைப்பா. திருவிடைக்கழி. பா. எ. 3.

பொதுவாகப் பொருள்களைக் காக்க வேண்டுமானல் காவலர்களை ஏற்படுத்துவதுண்டு; இஃது இயற்கை. ஏற்படுத்திய காவலர்களே அப்பொருளைக் கவர்வார்களே யானல், என்ன செய்வது? காப்பவர் காக்கும் தொழிலை விட்டுக் கவரும் தொழிலை மேற்கொண்டால் உலகந்தான் என்ன ஆவது? திருவிடைக்கழி என்னும் தலத்தில் முருகப்பெருமான் திருவிழா நடந்தது. உலாவரும் முருகனை ஒரு பெண் பார்த்தாள். குமரன் அழகில் குமரி தன்னை இழந்தாள்; காதலானுள்; காதல் முற்றி வாடினுள்; உடல்நலமிழந்தாள்; தோள்-இடை-முதலியன மெலிந்தன; இதனைக் கண்டாள் அவளுடைய தாய்; மகள் துயரத்தைக் கண்டு மயங்கினுள். ஈண்டு முருகன்பால் கொண்ட பத்தி நிலையில் சேந்தனர் தாயாகவே மாறிவிட்டார். தாய் தனக்குள்ளே சொல்லிக் கொள்ளுகிருள்.

சுப்பிரமணியக் கடவுள் திருவிடைக்கழி என்னும் ஊரை உடையவர்; அங்கு அழகிய குராமரத்தின் நிழலில் விற்றிருப்பவர்; சிறந்த இறகுகளையும் நல்ல தோகை யினையும் உடைய மயிலை வாகனமாக உடையவர்; மேலும் அவர் தேவர்களுக்கெல்லாம் தலைவர்; பவளமாலைகள் அணிந்து இளமையும் ஆற்றலும் கொண்டு மணக்

கோலத்துடன் கூடிய வீரர்களால் சூழப்பெற்றவர்; வெற்றி பொருந்திய கோழிக்கொடியை உடையவர்; அதுமட்டுமா? காக்கும் ஆற்றல் படைத்த சேனுதிபதியைப் போன்று துன்பம் துடைத்து யாவற்றையும் காக்க வல்லவர்; இங்ஙனம் காக்கும் ஆற்றலுடைய அவரே, தம்மைக்கண்டு காதலுற்றுப் பசலையை அடைந்த என் பெண்ணைக் காப்பாற்ருது அவள்தம் இடையணியாகிய 'மேகலை' என்னும் அணியைக் கவர்ந்து செல்வாரா? இஃது காத்து அருளுகின்ற அவருக்கு அழகாகுமா? என்கின்ருள்.

குறிப்பு:- காப்பவர் களவாடலாமா? என்பது பழமொழி· இப்பழமொழியை வைத்துக் காக்கவல்ல முருகன் கன்னிப்பெண்ணின் உள்ளத்தையும் அழகையும் கவர்ந்து செல்லலாமா? என்று தாய் நிலையில் நின்று பேசுகின்ருர் சேந்தனுர். இங்ஙனம் பேசுவதின்மூலம் முருகனை அழகும் அருளும் இணைந்த உருவினனுகவும், ஊரும் உலகும் உயர்குலமும் படைத்துக் காப்போனுகவும் நம் கண்முன் கொண்டுவந்து காட்டுகின்ருர். மேலும் மயிலேறி விளையாடும் மால்மருகனை உள்நினைந்து உள்ளுருகி வழிபடவேண்டும் என்றும் உணர்த்து கின்ருர் சேந்தனுர்.

பொன்னை என்ற இடத்துக் காதல் மீக்கூரப் பசலை நிறம் கொண்ட பெண்ணை எனக்கொள்க.

திருவிடைக்கழி - சோழ நாட்டில் காவிரிக்குத் தென்பால் உள்ள சிவத்தலமாகும். முருகப்பெருமானுக்குரிய முதன்மைத் தலம். இங்குத் தேவயானை யம்மையார் முருகனிடம் திருப்பரங்குன்றம் செல்ல விடை கேட்டதாலும், முருகப் பெருமான் இரணியா சுரனைக் கொன்ற பழி நீங்க இறைவனைப் பூசித்துப் பழி கழியப் பெற்றதாலும் இவ்வூரைத் திருவிடைக்கழி என்பர்.

**சேந்தனர்:-** சைவத்திருமுறைகள் பன்னிரண்டில் ஒன்பதாந் திருமுறையைப் பாடிய ஒன்பதின்மரில் ஒருவர் ஆவார்; இவர் தில்லைப்பதியில் மார்கழித் திருவாதிரைத் திருவிழாவில் ஓடாது தடைப்பட்டு நின்ற திருத்தேரைத் 'திருப்பல்லாண்டுப்' பதிகம் பாடித் தேர் ஓடும் நிலையினைச் செய்தார் என்பர். மேலும் திருவீழிமிழலை, திருவாவடுதுறை, திருவிடைக்கழி என்ற மூன்று தலங்களுக்கும் திருவிசைப்பாப் பதிகம் பாடியுள்ளார். திருவிடைக்கழி என்ற தலத்தில் ஒரு திருமடம் அமைத்துச் சிவப்பணி செய்துள்ளார். தைப்பூச நன்னளில் சேந்தனர் சிவபெருமான் திருவடி அடைந்தார் என்பர்.

சேந்தனர்தம் செந்தமிழைப் பற்றிய பாடல்:-

சித்தம் தவமாக்கும்;
    சிற்றம் பலம்சேர்க்கும்;
அத்தன் பொடியின்
    அழகுணர்த்தும்—முத்துமிழும்
பாந்தள்பூண் டானுக்கே
    பல்லாண்டுப் பாட்டிசைக்கும்
சேந்தனர் தம்செந் தமிழ்!

—ரெ. முத்துக்கணேசன்

**திருவிசைப்பா:-** சைவத்திருமுறை பன்னிரண்டில்

திருவிசைப்பா ஒன்பதாம் திருமுறையாகும். இப் பாடல்களைப் பாடியவர்கள் ஒன்பதின்மர் ஆவர். அவர்கள் முறையே:–

திருமாளிகைத்தேவர், சேந்தனர், கருவூர்த்தேவர், பூந்துருத்தி நம்பி காடநம்பி, கண்டராதித்தர், வேணுட்டடிகள், திருவாலியமுதனர், புருடோத்தம நம்பி, சேதிராயர் ஆவர்.

கிடைத்த மொத்தப் பாடல்கள் 301 ஆகும்.

ஒப்புமை:-

தானே உலகாள்வான்
தான்கண்ட வாவழக்கம்
ஆனுன்மற் ருர்இதனை
அன்றென்பர்—வானோர்
களைகண்டா ஞய்நின்ற
காளத்தி யாள்வார்
வளைகொண்டார் மால்தந்தார்
வந்து!

—நக்கீரர்.

திருமுறை 11: கயிலைபாதிகாளத்திபாதிஅந்தாதி
பா எ.: 82.

## 28

### நீதியோ?

அருள்செய் தாடுநல் லம்பலக்
    கூத்தனே அணிதில்லை நகராளீ
மருள்செய் தென்றலை வனமுலை
    பொன்பயப் பிப்பது வழக்காமோ?
திரளும் நீள்மணிக் கங்கையைத்
    திருச்சடைச் சேர்த்திஅச் செய்யாளுக்கு
உருவம் பாகமும் ஈந்துநல்
    லந்தியை ஒண்ணுதல் வைத்தோனே.

—திருவாலியமுதனர்
தி: 9. திருவிசைப்பா; கோயில்-2; பா. எ: 4

புகழும் செல்வமும் பெற்ற ஒருவரைப் பலர் நாடிச் செல்லலாம்: அப் புகழுக்குரியவர் ஒருசிலர்க்கு மட்டும் நன்மையையும், மற்றும் சிலருக்குத் தீமையையும் புரிந்தால் அவர் செய்வது நீதியா என்று மக்களாகிய நாம் கேட்போமல்லவா? தன்னை அடைந்தவர்கள் எல்லோருக்கும் நன்மை புரிவதுதான் புகழுக்குரிய செயலாகும். வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டிய நீதியுமாகும். ஒரு பெண் தில்லையில் ஆடும் அம்பலக் கூத்தனைக் காதலித்தாள். காதல் வேதனை பெருகிற்று; வாடினள்; பருவ அழகு அழிந்தது; வெளிறிய சோகை நிறத்தைப் பெற்றாள்; காதலனைக் கண்டு கைதொழும் தனக்குக் காதலன் அருள் செய்யவில்லையே என்று ஏங்கித் தனக்குள்ளே சொல்லிக்கொள்கிருள். ஈண்டுத்திருவாலியமுதனர் தலைவியாகவே மாறிவிடுகின்ருர்; மாறிய தலைவி தனக்குள்ளே சொல்லிக் கொள்கின்ருள்.

அழகிய தில்லை நகரில் வீற்றிருந்து ஆளுகின்ற அரசே! அடைக்கலமாக வந்த உயிர்களுக்கு அருள்புரிந்து, உலகம் வாழச் சிற்றம்பலத்தே திருநடனம் புரிகின்ற

கூத்தப்பெருமானே! திரண்டு நீண்டு நதியாக ஓடிவரும் கங்கையானவள் உம்மையே நினைந்து வழிபட்டாள்; கங்கையாகிய அப்பெண்ணை உம் திருச்சடையில் சேர்த்து வைத்துள்ளீர்! செம்மைத்தன்மை வாய்ந்த உமையம்மைக்கு உம்முடைய திருவுருவில் செம்பாதியை அளித்துள்ளீர்! மேலும் காதல் நோயுற்றூர்க்கு முடிவுகாலம் போலத் துன்புறுத்தும் மாலைக் காலத்தையும் படைத்துப் பொருத்தமாக அமையுமாறு வைத்திருப்போரே! அழகாற்றலால் என்னை மயக்கிக் காதல் நோயைத் தந்தீர்! அக்காதல் நோயால் பொன்நிறமான அழகிய என் வனப்பு வாய்ந்த முலைகள் அழகிழந்து வெளிறிய சோகை நிறத்தைப் பெற்றன. இங்ஙனம் உம்மையே கதியென்று கைதொழுத எனக்கு நீர் செய்வது நீதியாகுமா? சொல்வீர்! என்கின்றாள்.

குறிப்பு:- கூத்தப்பெருமானை நாடியவர் மூவருள்ளும் கங்கைக்கும், உமைக்கும் இறைவன் இன்பத்தை அளித்துத் தனக்குமட்டும் துன்பம் தருவது நீதியாகுமா? என்று தலைவி கேட்கின்றாள். இங்ஙனம் சுவைபடக் கேட்பதின் மூலம் கூத்தப்பெருமானிடத்து வைத்த தலைவியின் காதல் வேட்கை புலனாகக் காண்கின்றோம்; மேலும் தான் துன்புறுவதற்கென்றே அந்திப் பொழுதை இறைவன் படைத்தனனே எனக் காதல் உள்ளம் எண்ணுகின்ற காட்சியினையும், நாடிவந்தவர்களுள் இருவருக்கு இன்பமும் எனக்குத் துன்பமும் தருவது நீதியாஎன்று கேட்கும் இலக்கியச் சுவையினையும், ஒரே நிலையில் நின்று இறைவனை வழிபட்டால் இறைவன் அருள் தானே சுரக்கும் என்ற குறிப்பினையும் ஒரு சேரத் தருகின்றது இப்பாடல்.

பொன்பயப்பிப்பது:- பொன்நிறம் மாறிச் சோகை படர்ந்த வெளிற்று நிறம் அடையுமாறு செய்வது. பசப்பு—பயப்பு என ஆயிற்று; பசப்பு-சோகை

படர்ந்த வெளிற்று நிறம்; மகளிர்க்குக் காதல் பிரிவில் பருவ காலத்தே உண்டாகும் நிற வேறுபாடு.

அந்தியை ஒன்னுதல்வைத்தோனே-என்பதற்குக் காதல் நோயுற்றூர்க்கு முடிவுகாலம் போன்று துன் புறுத்தும் மாலைக் காலத்தைப் படைத்துப் பொருந்த அமையுமாறு வைத்திருப்போரே! எனப் பொருள். மாலைக்காலம் என்னும் கூற்று வனைத் தனக்கென்றே இறைவன் படைத்தனன் என எண்ணும் காதலியின் சுவை உள்ளம் எண்ணி மகிழத் தக்க தொன்ருகும். இதனைத் திருவள்ளுவர்—

மாலையோ அல்லை
மணந்தார் உயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது! (பா. எ, 1221)

என்றும்,

பனிஅரும்பிப் பைதல்கொள்
மாலை துனிஅரும்பித்
துன்பம் வளர வரும்! (பா. எ: 1223)

என்றும் கூறுவர்.

**திருவாலியமுதனுர்:–** இவர் திருவிசைப்பாப் பாடிய ஒன்பதின்மரில் ஒருவராவார். சோழநாட்டிலுள்ள திருவாலி என்னும் ஊரினர் ஆவர். அமுதன் என்பது இயற்பெயர் என்பர். இவர் பாடிய பதிகங்கள் நான்கும் சிதம்பரத்தைப் பற்றியவை. திருவாலியமுதனுர்தம் அமுதத் தமிழைப் பற்றிய பாடல்:—

அணிதில்லைக் கூத்தன்
அடிமுடியின் அங்க
அணிகாட்டும் கண்ணுடி
ஆகும்—மணிவாய்
அமுதன் அடிப்ரவி
ஆலிநகர் வாழும்
அமுதன் அமுதத் தமிழ்.

—ரெ. முத்துக்கணேசன்

## 29

## அம்பலவரும் அணங்கும்

வானவர்கள் வேண்ட
　　வளர்நஞ்சை உண்டார்தாம்
ஊனம்இலா என்கை
　　ஒளிவளைகள் கொள்வாரோ?
தேனல்வரி வண்டறையும்
　　தில்லைச்சிற் றம்பலவர்
நான்நமரோ என்றுதே
　　நாடகமே ஆடுவரே!

—புருடோத்தம நம்பி

தி: 9: திருவிசைப்பா; பா. எண்: 1.

காதல் உணர்ச்சியானது மிகுமே யானல் அறிவின் ஆளுகைக்கு உட்படாது; அறிவை அடிமை யாக்கிஆட்டிப் படைக்கும்; வாழ்வில் நிகழ்கின்ற எல்லாவித நிகழ்ச்சி யோடும் காதலனைப் பற்றியும் அவன் திறமையைப்பற்றியும் தொடர்பு படுத்திப் பேசி மகிழும். தலைவி ஒருத்தி தலைவன் பால் காதல் கொண்டாள். தலைவனை நினைந்து வருந் தினள். அவன் வருவான் துயர்தீர்ப்பான் என்றெல்லாம் ஏங்கினள். காதல் துன்பம் கடுமையாகி வாட்ட மேனி தளர்ந்தாள், அடிக்கடி கைவளையல்கள் அவளை அறியாது கழன்றன. தலைவனே வருவதாகக் காணோம்! இந்த நிலையில் தலைவி தோழியிடம் இரக்கத்தோடு தலைவன் புகழ் பாடுகின்றாள். புருடோத்தம நம்பியார் தில்லை நடராசப் பெருமானிடம் அளவுகடந்த பத்தி கொண்டவர்; அவன்பால் அன்பு மேவிடப் பெற்றவர்; அன்பு முதிரக் காதல் தலைவியாக மாறி நின்று இங்குப் பேசுகின்றார்.

நல்ல இசைப்பாடல்களை ஒலிக்கின்ற தேன் வண்டுகள் உறையும் ஊர் தில்லையாகும். அங்குச் சிற்றம்பலத்தே நடமாடுபவர் நடராசப் பெருமான். தேவர்கள் திருப்பாற்

கடலைக் கடையுங் காலத்து வாசுகி என்ற பாம்பு வெளிப்படுத்திய ஆலகால நஞ்சு உலகை அழிக்கப் பெருகி வளர்ந்தது. காக்குமாறு தேவர்கள் வேண்டினர். உடனே சிவபெருமான் வளர்கின்ற நஞ்சை உண்டு அவர்களைக் காத்தார். ஆனால் நான் ஒரு குற்றமும் செய்யாதவள், மேலும் என்னை ஏற்றுக்கொள்க என்று வேண்டிக் கொண்டவள்; அதுமட்டுமா? காதலியானபடியால் நான் நெருங்கி ஒன்றிவிட்ட உறவினள். இவற்றை எல்லாம் எண்ணிப் பார்க்காது, நஞ்சையே உண்டு தேவர்களுக்கு அமுதமீந்து அன்புசெய்த அவர் என்னுடைய ஒளி கொண்ட வளையல்களையும் கவர்ந்துகொண்டு மேலும் எனக்குத் துன்பத்தையும் கொடுக்கின்றாரே! அவர் ஒழுங்காக நடனம் மட்டும் ஆடுபவரல்லர்; நன்றாக நடிப்பதிலும் வல்லவர்; ஆமாம் நாடகமே ஆடுவார்; காண்பாயாக! என்கின்றாள்.

குறிப்பு; காதலில் காதலியின் உள்ளம் தலைவன் தன்னை நாடிவந்து துயர் தீர்க்கவில்லையே என்று வருந்துகின்றது; வருந்திய நிலையிலும், அழிக்கவரும் ஆலகால நஞ்சை உண்டு தேவர்களைக் காத்த கருணை நெஞ்சம் படைத்தவரல்லவா - அவர்? என்று அவர் அன்பை எண்ணிப் பெருமைப் படுகின்றது; மற்றவர்பால் அன்பைப் பொழியும் அவர், தன் காதலை மட்டும் உணராது தன் வளையல்களைக் கவர்ந்து கருணைகாட்டாது கடுமையாளராகத் தன்னைத் துன்புறுத்துகின்றாரே என்று எண்ணிக் குமுறுகின்றது; மேலும் ஒருபால் அன்புடையராகவும் மற்றொருபால் வன்கண்மை உடையராகவும் ஒருவேளை நடிக்கின்றாரோ என்று ஐயுற்றுக் குழம்புகின்றது; இருந்தாலும் எப்படியும் தன்பால் வருவாரென்றும் தன்னைக் கைவிடார் என்றும் நம்பிக்கை பிறக்க உள்ளம் அமைதி பெறுகின்றது; இவ்வாறு காதலில்காதல் உள்ளங்கள் தடுமாறித் துன்புற்றுப் பின் தாமாகத் தேறுகின்ற விந்தையை

மிகத் தெளிவாகக் காட்டி நிற்கின்றது இப்பாடல். மேலும், நாடகமேடையில் மறைக்கப்பட்டிருந்த திரை விலகியதும் நாடகத்தை மிக நன்ருகக் கண்ணுறுவது போல, வாழ்வில் அஞ்ஞானம் என்னும் இருளாம் திரை விலகுங் காலத்து மெய்ஞ்ஞானமாகிய இறைவன் தானே காட்சிநல்கி அருள் புரிவான் என்ற மெய்யுணர்வுத் தத்துவத்தைத் தலைவன் தலைவியர் காதலில் வைத்துக் காட்டுகின்ருர் புருடோத்தம நம்பியார். இதனைத் திருவள்ளுவரும்,

"இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு" அறம்: பா, எ- 352

என்பர்

**புருடோத்தம நம்பி**

இவர் திருவிசைப்பாப் பாடிய ஒன்பதின்மரில் ஒருவராவர். இவர் பாடிய பதிகங்கள் இரண்டும் சிதம்பரத்தைப் பற்றியவை.

புருடோத்த நம்பிதம் தமிழைப் பற்றிய பாடல்:

ஆயிழையாய் மாறும்;
அரவாடும் அம்பலவன்
தூயநிறை காதல்
துதிபாடும்; —கோயில்வாழ்
கோநலமே எண்ணும்;
குலப்புரு டோத்தமன்
நாநலஞ்சால் நம்பி தமிழ்!

— ரெ. முத்துக்கணேசன்

# 30

## திருப்பல்லாண்டு

சீரும் திருவும் பொலியச்
    சிவலோக நாயகன் சேவடிக்கீழ்
ஆரும் பெறாத அறிவு
    பெற்றேன்; பெற்றதார்பெ றுவாருலகில்?
ஊரும் உலகும் கழற
    உழறி உமைமண வாளனுக்காட்
பாரும் விசும்பும் அறியும்
    பரிசுநாம் பல்லாண்டு கூறுதுமே!

—சேந்தனார்

திருமுறை 9. திருப்பல்லாண்டு; பா. எ. 7.

உலகில் பொருள் படைத்தவரும் உண்டு; பொருள் இல்லாதவரும் உண்டு; பொருள் படைத்தவருக்கு எதிர் பாராமல் மிகுதியாகப் பொருள் வருமேயானால் அவ்வள வாக மகிழ்ச்சி தோன்றுவதில்லை; ஆனால் பொருளற்ற ஏழை ஒருவருக்கு எதிர்பாராமல் ஒரு கோடிப் பொருள் கிடைக்குமேயானால் அவ்வேழையினுடைய மகிழ்ச்சிக்கு அளவே யில்லை யல்லவா? வாழ்க்கையில் கிடைக்காத ஒன்றல்லவா கிடைத்து விட்டது? கிடைத்ததை எண் ணுவார்; பெருமிதம் உறுவார்; ஆடுவார்; மகிழ்வார்; தன்னிலை மறந்து பேசுவார்; பேரானந்த முறுவாரல்லவா? இத்தகைய தொரு நிலையைச் சேந்தனாரும் அடைந்தாராம். எல்லாம் வல்ல சிவபெருமான் திருவருள், காக்கும், கடவு ளாகிய திருமாலுக்கும் கிடைக்கவில்லை; படைக்கும் கடவுளா கிய அயனுக்கும் கிடைக்கவில்லை: மற்றைய தேவர்களுக்கும் கிடைக்கவில்லை; இவ்வாறு யாருக்கும் கிடைக்காத, விலை மதிப்பற்ற இறையை அறியும் பேரறிவு சேந்தனாருக்குக் கிடைத்ததாம். கிடைக்காத ஒன்றை இறையருளால் பெற்றேன் என்று கூறி மகிழ்வின் பேரெல்லையில் நின்று

வாழ்த்தி இறைவனுக்குப் பல்லாண்டு பாடுகின்றார் சேந்தனார்.

சிவபெருமான் பேரழகு படைத்தவர்; அருட்செல்வம் படைத்தவர்; சிவலோகத்திற்குத் தலைவருமாவார்; அவர்தம் சிறந்த திருவடியினை அறியும் பேற்றினைப் பெற்றேன்; தேவர்களாயினும் மனிதர்களாயினும் யாருமே அறிந்து கொள்ள முடியாத அறிவுக் கெல்லாம் அப்பாற்பட்ட பேரறிவை, கற்கின்ற கலைகளின் முடிவை, இறையறிவைச் சிவனருளால் பெற்றேன்; உணர்ந்தேன்; என்னளவில் அவ்வறிவைப் பெற்றவர்கள் யாரேனும் உண்டோ? இவ்வுலகில் யாரேனும் பெறுவார்களா? இவ்வாறு உமையம்மையின் மணவாளனான சிவபெருமானுக்கே அடிமை பூண்டேன்; அவனுக்கே ஆட்பட்டேன்: அவனருளால் அவன் தாளைப் பற்றிய பேரறிவை யாருக்கும் கிட்டாத அருளறிவை நான் பெற்றதை அறிந்து இம்மண்ணுலகத்து மக்களும் புகழ்ந்து பேசினர்;மண் ணுலகு தவிரப் பிற உலகத்தவர்களும் புகழ்ந்து பேசினர்; இங்ஙனம் இவர்கள் தம் புகழ்மொழியால் அன்புரையால் என் வாயும் அடைத்துவிட்டது; உழறிப் பேசும் நிலைகூட வந்துவிட்டது, ஆக இம்மண்ணுலகத்தவர்களும் பிற உலகத்தவர்களும் அறியும் வண்ணம் கிடைத்தற்கரிய புகழையும் அருளறிவையும் தந்த ஆண்டவனுக்கு நாம் ஒன்று சேர்ந்து பெருமையோடு இறைவன் 'பல்லாண்டு வாழ்க' என வாழ்த்துக் கூறி இறைவனுக்குப் பல்லாண்டு பாடுவோமாக! என்கின்றார்.

குறிப்பு: பொதுவாகப் பெரியவர்கள் சிறுவர்களை நீடு வாழ்க என வாழ்த்துவார்கள் ; ஆனால் ஒழுக்கம் நிறைந்த பெரியவர் ஒருவர் உலகில் வாழ்வதற்குரிய நல்ல செயலைச் செய்வாரேயானால், அப்பெரிய வரைச் சிறுவர்களும் நீடுவாழ்க என்று வாழ்த்து வது இயற்கையல்லவா? ஈண்டு நாம் நீடுவாழ் வதற்கு, உலகைப் படைத்துக் காக்கும் பிரானாகிய சிவபெருமானுக்குத் தில்லையில் ஆடும் நடராசப்

பெருமானுக்குத் திருப்பல்லாண்டு பாடுகின்ருர் சேந்தனர். யாவர்க்கும் கிடைக்காத பேரறிவாகிய இறையறிவை — கற்கின்ற கலைகளின் முடிவாகிய இறையறிவை யான் பெற்றேன்; இவ்வுலகில் யார் பெறவல்லார்? என்று சேந்தனர் கேட்பதின் மூலம், தன்னை வியந்து கூறும் சேந்தனர்தம் பெருமித உள்ளம் வெளிப்படக் காண்கின்றேம். மேலும் சிவபெருமான் திருவருள் தனக்குக் கிடைத்ததை கிடைக்காத பெரும் பேருக எண்ணும் காதல் உள்ளமும், மக்கள் வாழ உமை மணவாளனுக்குப் பல்லாண்டு பாடும் பரந்த உள்ளமும், கற்கின்ற கல்வியின் பயன், கடந்து நிற்கும் வாலறிவனுகிய இறைவன் திருவடியைக் கை தொழுதலே என்ற அறிவு உள்ளமும் புலனுகக் காண்கின்றேம். இப்பாடல் பெருமிதச் சுவை நிறைந்த பாடலாகும்.

**திருப்பல்லாண்டு:-** தில்லையில் மார்கழித் திருவாதிரைத் திருவிழாவில் விழாத்தேர் ஓடாது நின்றபொழுது, சேந்தனர் திருப்பல்லாண்டு என்ற திருப்பதிகம் பாடத் தேர் அசைந்து ஓடிற்று எனக் கூறுவர். சைவ அன்பர்கள் பூசையின்போது ஓதும் பஞ்ச புராணத்துள் திருப்பல்லாண்டும் ஒன்று. இது சைவத் திருமுறை பன்னிரண்டில் ஒன்பதாம் திருமுறையாகும். பாடலின் தொகுதி பதின்மூன்று.

**ஒப்புமை:-**

இருமாந் திருப்பன் கொலோ – ஈசன்
பல்கணத் தெண்ணப்பட்டுச்
சிறுமா னேந்திதன் சேவடிக்கீழ்ச் சென்று
இருமாந் திருப்பன் கொலோ?

—திருநாவுக்கரசர்

திருவங்கமாலை தி. 4. ப: 9. பா. எ. 11.

மற்றுநான் பெற்ற தார்பெறவல்லார்
வள்ளலே,

—சுந்தரர்
தி. 7. ப: 69. பா. எ. 6.

வாழ்த்துவதும் வானவர்கள்
தாம்வாழ்வான் மனநின்பால்
தாழ்த்துவதும் தாம்உயர்ந்து
தம்மையெல்லாந் தொழவேண்டிச்
சூழ்த்துமது கரமுரலுந்
தாரோயை நாயடியேன்
பாழ்த்தபிறப் பறுத்திடுவான்
யானும்உன்னைப் பரவுவனே!

—மாணிக்கவாசகர்
தி: 8 திருவாசகம்: திருச்சதகம்: 2. பா. எ: 16.

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத் தாண்டு
பல்கோடி நூறுயிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா உன்
செவ்வடி செவ்வி திருக்காப்பு!

—பெரியாழ்வார்
நாலாயிர திவ்யப்பிரபந்தம்; காப்பு: பா. எ: 1.

என்னின் மிகுபுகழார் யாவரே? பின்னையுமற்
றெண்ணில் மிகுபுகழேன் யானல்லால்—என்ன
கருஞ்சோதிக் கண்ணன் கடல்புரையும், சீலப்
பெருஞ்சோதிக் கென்னெஞ்சாட் பெற்று!

—நம்மாழ்வார்
பெரியதிருவந்தாதி. பா. எ: 4.

# 31

## நடமாடும் கோயில்

உள்ளம் பெருங்கோயில்
ஊனுடம்பு ஆலயம்
வள்ளற் பிரானுர்க்கு
வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச்
சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும்
காளா மணிவிளக்கே!

—திருமூலர்
தி: 10. திருமந்திரம்: பா. எ. 1823

வாழ்க்கையில் இருவர் நண்பர்களாக வாழ்வர்; ஒரு சில சமயங்களில் இருவர்களுக்குள்ளும் வாக்குவாதம் வந்துவிடும்; அப்பொழுது ஒருவர் மற்ருெருவரை நோக்கி, 'நீ சொல்வது உண்மைதான் என்ருல் உன் நெஞ்சிலே கை வைத்து அதை நெஞ்சறியச் சொல்லிவிடு'—என்று சொல்வார். இங்ஙனம் சொல்வதை வாழ்க்கையில் நாம் கேட்டிருக்கிரோமல்லவா? நெஞ்சறியச் சொல்லுக என்பது சத்தியமாக - உண்மையாகச் சொல்லவேண்டும் என்ற பொருளைத்தானே தருகின்றது. நெஞ்சறியச் சொல்லா விட்டால் அச்சொல் உண்மையில்லை என்றே கொள்வார்கள்; அதனாலன்ரோ நெஞ்சறியத் தவற்றைச் செய்தவனை அவனுடைய நெஞ்சே அத் தவற்றிற்குத் தண்டனை விதிக்கும் என்ற பொருளில் 'தன் நெஞ்சே தன்னைச்சுடும்'- என்ற பழமொழி எழுந்தது? ஆக சத்தியம்-உண்மை — விற்றிருக்கும் இடமாக நெஞ்சைக் கொண்டார்கள் தமிழர்கள். எங்கு சத்தியம்-உண்மை-கொலு விற்றிருக்கின்றதோ அங்குத் தெய்வம் கொலுவீற்றிருக்கின்றது என்றும் உணர்ந்தார்கள். இவ்வாறு உள்ளத்தைத் தெய்வம் விற்றிருக்கும் கோயிலாக நம்

சமயப் பெரியோர்களும் - கவிஞர்களும் கண்டு போற்றினார்கள். திருவள்ளுவரும் அடியார்களின் நெஞ்சமாகிய மலரில் வீற்றிருப்பவன் இறைவன் என்றும், அவன் திருவடிகளை இடையறாது எண்ணி எண்ணி உருகுபவர் இந்த நிலவுலகின்கண்ணே நிலைத்து வாழ்வார்கள் என்றும் கூறுகின்றார்.

'மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்' (பா. எ: 3)

என்பது திருக்குறள்.

இவர்கள் வழிநின்று திருமூலரும் நம்முடைய உள்ளமே இறைவன் வாழும் கோயிலாகும் என்று போற்றுகின்றார். மேலும் நம்முடைய மனித உடலையே ஒரு பெரிய ஆலயமாகவும் நமக்குச் சித்திரித்துக் காட்டுகின்றார். அதனைப் பார்ப்போமாக.

இறையைப் பற்றிய உண்மையை உணர்ந்த மெய்ஞ்ஞானிகள் இவ்வுலகில் நடமாடும் உயிர்கள்தாம் சிவலிங்கம் என்பர்; சிவலிங்கமாக வீற்றிருக்கும் சிவபெருமானே வேறுபாடின்றி யாவருக்கும் அருளை வாரி வழங்கும் வள்ளற்பெருமான் ஆவார்; அவர் வீற்றிருக்கும் ஆலயந்தான் இவ்வூன் உடலாகும்; உடலாகிய ஆலயத்தினுள் இறைவன் தங்கும் கருவறைதான் நெஞ்சமாகும். அவ்வாலயத்தின் நுழைவாயில்தான் மந்திரமாகிய ஐந்தெழுத்தை ஓதுகின்ற திருவாயாகும்; அவ்வாலயத்திற்கு வேண்டிய அழகிய ஒளி பொருந்திய திருவிளக்குகள்தாம் கள்ள வழிகளிலே இழுத்துச் செல்லப் பார்க்கும் மெய்-வாய்-கண்-மூக்கு-செவி-என்று சொல்லப்படும் ஐம்பொறிகளாகும் என்கின்றார்.

குறிப்பு:- இப்பாடலில் திருமூலர் நம்முடைய உயிரைச் சிவலிங்கத்திற்கும், உடலை ஆலயத்திற்கும், நெஞ்சை, இறைவன் வாழும் கருவறைக் கோயிலுக்கும், வாயை ஆலயக் கோபுர வாயிலுக்கும்

ஐம்புலன்களை ஆலயத் திருவிளக்குகளுக்கும் பொருத்தி, மனிதஉடலை நடமாடும் சிவ ஆலயமாகச் சித்திரித்துக் காட்டுகின்றார்; இவ்வாறு காட்டுவதின் மூலம் இறைவனைத் தேடி ஊர்கள் தோறும் அலைய வேண்டாமென்றும், இறைவன் உள்குவார் உள்ளத்தின் உள்ளான் என்றும், பல்வேறு வழிகளிலே ஏகும் ஐம்புலன்களையும் ஒருவழியாக ஒரு நிலைப்படுத்தி உள்ளத்திலிருக்கும் இறைவனை உள் நினைந்து அவன் நாமம் போற்றிசெய்து வழிபாடு செய்ய வேண்டுமென்றும் கூறிச் சிவபூசைக்கு வழிகாட்டுகின்றார்; மேலும் ஒவ்வொரு மனித உடலும் இறைவனுக்குரிய நடமாடும் கோயிலாகு மென்றும், அம்மனித உயிர்களுக்கே தூய்மையுடன் பணிசெய்வது சிறந்த சிவப்பணியாகும் என்றும் வலியுறுத்துகின்றார் திருமூலர்.

**திருமூலர்:** முனிவர். சித்தர். இவர்தம் வரலாறு சரிவரத் தெரியவில்லை; இவர், சைவத் திருமுறை பன்னிரண்டில் பத்தாம் திருமுறையாகிய திருமந்திரத்தை இயற்றியவர். மூவாயிரம் தமிழ் மந்திரங்களால் ஆன நூல் திருமந்திரம், இந்நூல் காலத்தால் மறைக்கப்பட்டுப் பின் ஏழாம் நூற்றாண்டில் திருஞானசம்பந்தரால் திருவாவடுதுறையில் கண்டெடுத்து வெளிப்படுத்தப்பட்டது எனக் கூறுவர். தோத்திரத்திற்குத் திருவாசகமும் சாத்திரத்திற்குத் திருமந்திரமும் எனப் பழமொழி கூறும். தமிழ் ஆகமமாகிய இந்நூலை அருளிய மூலரைப்பற்றித் தாயுமானவர்,

'சக்கர வர்த்தி தவராச யோகியெனும்
மிக்கதிரு மூலன்அருள் மேவுநாள் எந்நாளோ?

என்று கூறுவர்.

திருமூலர்தம் தமிழைப் பற்றிய பாடல்:

நூலறிவு பேசும்;
நுதற்கண்ணன் தாள்காட்டும்
வாலறிவாம் ஞான
வழிபேசும்:—காலைக்
கமழ்கொன்றைத் தாரான்
கழல்தொழுமே என்றும்
தமிழ்மூலன் மூலத் தமிழ்!

—ரெ. முத்துக்கணேசன்

**ஒப்புமை:**

காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி யிலிங்கமாக
நேயமே நெய்யும்பாலா நிறையநீ ரமையவாட்டிப்
பூசனை ஈசனுர்க்குப் போற்றவிக் காட்டினுேமே!

—திருநாவுக்கரசர்
தி. 4: பதி: 76: பா எ. 4

# 32

## தாள் சிவந்ததேன்?

விசும்பில் விதியுடைய
　　விண்ணோர் பணிந்து
பசும்பொன் மணிமகுடம்
　　தேய்ப்ப —முசிந்தெங்கும்
எந்தாய் தழும்பேறி
　　யேபாவம் பொல்லாவாம்
அந்தா மரைபோல் அடி!

—காரைக்காலம்மையார்;
திருமுறை: 11; அற்புதத் திருவந்தாதி பா. எ: 76

இவ்வுலகத்தில் மானிடப் பிறவி மிக உயர்ந்ததுதான்; ஆனால் அம் மானிடப் பிறவி அங்கச் சிதைவின்றி அமைய வேண்டும்; அங்ஙனம் அமைந்த அங்கங்கள் ஒவ்வொன்றும் பயன்பெறத் தக்க நிலையிலும் அமையப் பெறுமே யானால் மானிடப் பிறவி உயர்ந்தது மட்டுமல்ல; மிகச் சிறந்த பயனைப் பெற்றதாயுமிருக்கும். கண் இருக்கின்றது; அக்கண்ணுக்குப் பார்வை யில்லையானால் கண்ணிருந்தும் பயனில்லை. செவி யிருக்கின்றது; கேட்கவில்லையானால் செவி யிருந்தும் பயனில்லை; அதுபோன்று தலைஇருக்கின்றது; இறைவனது திருவடிகளை வணங்காவிட்டால் அத் தலையிருந்தும் பயனில்லை என்கின்றார் திருவள்ளுவர்.

கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை. (பா. எ: 9)

என்பது திருக்குறள். இங்ஙனம் தலையின் பயன் இறைவனது தாளை வணங்குவது என்று கூறுவதன் மூலம் எல்லாம் வல்ல இறைவன் திருத்தாளின் உயர்வைக் கூறி அதன் புகழ் பாடுகின்றார் திருவள்ளுவர். இறைவனைக்

காட்டிலும் இறைவன் திருவடிகளுக்கு அத்துணை உயர்வு போலும்! காரைக்காலம்மையாரும் சிவபெருமான் திருவடியையே எண்ணி வாழ்ந்தார். போற்றி வணங்கினர்; அழகுமிக்க சிவந்த திருவடியை எண்ணுந்தோறும் உள்ளம் பூரித்தார்: இத்தனை அழகுமிக்க அத்திருவடி ஏன் சிவந்து காணப்படுகின்றது? என்ற எண்ணம் அவர் உள்ளத்தே எழுந்தது; கற்பனை விரிந்தது; திருவடி சிவந்திருப்பதற்குரிய காரணங்களை அவரே கூறுகின்றார்.

எந்தையாகிய சிவபெருமானே! விண்ணுலகில் இறை நெறியோடு வாழ்பவர்கள் தேவர்கள். அவர்கள் நெறிப்படி அல்லும் பகலும் உமது திருவடியில் விழுந்து பணிகின்றார்கள். அங்ஙனம் விழுந்து பணிவதனால் பொன்னாலாகிய அவர்தம் மணி மகுடங்கள் உமது திருவடிகளை உராய்வதினால் திருவடிகள் மெலிந்து தழும்பேறி அழகிய செந்தாமரை மலரைப் போன்று சிவந்து விட்டனவோ! பாவம்! பொல்லாவாம் மணி மகுடங்கள்! என்கின்றார்.

குறிப்பு:- இப்பாடலில் தேவர்கள் தொழ, அவர்கள் தம் மணிமகுடத்தால் இறைவன் திருவடி புண்பட்டுச் சிவந்தன என்று இறைவன் திருவடி சிவந்ததற்குக் காரணம் கற்பிக்கின்றார். உண்மையில் இறைவன் செம்மேனி எம்மான் என்றாலும், தான் ஒரு காரணத்தைக் கற்பித்து, அதன்மூலம் மக்களாகிய நாம் தாழ்ந்து அவன் திருவடிகளை நாள் தோறும் வணங்கவேண்டு மென்பதைக் குறிப்பாலுணர்த்திச் சிவபெருமான் திருவடிப் புகழ் பாடுகின்றார் காரைக்காலம்மையார்.

இறைவன் திருவடியில் ஆராத காதலுடையவர் அம்மையாராதலின், பாவம் – பொல்லாவாம் - என்ற இரக்கக் குறிப்பினை உணர்த்தும் சொற்களைப் பெய்கின்றமை அறிக!

**காரைக்காலம்மையார்:-** இவர் தமிழ்நாட்டில் காரைக்கால் நகரில் வணிகர் மரபில் தோன்றியவர். அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவர். இவர்தம் தந்தையார் பெயர் தனதத்தர். கணவர் பெயர் பரமதத்தர். இவருக்குப் பெற்றோர் இட்ட பெயர் புனிதவதியார் என்பது. பின்னர் இறைவன் இவரை அம்மையே என அழைத்தமையின் அம்மையார் எனப் பெயர்பெற்றார் என்பர். இவர் சிவபெருமானிடத்து ஆராத அன்பு பூண்டவர். இவர்தம் நூல்கள்: அற்புதத் திருவந்தாதி; திருஇரட்டை மணிமாலை; திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள் முதலியன. இவை பதினோராம் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளன.

காரைக்காலம்மையார் தம் தமிழைப் பற்றிய பாடல்:

அன்பின் திறன்சிந்தும்;
ஆளும் அருள்சிந்தும்;
என்பணிந்த பெம்மான்
எழில்சிந்தும்—முன்பெரித்துக்
காத்த மறம்சிந்தும்;
காரைக்கா லம்மையாம்
மூத்ததாய் சொல்முத் தமிழ்!

—ரெ. முத்துக்கணேசன்

ஒப்புமை;—

தேவரெலாந் தொழச்சிவந்த செந்தாள் முக்கட்
செங்கரும்பே மொழிக்குமொழி தித்திப் பாக
மூவர்சொலுந் தமிழ்கேட்குந் திருச்செ விக்கே
மூடனேன் புலம்பியசொல் முற்றுமோ தான்!

—தாயுமானவர்

திருப்பாடல் திரட்டு; 'கல்லாலின்'- பா. எ-14.

'வணக்கம் தலைநின் திருவடிக்கே செய்யும்'

—பட்டினத்தார்

திருமுறை. 11. திருஏகம்பமுடையார் திருவந்தாதி. பா. எ7

வாழ்த்திய வாயராய்
வானோர் மணிமகுடம்
தாழ்த்தி வணங்கத்
தழும்பாமே!— கேழ்த்த
அடித்தா மரைமலர்மேல்
மங்கை மணாளன்
அடித்தா மரையா மலர்.

—பேயாழ்வார்
மூன்றும் திருவந்தாதி. பா. எ: 2377.

## 33

## யானையும் பவளமும்

ஏனங் கிளைத்த
   இனபவள மாமணிகள்
கானல் எரிபரப்பக்
   கண்டஞ்சி—யானை
இனமிரிய முல்லைநதம்
   ஈங்கோயே! நம்மேல்
வினையிரியச் செற்றுகந்தான்
   வெற்பு.

—நக்கீரர்

திருமுறை; 11 திரு ஈங்கோய்மலை எழுபது பா. எ: 15

வாழ்க்கை உயர்வதற்கு இலக்கியங்கள் பெரிதும் உதவுகின்றன. நல்லொழுக்க உண்மைகளை அறவழிகளை நம் உள்ளத்தில் பதிய வைப்பதற்கு இலக்கியங்கள் சிறந்த கருவிகளாகப் பயன்படுகின்றன. தேர்ந்தெடுத்த இலக்கியங்கள்-படிப்பவர் தம் உள்ளங்களை முதலில் கவர்கின்றன; பின் உள்ளத்தை ஒரு நிலைப்படுத்திச் சிந்திக்கத் தூண்டுகின்றன; வாழ்வின் அறக் கருத்துக்களை, எளிதாக நாம் காணும் இயற்கைப் பொருள்களின் மூலம் விளக்குகின்றன; அறிவைத் தூய்மைப் படுத்துகின்றன. இத்தகைய சிறந்த இலக்கியங்கள் பலவற்றுள் திரு ஈங்கோய்மலை' எழுபது மிகச் சிறந்த அருள் இலக்கியமாகும். இதனை இயற்றிய ஆசிரியர் நக்கீரர் ஆவார். அவர் குறிஞ்சிப் பகுதியிலே வாழ்ந்தவர். அதன் வளமையைப் பெரிதும் அனுபவித்தவர். அங்கு வாழும் விலங்கினங்களின் தன்மையை உணர்ந்தவர், மலர் வகைகளின் அழகைப் பருகியவர். இவ்வாறு தான் கண்ட பொருள்களை வைத்துக்கொண்டு இயற்கையில் ஊறிய அனுபவங்களை ஒன்று திரட்டி நமக்கு அருமையான ஒரு விருந்தை அளிக்கின்றார் நக்கீரர் பெருமான்.

மலையில் பன்றிகள் தம் உணவுக்காக நிலத்தைக் கிளறும்; அங்ஙனம் கிளறும் பொழுது நிலத்திலிருந்து பவள மணிகள் கிடைக்கும்; பன்றிகள் அம்மணிகளை எற்றிச்செல்லும். உச்சிப் பொழுதில் இங்ஙனம் சிதறிக் கிடக்கும் பவள மணிகளில் கதிரவன் கதிர்கள் வீச நெருப்பினைப் போன்று அம்மணிகள் ஒளி உமிழும். இயல்பாக அவ்வழி வருகின்ற யானைக் கூட்டங்கள் பவள மணிகளைக் கண்டு நெருப்பென அஞ்சிச் சிதறி ஓடும். அருகில் பூத்துக் குலுங்கும் முல்லை மலர்கள் ஓடும் யானைக் கூட்டத்தைக் கண்டு சிரிக்கும். இத்தகை இயற்கைக்காட்சிகளைக் கொண்ட ஈங்கோய் மலையே, தீவினைகள் உயிர்களை அடையாவண்ணம் அவைகளை அழித்து, அருள்புரிந்து மகிழ்கின்ற சிவபெருமான் வீற்றிருக்கும் மலையாகும் என்கின்றார்.

**குறிப்பு:-** குறிஞ்சி நிலப்பகுதிகளில் வாழுகின்ற பன்றி-யானை-முதலிய விலங்கினங்களையும், வளங் கொண்ட இயற்கைப் பொருள்களையும் கொண்டு ஆசிரியர் அருமையான உண்மையை நமக்குப் புகட்டுகின்றார். பன்றி இனம் நிலங்களைத் தோண்டி வெளியே எற்றிய பவள மணிகளை யானைக் கூட்டம் கண்டு நெருப்பு என எண்ணி அஞ்சிஓடிற்று என்று கற்பனைசெய்கின்றார்; ஆனால் உள்ளுறைப் பொருளாகப் பவள நிறம் அமைந்த அருட்சுடராம் சிவபெருமானைக்கண்டு தீவினைகள் அஞ்சி ஓடின என்ற பேருண்மையை, இறை உணர்வை, குறிஞ்சிப் பொருள்களின் வாயிலாக நமக்குத் தருகின்றார் ஆசிரியர். எல்லாம் நிறைந்த இறையை உளத்திருத்தி நாடுவோமே யானால் நம்மை வருத்தும் தீவினைகள் நம்மை விட்டு அகலும் என்ற உண்மையைக் கவிதைத் தட்டில் வைத்து நீட்டுகின்றார் கவிஞர் பெருந்தகை.

**ஈங்கோய்மலை:** குழித்தலைப் புகைவண்டி நிலையத்திலிருந்து 9 கல் தொலைவிலுள்ளது. அகத்திய முனிவர் "ஈ"

வடிவில் வழிபட்ட திருவூர் என்பர். இப்பொழுது 'திருவிங்கநாதமலே' என்ற பெயரால் வழங்கப்படுகின்றது. இம்மலே பாடல் பெற்ற திருவூராகும்.

நக்கீரர்:- இப்பெயர் கொண்டோர் பலர் இருந்தனர் எனத் தெரிகின்றது. சங்ககாலத்திலும் அதற்குப் பின்னும் இப்பெயரினை வைத்துக்கொண்டு வாழ்ந்தவர்கள் உண்டு. ஆகவே இவர்தம் வரலாறு ஆராய்ச்சிக்குரியது. பதினோராம் திருமுறையில் சேர்த்துள்ள இவர்தம் நூல்கள்:-

1 கயிலேபாதி காளத்திபாதி அந்தாதி
2 திருஈங்கோய் மலே எழுபது.
3 திருவலஞ்சுழி மும்மணிக் கோவை
4 திருவெழு கூற்றிருக்கை.
5 பெருந்தேவ பாணி
6 கோபப் பிரசாதம்
7 கார் எட்டு
8 போற்றித் திருக்கலிவெண்பா
9 திருமுருகாற்றுப் படை
10 தனிவெண்பாக்கள்
11 திருக்கண்ணப்ப தேவர் திருமறம்

நக்கீரர் தம் தமிழைப் பற்றிய பாடல்:-
நக்கீரர் தமிழுக்கும் செங்கதிருக்கும் சிலேடை

வெற்பில் பிறந்தொளிரும்;
வேணி மணம்நுகரும்;
பொற்கமலப் பூங்கயிலேத்
தாள்புணரும்; —நற்பாவாய்!
நக்கீரன் நற்றமிழும்
நாள்பூக்கும் செங்கதிரும்
ஒக்கநிகர் என்றே உரை!

—ரெ. முத்துக்கணேசன்

உரை :

நக்கீரர் தமிழ்:- கயிலை, காளத்தி போன்ற மலையைப் பாடுதலால் பிறந்தது; சிவபெருமான் அருள்மணம் நுகரும்; பொன்னிறத் தாமரை மலர்போன்ற திருக்கயிலைநாதன் திருத்தாளோடு கலக்கும்.

செங்கதிர்:- மலையில் பிறக்கும்;

மாநதிகளின் நறுமணம் நுகரும்; தன்கதிர்களால் பொன்னிறமான தாமரை மலரின் அழகிய கழுத்துப் பாகம், தாள், முதலிய உறுப்புக்களோடு கலக்கும்.

# 34

## செஞ்சடையான் குன்று

வழகிதழ்க் காந்தள்மேல்
வண்டிருப்ப ஒண்டீ
முழுகியதென் றஞ்சி,முது
மந்தி—பழகி
எழுந்தெழுந்து கைநெரிக்கும்
ஈங்கோயே! திங்கட்
கொழுந்தெழுந்த செஞ்சடையான்
குன்று.

—நக்கீரர்

திருமுறை: 11. திரு ஈங்கோய் மலை எழுபது பா எ:70

சிறந்த கவிதை மலருவதற்குக் கற்பனை பெரிதும் உதவு கின்றது. மேலும் கருத்தை உள்ளத்தில் பதியவைப் பதற்கும் முன்னிற் கின்றது. நாள்தோறும் நாம் மலர்களைப் பார்க்கின்றோம். அம்மலர்களில் எப்புதுமையும் நமக்குத் தோற்றுவதில்லை; ஆனால் கவிஞன் ஒருவன் மலரைப் பார்க்கின்றான்; அம்மலரோடு ஒன்றுகின்றான். அம்மலர் அளிக்கின்ற புதுமை கண்டு பூரிக்கின்றான்; பின் தன் அனுபவத்தைக் கற்பனையின் உதவியோடு முறைப்படுத்திக் கவிதையாகத் தருகின்றான். கவிதை வடிவில் நாம் அதனைக் காணும்பொழுது வியக்கின்றோம்; எண்ணி மகிழ்கின்றோம். நக்கீரர் காந்தள் மலரைப் பார்க்கின்றார்; அதன் இயற்கையை அனுபவிக் கின்றார்; அதன் அழகில் தன்னை - மறக்கின்றார்; அதன் நிறத்தில் உள்ளத்தைப் பறிகொடுக்கின்றார்; இறை உணர்வு மேலிடப் பெறுகின்றார்; சிவன் வடிவைக்கண்டு இறும்பூதெய்துகின்றார்; இவ்வாறு அவர் தாம் அடைந்த வற்றை இயற்கை இன்பமும் இறை உணர்வும் கலந்த கவிதையாக நம் முன் படைக்கின்றார்.

செங்காந்தள் மலர் மென்மையான இதழைக் கொண்டது; சிவந்த நிறத்தை உடையது; அதன்மேல் ஒரு வண்டு இருந்தது. அதனைக்கண்ட கிழப் பெண் குரங்கு, வண்டு ஒளிகொண்ட நெருப்பில் மூழ்கிற்று என்று அஞ்சியது; அலறியது; தான் இருக்கும் இடத்தி னின்றும் எழுந்து எழுந்து கைகளை நெறித்துக் கொண்டது. இத்தகைய இயற்கை வளமுடைய ஈங்கோய் மலையே, பிறைக்கொழுந்தை தலையிற் சூடியவனும், செஞ்சடையை உடையவனும், சிவந்த நிறமுடைய வனுமான சிவபெருமான் விற்றிருந்து அருளும் குன்றாகும். என்கின்றார்.

குறிப்பு:- சிவந்த செங்காந்தள் மலரைக் கண்டார் நக்கீரர்! அதன் சிவப்புநிறம் சிவபெருமானின் நிறத்தை அவருக்கு நினைவூட்டியது. செம்மேனி எம்மானை நினைந்து மெய்சிலிர்க்கின்றார்: சிவந்த மலரில் வண்டு ஊர, அதனைக்கண்டு பெண் குரங்கு அஞ்சிற்று என்று கற்பனை செய்கின்றார் கவிஞர்; ஆனால் உள்ளுறையாகச் சிவந்த நிறம்படைத்த சிவபெருமானோடு ஆருயிர்கள் கலப்பதைக்கண்டு ஆணவம், பேராசை, அறியாமை போன்ற குரங்குகள் அஞ்சி அலறுகின்றன என்ற தத்துவ உண்மையை இயற்கைப் படைப்பின்மூலம் கற்பனையின் உதவியோடு நமக்குத் தருகின்றார் நக்கீரர். உண்மையில் வாழ்க்கை உண்மை களையும் வளம்படைத்த இயற்கை நிகழ்வுகளையும் ஒருசேரப் படைத்தளிக்கும் நக்கீரர்தம் கற்பனை நயம் எண்ணிப் போற்றத்தக்க தொன்றாகும்.

செங்காந்தள்—செந்நிற மலர். இதனைக் கார்த்திகைப் பூ என்றும் கூறுவர். இம்மலர் அழகாகத் தோன்றுவதனால் இதனைத் 'தோன்றி' என்றும் அழைப்பர். இம்மலர்களில் சிலவகை வெண்மை நிறமாகவும், சிலவகை இளஞ் சிவப்பு நிறமாகவும் இருப்பதுண்டு.

இவ்வாறு கற்பனை நயம் செறிந்த பாடல்களை முன்னே படைத்துள்ளார் முத்தொள்ளாயிர முடையார்.

பாடல்:—

அள்ளற் பழனத்
    தரக்காம்பல் வாய்அவிழ
வெள்ளந்தீப் பட்ட
    தெனவெரீஇப்—புள்ளினம்தங்
கைச்சிறகாற் பார்ப்பொடுக்கும்
    கவ்வை உடைத்தரோ
நச்சிலேவேற் கோக்கோதை
    நாடு.

—முத்தொள்ளாயிரம்.
ரெ. முத்துக்கணேசன் பதிப்பு; பா. எ: 14.

## 35

## ஒற்றியூரானதேன்?

அடியோமைத் தாங்கியோ?
    ஆடை யுடுத்தோ?
குடியோம்ப மாநிதியங்
    கொண்டோ?—பொடியாடும்
நெற்றியூர் வாளரவ
    நீள்சடையாய்! நின்னூரை
ஒற்றியூ ராக்கிற்
    றுரை.

—கபிலதேவ நாயனார்
திருமுறை 11. சிவபெருமான் திருஇரட்டை மணிமாலை
பா. எ: 15.

இவ்வுலகவாழ்வு பொருளை அடிப்படையாகக் கொண்டுள்ளது; பொருள் இல்லாது போனால் வாழ்வு சிறப்பாக அமைவதில்லை; பொருள் இன்றி எந்த ஒரு சிறு செயலும் நடைபெறுவதில்லை; ஒருவர் தம் கைப்பொருள் முழுதும் செலவழித்துவிடுவாரேயானால் பின் எப்படி வாழ்க்கை நடத்துவது! தம்முடைய சொத்துக்களை மற்றொருவருக்கு ஒற்றிவைத்துப் பொருள் பெற்று வாழ்க்கை நடத்துவர். இஃது வாழ்க்கையில் நிகழ்கின்ற இயற்கை நிகழ்ச்சிதானே! திருவொற்றியூரில் விற்றிருந்து அருளும் சிவபெருமானை வழிபட வந்தார் கபிலதேவர். அவர் தம் அருளை அள்ளிப் பருகினார். கோயிலும் கோயிலில் விற்றிருக்கும் இறைவனும் ஆடம்பர மற்று எளிமையாக இருப்பதைக் கண்டார்; எளிமை அவர்தம் உள்ளத்தைக் கவர்ந்தது; அப்பொழுது அவ்வூர்ப் பெருமானுக்கு ஒற்றியூர்ப் பெருமான் என்ற பெயரை ஏன் மக்கள் வழங்குகின்றனர் என்ற கேள்வி அவர் உள்ளத்தே உதித்தது; ஏன் இவ்வூரை இவர் ஒற்றி வைத்தார் என்பதனைக் கற்பனையில் சிந்திக்கலானார்; அருமையான பாடல் ஒன்று அவர் உள்ளத்தே எழுந்தது. அவரே சிவபெருமானை நோக்கிக் கேட்கின்றார்.

திருமேனியிலும் நெற்றியிலும் திருநீறு பொலிகின்ற சிவபெருமானே! ஊர்கின்ற இயல்பும் உணர்வுக் கூர்மையும் உடைய பாம்பை அணிந்த பெருமானே! நீண்ட திருச்சடையையுடைய பெருமானே! உம்முடைய நிதி நிலை என்னவாயிற்று! என்னையும் என்போன்ற அடியார்களையும் ஆதரித்துக் காப்பாற்றியதனுல் உம்முடைய பொருள்கள் செலவாயினவோ? அன்றி ஆண்டிக்கோலம் விடுத்து ஆடம்பரமாகப் பலவித ஆடைகளை அணிந்ததினுல் செலவாயினவோ? இல்லை; குடும்பம் பெரியதாயிருப்பதனுல் அக்குடும்பம் காரணமாகப் பொருள்கள் செலவாயினவோ? கையில் பொருளின்றி, பொருளுக்காக வளம் பொருந்திய உம் திருவூரைப் பிறர்பால் அவர் அனுபவிக்க அடமானமாக ஒற்றி வைக்குமாறு செய்தது எது? எக்காரணம் அப்படிச் செய்தது? அதை உரைப்பீராக! என்கின்ருர்.

குறிப்பு:- திருஒற்றியூர் என்பது ஊருக்குப் பெயர், ஆனுல் இவ்வூர் சிவபெருமானுல் பொருளுக்காக ஒற்றி வைக்கப்பட்டதனுல் ஊரின் பெயர் ஒற்றியூரென மக்கள் கொண்டாடினர் என்று கற்பித்துக் கொண்டு, ஏன் சிவபெருமான் ஊரை ஒற்றி வைக்கின்ருர் என்பதற்கு மேலும் ஒருசில காரணங்களைக் கற்பனையில் எழுப்புகின்ருர் கபில தேவர். வாழ்க்கையில் நிகழ்கின்ற நிகழ்ச்சிகளாகிய பிறரைக் காப்பாற்றும் பொருட்டுப் பொருளை ஈதல், ஆடம்பரமாக ஆடை அணிதல், குடும்பத்திற்காகச் செலவிடல் போன்ற நிகழ்ச்சிகளோடு இறைவனைப் பொருத்திக் கற்பனை நயந்தோன்றக் கவிதை படைக்கின்ருர் கபில தேவர். ஆனுல் உள்ளுறையாக அன்போடு உருகி அகங்குழையும் அடியார்களுக்கு அடியனுய் வந்து அருள்புரியும் அன்புள்ளம் படைத்தவன் சிவனே என்றும், அரசகோலத்தையும் ஆண்டிக் கோலத்தையும் ஒருசேர நோக்கும் அருள்

உள்ளம் படைத்தவன் சிவனே என்றும், இடுக்கண் நிறைந்த இல்லறவாழ்வில் இறைவனை இதயத்தால் இச்சித்து வழிபட்டால் உடனே அவ்வில்லற வழிபாட்டை விரும்பி அருள்சுரக்கும் தாயுள்ளம் படைத்தவன் சிவனே என்றும் கருதிச் சிவபெருமானைப் போற்றி வழிபடுகின்றார் கபில தேவர்.

ஒற்றிவைத்தல்—சொத்தை அனுபவிக்கும் உரிமையுடன் பிறர்க்கு அச்சொத்தை அடமானமாக வைத்தல்.

**கபிலதேவநாயனார்:-** இவரைப்பற்றிய சரித்திரக் குறிப்பு எதுவும் கிடைக்கவில்லை. சைவத் திருமுறை பன்னிரண்டில் பதினோராம் திருமுறையில் இவர்தம் நூல்கள் சேர்க்கப்பட்டுள்ளன. இவர் பாடிய நூல்கள் மூத்தநாயனார் திருஇரட்டைமணிமாலை, சிவபெருமான் இரட்டைமணிமலை, சிவபெருமான் திருவந்தாதி முதலியனவாகும். மேலும் 'கபிலர் பட்டியல்' என்னும் நூலைச் செய்ததாகவும் கூறுவர்.

கபிலதேவநாயனார் தம் தமிழைப் பற்றிய பாடல்:—

தேடிச் சிவன்கழலே
    சிந்திக்க மால்காணாய்
வாடி வருந்துவதேன்?
    வன்னெஞ்சே!— ஆடும்
கலையரசைப் போற்றும்
    கபிலதேவன் தந்த
கலைத்தமிழ் கையிருக்கக் கண்டு.

—ரெ. முத்துக்கணேசன்

## 36

### தலைவியும் காளையும்

ஆனேறே போந்தால்
அழிவுண்டே அன்புடைய
நானேதான் வாழ்ந்திடினும்
நன்றன்றே?—வானோங்கு
வரமான் பொழில்தில்லை
மன்றைப் பொலிவித்த
கோமானை இத்தெருவே
கொண்டு!

—பட்டினத்தார்
திருமுறை: 11. கோயில் நான்மணிமாலை
பா. எண். 37.

காதல் ஒருவகையான மயக்கப் பொருளாகும்; முதலில் அது அறிவைத் தன் வயப்படுத்திக்கொள்ளும்; சில வேளைகளில் அறிவு தெளிந்த நிலையில் அறிவைச் சுடர்விடச் செய்யும்; மற்றும் சில வேளைகளில் அறிவை மயக்கி அறியாக் குழவிபோல் மாறுபடச் செய்யும்; மேலும் காதலனோடு தொடர்புடைய பொருள்களோடு தன்னை மறந்து பேசச் செய்யும்; பட்டினத்தார் சிதம்பரம் வந்துசேர்ந்தார். ஆனந்த நடமிடும் அரசைக் கைதொழுதார். அவர்தம் அழகு அவரை மயக்கியது. காதல்கொண்ட தலைவியாக மாறிவிட்டார் பட்டினத்தார். காதலன் வாகன மாகிய காளையை நோக்கிக் குழந்தைபோல் பேசத்தொடங்குகிறார் பட்டினத்தார்.

பெருமையோடு கூடிய காளையே! வானோங்கிய சோலைகள் நிறைந்ததும், மாட்சிமைப் பட்டதுமான இடம் தில்லைமாநகரம். அங்குள்ள சிறப்பிற்குரிய சிற்றம்பலத்தைப் பொலிவுடையது ஆக்குபவன் நடராசப்பெருமான். அப்பெருமானாகிய கோமானை ஏற்றிக்கொண்டு நீ உலா வரும்

பொழுது நானிருக்கும் தெரு வழியாகப் போகக்கூடாதா? இத்தெரு வழியாகப் போனல் அழிவு ஏதேனும் உனக்கு ஏற்பட்டு விடுமா? அவர்மேல் அன்புகொண்ட நான் அவரைக் காணப் பெறுவதனல் துயர் நீங்க வாழ்ந் திடுதல் உனக்கு நல்லது அல்லாத தாகத் தோன்று கின்றதா? என்கின்ருள்.

**குறிப்பு:** காதலியின் உள்ளம் காதலனைக் கண்ணுரக் காணத் துடிக்கின்றது; மேலும் அவன் உலா தனது தெருவழியே வரும்பொழுது அவனது திருவுருவ அழகைக் கண்டு பருகி இன்புற மாட்டோமா என்று ஏங்குகின்றது. அடியார்களை அன்பால் அணைக்கும் ஆனந்த நடமிடும் அரசன் தன்னையும் ஏற்றுக்கொள்ள மாட்டானு என்று ஏங்கும் பட்டினத்தாரின் ஏக்க உணர்வு இப் பாடலில் காதலியின் உள்ளமாக மின்னலிடக் காணுகின்ருேம். மேலும் உட்பொருளாக இறைவனை அன்போடு உள் நினைந்து காதலி போல் உருகவேண்டும் என்ற அறிவினைத் தருகின்றமை காணலாம்.

**பட்டினத்தார்:-** இவர் சுமார் 1000 ஆண்டுகளுக்குமுன் காவிரிப்பூம்பட்டினத்திலே பிறந்தவர். தந்தையார் பெயர் சிவநேசர். தாயார் ஞானகலாம்பை. இவரது இயற்பெயர் திருவெண்காடர். இவரது திருப்பாடல்களாகிய கோயில் நான்மணிமாலை யையும், திருக்கழுமல மும்மணிக் கோவையையும், திருவிடைமருதூர் மும்மணிக் கோவையையும், திருஏகம்பமுடையார் திருவந்தாதியையும், திருஒற்றியூர் ஒருபா ஒருபதையும் நம்பியாண்டார் நம்பிகள் பதினென்ரும் திருமுறையுள் சேர்த் துள்ளார். இவர் தம் செல்வங்களைப் பிறர்க்கு வழங்கித் துறவுபூண்டும், பலப்பல தலங்கள் சுற்றியும், அங்கங்கு உறையும் சிவபெருமானைப் பற்றிப் பாடியும் உள்ளார்; இவர் சென்னைக்கு

அருகிலுள்ள திருவொற்றியூரில் முத்தியடைந்த நாள் ஆடி உத்திராடநாள் என்பர். பட்டினத்தார் இருவர் உள்ளனர் என்பர்.

இவ்வாறு கற்பனை நயம் செறிந்த பாடல்களை முன்னே தந்துள்ளார் முத்தொள்ளாயிர முடையார்.

பாடல்;-

துடியடித் தோற்செவித்
    தூங்குகைந் நால்வாய்ப்
பிடியேயான் நின்னை
    யிரப்பல்—கடிகமழ்தார்ச்
சேலேக வண்ணனொடு
    சேரி புகுதலுமெஞ்
சாலேகம் சார நட.

—முத்தொள்ளாயிரம்.
ரெ. முத்துக்கணேசன் பதிப்பு. பா. எ; 72

**கோயில் நான்மணிமாலை:**

நால்வகை மணிகளால் தொடுக்கப் பெறும் மாலையைப் போன்று இந்நூல் நால்வகைப் பா—வகையால் தொகுக்கப்பெற்றதாகும். நால்வகைப்பா:- வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம், ஆசிரியப்பா. இது நாற்பது செய்யுள்களால் அந்தாதித் தொடையமையப் பாடப் பெற்றது,

பட்டினத்தார் தம் பைந்தமிழைப் பற்றிய பாடல்:-

கண்ணின் றெளிரும்
    கழுமலக் கோவையோ!
உண்ணின் றுருக்கும்
    ஒருபாவே!—பெண்பாகன்

நட்டம் பயில்கோயில்
நான்மணி மாலையோ!
பட்டினத்தார் பைந்தமிழ்ப் பா.

—ரெ. முத்துக்கணேசன்

ஒப்புமை:

செய்ய சடைமுடியன்
செல்வனையான் கண்டெனது
கையறவும் உள்மெலிவும்
யான்காட்டப்—பையவே
காரேறு பூஞ்சோலைக்
காளத்தி யாள்வார்தம்
போரேறே இத்தெருவே
போது.

—நக்கீரர்

திருமுறை; 11. கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி
பா. எ. 78.

# 37

## ஆரூரரும் அருள்விளக்கும்

ஆரூரர் இங்கிருக்க
அவ்வூர்த் திருநாளென்
றூரூர்கள் தோறும்
உழலுவீர்;—நேரே
உளக்குறிப்பை நாடாத
ஊமர்காள்! நீவிர்
விளக்கிருக்கத் தீத்தேடு வீர்.

—பட்டினத்தார்

பட்டினத்தடிகள் திருப்பாடல் திரட்டு; திருவாரூர்;
பா. எ: 5.

வாழ்க்கையில் சிறப்பாக வேண்டிய பொருள் ஒன்றைத் தேடுவோம்; நாம் தேடும் அப்பொருள் நமக்கு அருகிலேயே இருக்கலாம். ஆனல் அவை நமக்குப் புலப் படுவதில்லை; அப்பொருளை அடைவதற்கு வெளியூர்கள் பல சென்று தேடுவோம்; அங்கும் கிடைக்காது; பின் எங்கும் அலைந்து வந்த பிற்பாடு அருகிலிருப்பது தெரியும்; நம் அறிவுக்குப் புலப்படும்; அருகிலிருப்பதை அறியாது அலைந்தோமே என நாம் அங்கலாய்த்துக் கொள்வது இயற்கைதானே! பட்டினத்தார் தலங்கள் பலசுற்றிப் பின் திருவாரூர் வந்து சேர்ந்தார். அங்கு நெஞ்சார இறைவனை இறைஞ்சினர். அங்குள்ள மக்களில் சிலர் கூட்டம் கூட்டமாகப் பக்கத்து ஊர்த் திருவிழாவைக் காணச் செல்வதைப் பார்த்தார்; இன்னும் சிலர் மற்றும் பல்வேறு ஊர் விழாக்காணச் சென்றனர். இவ்வாறு செல்லும் மக்களைக் கண்ட பட்டினத்தார் ஒருபுறம் மகிழ்ந்தார்; பிறிதொருபுறம் அவர்கள் தம் அறியாமையை எண்ணி வருந்தினர். பின் மக்களை நோக்கிப் பேசுகின்றார்.

திருவாரூரை உடைய இறைவன் திருவாரூரிலே விற்றிருந்து அருள் புரிகின்ருன். அவ்வருள்புரியும் இறைவனை விடுத்து இவ்வூரில் தெய்வத்திருவிழா, அவ்வூரில் தெய்வத்திருநாள் என்று ஊர்கள் தோறும் சென்று அலைகின்ற மக்களே! நேராக உள்ளத்தைக் கேளுங்கள்; உள்ளத்தினுள்ளே தேடிப் பாருங்கள்; உள்ளம் காட்டும்; இறைவன் வேறெங்கும் செல்லவில்லை; ஆரூரிலே அமர்ந்துள்ளான்; உள்ளத்தை நாடி இறைவனை அறிந்து கொள்ளாத குறைபாடுடையவர்களே! இறைவன் ஆரூரிலே விற்றிருக்க, நீங்கள் வெளியூர்கள் பலசென்று இறைவனைத் தேடுவது ஒளிமிக்க விளக்கைக் கையிலே வைத்துக் கொண்டு தீ எங்காவது கிடைக்குமா என்று அலையும் செயலை ஒத்துள்ளது என்கின்ருர்.

குறிப்பு:- 'விளக்கிருக்கத் தீத்தேடி அலைவாருண்டோ?'— என்பது பழமொழியாகும். திருவாரூரில் விற்றிருக்கும் இறைவனை விளக்கிற்கும், அவ்விறைவனைத் தேடி அலைவதனைத் தீத்தேடி அலைவதற்கும் ஒப்பிடுகிருர் பட்டினத்தடிகள். இறைவன் திருவாரூரில் விற்றிருக்க, ஏன் பிற ஊர்களில் சென்று தேடுகின்றீர்கள் என்று அவர் கேட்பதின் மூலம் 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்ற ஆன்ருேர் மொழியை அழகாய் வலியுறுத்திக் கூறுகின்ருர். திருவாரூர்த் தியாகராசப் பெருமானிடத்து அத்துணை ஈடுபாடு அடிகளுக்கு. மேலும் ஒருருவம் ஒரு நாமம் இல்லாத இறைவனுக்குப் பல்லுருவும் பல நாமமும் படைத்து ஊர்கள் தோறும் திருவிழா எடுப்பானேன்? அதைக் காணச் செல்வானேன்? இறைவன் அவரவர் உள்ளத்தினுள்ளே உள்ளான்; ஒவ்வொருவரும் அவரவர்தம் அறிவை அவரவர்தம் உள்ளம் நோக்கிச் செலுத்தினல் அவ்வவர் உள்ளத்தினுள்ளே இறைவனைக் காணலாமென்றும், உள் நோக்கி ஒருமுகப்பட்டு இறைவனைச் சிந்தித்தால்

எல்லாம் வல்ல இறையருளை எளிதில் எய்தலாம் என்றும், உள் நினைவார் இறைவனை எவ்வண்ணம் எண்ணுகின்றனரோ அவ்வண்ணம் இறைவன் காட்சியளிப்பான் என்றும், இருளை அகற்றும் ஒளிபோலத் துன்பஇருளைத் துடைக்கும் தூயவன் தியாகராசப் பெருமான் என்றும், அறிவுறுத்தி வழிகாட்டுகின்றார் பட்டினத்துப் பிள்ளையார்.

திருப்பாடல் திரட்டு:- பட்டினத்தடிகள் பாடிய பாடல்களின் தொகுப்பாகும். பட்டினத்தார் தாம்சென்ற திருத்தலங்களில் உறையும் சிவனைப் பற்றிய பாடல்களும், பொதுவாகப் பாடிய பாடல்களும் பின்முடுகு வெண்பா, விருத்தம், அருட்புலம்பல், நெஞ்சொடு புலம்பல், பூரணமாலை, நெஞ்சொடு மகிழ்தல், இறந்த காலத் திரங்கல், உடற் கூற்று வண்ணம் முதலியனவும் இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ளன.

ஒப்புமை;—

ஒன்றும் தேவும் உலகும்
உயிரும் மற்றும் யாதுமில்லா
அன்று நான்முகன் தன்னோடு
தேவர் உலகோடு உயிர்படைத்தான்
குன்றம் போல்மணி மாட
நீடு திருக்குரு கூரதனுள்
நின்ற ஆதிப் பிரான் நிற்க
மற்றைத் தெய்வம் நாடுதிரே!

—நம்மாழ்வார்
திருவாய்மொழி; பா. எ; 3106.

## 38

### சிரியாரோ!

கறுத்தகன் டாஅண்ட வாணு
வருபுனற் கங்கைசடை
செறுத்தசிந் தாமணி யேதில்லை
யாய்என்னைத் தீவினைகள்
ஒறுத்தல்கண் டாற்சிரி யாரோ
பிறர்என் உறுதுயரை
அறுத்தல்செய் யாவிடின் ஆர்க்கோ
வருஞ்சொல் அரும் பழியே.

—நம்பியாண்டார் நம்பி

திருமுறை: 11.கோயிற்றிருப்பண்ணியர்விருத்தம்; பா. எ: 39

வாழ்க்கையில் தந்தைக்கும் மகனுக்கும் மன வேறு பாடுகள் வருவது இயற்கை; மகன் இளமை காரணமாகத் தவறு செய்யலாம்; ஆனல் மகன் செய்த தவற்றைச் சரி செய்து அவனைக் காப்பது தந்தையின் கடமையல்லவா? அதை விடுத்துத் தந்தை மௌனமாக இருப்பாரேயானல், மகன் செய்த தவற்றினல் வரும் பழி தந்தையையும் சாரு மல்லவா? ஆகவே பழி வாரா வண்ணம் தந்தை தடுத்துக் காப்பதுதானே முறையாகும். இவ்வாறு வாழ்வில் காணு கின்ற நன்முறைகளைப் போன்றவற்றை நடராசப் பெருமா னிடத்தே வைத்துப் பேசுகின்ருர் நம்பியாண்டார் நம்பிகள். நம்பிகள் இறைவனிடம் ஆழ்ந்த அன்பு கொண்டவர். தீவினை சாடத் துன்புற்ருர்; இறைவனை நோக்கி உரிமையோடு பேசுகின்ருர். இறைவா! நடராசப் பெருமானே! நீ எல்லாம் அறிந்தவன்; தீவினைகள் என்னை வந்து துன்புறுத்துகின்றன: காக்கவேண்டியவன் நீ. தீவினைகளை அகற்றி என்னைக் காக்கா விட்டால், வினையால் துன்புற்று விழ்ந்த பழி உன்னையல்லவா சாரும்? அருட் செல்வமிக்க நீ என் அருகிருக்க நான் துன்புற்ருல் உலக மக்கள் இச்செயல்கண்டு சிரிக்க மாட்டார்களா? என்று இறைவனை நோக்கிப் பேசுகின்ருர் நம்பியாண்டார் நம்பி,

நஞ்சை உண்டு அதனால் கறுத்த கழுத்தையுடைய இறைவா! வானகத்தே வாழ்பவனே! ஆணவத்தோடு வருகின்ற கங்கை நதியைத் தன் சடையில் அடக்கி, உன்பால் அடைக்கலமாகிக் கேட்பவருக்குக் கேட்பன வற்றை இல்லை என்னாது வழங்கும் தெய்வமணியே! தில்லைப் பதியுடையாய்! யாருக்கும் கிடைக்காத உன் அருட் செல்வத்திற்கு உரியவன் நான்; நீ அருகிருக்க என்னைத் தீவினைகள் வந்து துன்புறுத்துகின்றன: அவ்வாறு துன்புறுத்துதலைப் பிற உலக மக்கள் கண்டால் சிரிக்கமாட்டார்களா? கொடிய துன்பத்தை அழித்து என்னை நீ காக்காவிட்டால், வினையால் துன்புற்று வீழ்ந்த தனால் வருகின்ற பழிச்சொல் யாருக்கு? உனக்குத் தானே! என்கின்றார்.

குறிப்பு: கொல்லும் நஞ்சை உண்டு உலகைக் காத்த கருணை வடிவினன் இறைவன்; அதுமட்டுமா? ஓடி வரும் கங்கையின் ஆணவத்தை அடக்கி உலக மக்களுக்குப் பயன்படுமாறு செய்த அன்பு வடிவினன் இறைவன்; இத்தகைய கருணையும் அன்பும் வடிவு கொண்ட இறைவனின் அருளைத் தான் பெற்றும் தீவினைகளால் துன்புறலாமா? என்று ஒருபால் எண்ணுகின்றது நம்பிகளின் உள்ளம்; மேலும் எதையும் வாரி வழங்கும் சிந்தா மணியாகிய இறைவன் அருகில் இருந்தும் இத் தீவினைகள் தம்மை வருத்துகின்றனவே என்று மற்றொருபால் எண்ணிக் குமைகின்றது நம்பி களின் உள்ளம்; ஆனால் இத்தீவினைகள் தன்னை வருத்தினாலும் பரவாயில்லை, தான் துன்புற்றாலும் பரவாயில்லை: தன்னைக் காவாது விட்ட பழி இறை வனையல்லவா சாரும்? இறைவனை மக்கள் பார்த் துச் சிரிப்பரே என்று இறைவனிடத்துக் கொண்ட அன்பால் ஏங்கித் தவிக்கின்றது நம்பிகளின் உள்ளம். இவ்வாறு இப்பாடலில் நடராசப்பெரு மானுக்காக ஏங்கித் துடிக்கும் நம்பிகளின் பத்திப்

பெருமையும், இறையருள் பெற்ற நம்பிகளின் எளிமையும் விளங்கக் காணுகின்றோம்.

அருட்செல்வர் அருகிருந்தும் அவதிப்படுகின்றோமே என்ற கருத்தைச் 'சிரியாரோ'– என்ற ஒரு சொல்லால் சுட்டும் கவிதை நயம் எண்ணிப் போற்றத்தக்க தொன்றாகும்.

கோயிற்றிருப்பண்ணியர் விருத்தம்:-

இந்நூல் எழுபது கட்டளைக் கலித்துறையால் ஆகியது. அந்தாதியாகப் பாடப் பட்டுள்ளது. நம்பிகள், தேவாரத் திருப்பதிக ஏடுகளை எடுத்து முறைப்படுத்தச் சிதம்பரம் சென்ற காலை, தில்லைத் திருநடமிடும் பாதனை இறைஞ்சி இந்நூல் பாடினர் என உரைப்பர்.

நம்பியாண்டார் நம்பி;- இவர் தென்னார்க்காடு மாவட்டத்தில் சிதம்பரத்திற்கு அருகில் திருநாரை யூரில் ஆதி சைவர் குலத்தில் பிறந்தவர். அங்குக்கோயில் கொண்ட பொல்லாப் பிள்ளையாரின் அருளைப் பெற்றவர். நம் தமிழ் மறையாகிய மூவர் தேவாரத் திருப்பதிக ஏடுகளை, சோழ அரசனை இராசராச சோழன் வேண்டுகோளின்படி, பிள்ளையார் திருவருளால் சிதம்பரத் திருக்கோயிலிலிருந்து எடுத்து முறைப்படுத்தித் தந்த பெரியார். தேவாரம், திருவாசகம் முதலிய நூல்களைப் பதினொரு திருமுறைகளாக வகுத்துக் காத்த கவிஞர். இவர்தம் நூல்களையும் பதினோராம் திருமுறையில் சேர்த்துள்ளார். இவர்தம் நூல்கள் 1, திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை மணிமாலை; 2. கோயிற்றிருப்பண்ணியர் விருத்தம்; 3. திருத்தொண்டர் திருவந்தாதி; 4. ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி; 5. ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம்: 6. ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக்கோவை; 7. ஆளுடைய பிள்ளையார் திருவுலா மாலை; 8. ஆளுடைய

பிள்ளையார் திருக்கலம்பகம், 9. ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை; 10 திருநாவுக்கரசு தேவர் திருவேகாதசமாலை முதலியன.

நம்பியாண்டார் நம்பிதம் தமிழைப்பற்றிய பாடல்:-

சந்தத் தமிழ்பரப்பும்
சம்பந்தன் தாளடிக்கீழ்
கந்தமுறும் காதற்
களிப்பென்கோ?—அந்தமிலான்
ஆரைசூழ் கோயில்
அருளென்கோ? ஞானத்தான்
நாரையூர் நம்பி தமிழ்.

—ரெ. முத்துக்கணேசன்

ஒப்புமை:

அருளா தொழிந்தால் அடியேனை
அஞ்சேல் என்பா ராரிங்குப்
பொருளா வென்னைப் புகுந்தாண்ட
பொன்னே! பொன்னம் பலக்கூத்தா!
மருளார் மனத்தோ டுனைப்பிரிந்து
வருந்து வேனை வாவென்றுன்
தெருளார் கூட்டங் காட்டாயேற்
செத்தே போனாற் சிரியாரோ?

—மாணிக்கவாசகர்.

தி: 8: திருவாசகம்; கோயில் மூத்த திருப்பதிகம் பா. எ. 8.

வான்வேண்டு சிற்றம்பலத்தே
வயங்கி வளரமுதத்
தேன்வேண்டி னேன்இத் தருணத்
தருள்செய்க; செய்திலையேல்
ஊன்வேண்டு மென்னுயிர் நீத்துநின்
மேற்பழி யோவிளைப்பேன்
நான்வேண்டு மோபழி தான்வேண்டு
மோ சொல்க நாயகனே!

—இராமலிங்க அடிகள்;

திருவருட்பா; ஆறுவது திருமுறை; வெறிவிலக்கு; தனிப்பாடல்;

## 39

### கடவுள் வாழ்த்து

உலகெ லாம்உணர்ந்து
 ஓதற்கு அரியவன்
நிலவு லாவிய
 நீர்மலி வேணியன்
அலகில் சோதியன்
 அம்பலத்து ஆடுவான்
மலர்சி லம்படி
 வாழ்த்தி வணங்குவாம்.

—சேக்கிழார்

திருமுறை 12; திருத்தொண்டர் புராணம்; பாயிரம்.
பா. எ: 1.

இயற்கைச் செல்வங்கள் மனித வாழ்க்கைக்கு மிக இன்றியமையாதன. வாழ்க்கையும் இயற்கையோடு ஒட்டியதுதானே! மனிதனைத் தோற்றுவித்த இந்த மண்ணும், காற்றும், நீரும், தீயும், வானும் ஆகிய ஐம்பெரும் இயற்கைப் பொருள்களும் மிகமிக இன்றியமையாதன. இவ் ஐவகைப் பொருள்களும் உலகைப் படைக்கின்றன; காக்கின்றன; உயிர்களை வளர்க்கின்றன; சிறப்பாக மனித வளர்ச்சிக்கு உறுதுணையாகி உதவுகின்றன. ஐவகைப் பொருள்களும் இல்லையாயின் உலகம் இல்லை; உயிர்கள் இல்லை; மனித இனமே இல்லை; ஆகவே உலகுக்கும் உயிர்க்கும் உயிர்த் தத்துவமாக இலங்குவது மண் - காற்று - நீர் - தீ - விண் என்று கூறப்படும் ஐவகையான இயற்கைச் செல்வங்கள்தாம் என்று அறிகின்றோம். நாம் நாள்தோறும் இவற்றின் அரிய சத்திகளை உணர்ந்து அனுபவிக்கின்றோம்; ஆனால், இவற்றைத் தோற்றுவித்த இவற்றிற்கெல்லாம் மேலான சத்தி வாய்ந்த

பரம்பொருளை எங்ஙனம் அறிவது? அப்பரம்பொருள் மனத்திற்கும் அப்பாற்பட்டவனு யிருக்கின்ருன்; வாக்கிற்கும் அறிவிற்கும் அப்பாற்பட்டவனு யிருக்கின்ருன்; அப்பாற் பட்ட ஒருவனை எவ்வாறு கண்டு வாழ்த்தி வணங்குவது என்று சேக்கிழார் பெருமானைக் கேட்போர்க்கு அவர் கூறும் விடையைக் காண்போம். நீங்கள் நாள்தோறும் காணும் மண் - காற்று - நீர் - தீ - விண் என்ற ஐவகைப் பொருள்களையும் இறைவன் தன்னகத்தே கொண்டு ஆடும் திருக்கோலத்தில் தில்லையிலே காட்சியளிக்கின்ருன்; ஐவகைப் பொருளையும் அணிந்து ஆனந்தத் தாண்டவம் புரிகின்ருன். மக்களாகிய நாம் வணங்குதற்கென்றே எளியனுய் இம்மண்ணகம் வந்து தில்லையில் நின்று - கலைப்பொருளாக - உலகம் வாழ - உயிர்கள் வாழ – நடம் ஆடிக் கொண்டிருக்கின்ருன். அவனை நாம் எல்லோரும் சேர்ந்து வாழ்த்தி வணங்குவோம்; வாரீர் என்று அழைத்துக் கூறுகின்ருர் சேக்கிழார்.

அழகின் மூலக்கூற்றில் தோன்றியது இம்மண்ணுலகம்: இறைவனும் இம் மண்ணுலகமாகக் காட்சியளிக்கின்ருன். மண்ணுலகமாகிய இயற்கை வடிவமாய்த் திகழும் இறைவன் மக்கள் தங்கள் மனத்தால் உணர்தற்கும் அரியவனு யிருக்கின்ருன்; நாவால் ஓதுதற்கும் அரியவனு யிருக்கின்ருன்; அறத்தினைப் போன்று பரந்து விரிந்தது விண்ணகம். அத்தகைய விண்ணகமான இயற்கையைச் சுட்ட விண்ணகத்தில் ஒளிரும் நிலவானது தன் முடியில் உலவப் பெற்றவனுயிருக்கின்ருன்; அன்பு என்னும் தண் ணருளைச் சுட்டுவது நீர் நிறைந்த கங்கையாகும். அத் தன்மை நிறைந்த நீர் என்னும் இயற்கையை விளக்கக் கங்கைதங்கியசடையனுயும்இருக்கின்ருன்; அறிவினைப்போல் சுடர்விடுவது தியாகும்; தூய அறிவாகிய தீ யென்னும் இயற்கையைக் காட்ட அதன் நிறம் தாங்கி அளவு கடந்த சோதிவடிவினனுயிருக்கின்ருன்;உலகம் வாழ உயிர்கள் வாழ உயிர்ப்பொருளாயிருப்பது காற்ருகும்; அஃது இறைவன் அருளைப் போன்றது; அக் காற்று என்னும் இயற்கை

தோன்றுதற்காக அதனை மக்களுக்கு உணர்த்துதற்காகத் திருச்சிற்றம்பலத்தின்கண்ணே நின்று அசைந்து கலை மயமாகி ஆனந்தத் தாண்டவம் புரிகின்றான் இறைவன்; ஆனந்த நடமிடும் நடராசப் பெருமானது அருள் மலர்ந்த ஒலிக்கும் சிலம்பு அணியப் பெற்ற அவ் விறைவனது திருவடியை நாம் நாவார வாழ்த்தி மெய்யார வணங்குவோமாக என்றனர்.

குறிப்பு:-இயற்கைப் பொருள்களில் அடிப்படைப் பொருளும் மூலப்பொருளுமானவை மண்-விண்-நீர்-தீ-காற்று என்று கூறப்படும் ஐவகைப் பொருள்கள்தாம். இவ் ஐவகைப் பொருளுமாகி இறைவன் நமக்கு அருள் புரிகின்றான் என்ற உண்மையையும், பண்புகளுக் கெல்லாம் மூலப் பண்புகளாயிருப்பவை அழகு — அறம்—அன்பு — அறிவு—அருள் என்ற இயல்பையும், அப்பண்புகளின் வடிவமாகி நின்று இறைவன் மக்களுக்கு அருள் பாலிக்கின்றான் என்ற கருத்தையும் ஒருசேர இப் பாடலில் நமக்கு உணர்த்துகின்றார் சேக்கிழார் பெருமான். மேலும் இறைவன் இயற்கைப் பொருளாகி மக்களுக்குப் புறத்தே பணியாற்றுகின்றான்; மக்கள்பால் அன்பு பூண்டு அறமுணர்த்தி அறிவுயர அழகினைக்காட்டி அருள் புரிந்து ஆட்கொள்வதின் மூலம் மக்களுக்கு அகத்தேயும் பணி புரிகின்றான் என்று கூறுகின்றார். முடிவில், எத்துணைக் குற்றம்புரியினும் குற்றம் களைந்து குணம் நிறைந்த மனிதனாக்கி அருள் புரியும் தன்மையது அவனது திருவடி என்பதனை 'மலர்சிலம்படி'— என்ற தொடரால் உணர்த்தும் சேக்கிழார் திருவாக்கு போற்றி மகிழத்தக்க தொன்றாகும். உலகப் பிறப்பிற்கு மூலப்பொருளாய் நின்று உயிர்கள் வாழ ஆடும் நடனத் திருக் கோலமே நாம் வணங்கி வாழ்த்துதற்கேற்ற திருக் கோலம் என்பதை இப்பாடலில் மிகஅழுத்தமாகக்

கூறுகின்றார் சேக்கிழார். அம்பலத்தே நடம்பயிலும் அழகுருவத்தில் அந்துணை ஈடுபாடு சேக்கிழார் பெருமானுக்கு!

**சேக்கிழார்:**-தொண்டை நாட்டில் குன்றத்தூரில் வேளாளர் மரபில் பிறந்தவர். இவர்தம் இளமைப் பெயர் அருண்மொழித்தேவர் என்பது. கவிஞர்; ஒழுக்க சீலர்; அனபாய சோழர் என்னும் இரண்டாங் குலோத்துங்கரிடம் முதலமைச்சரா யிருந்தார். அரசர் வழங்கிய பட்டம் 'உத்தம சோழப் பல்லவர்' என்பதாகும். இவர், அரசர் சமணக் காப்பியத்துள் மூழ்கி நின்றமையை மாற்றச் சைவக் காப்பிய மாகிய திருத்தொண்டர் புராணம் என்ற பெரிய புராணம் என்னும் வரலாற்றுக் காப்பியத்தை இயற்றினர். நூலைத் தந்த சேக்கிழாரையும் நூலையும்அரசன் பட்டத்து யானைமேல் ஏற்றித் தாமே கவரிவீசி, 'தொண்டர் சீர்பரவுவார்' என்ற பட்டமும் சூட்டிச் சிறப்பித்தனன் என்பர். இவர்தம் காலம் பதினோராம் நூற்றாண்டு என்று உரைப்பர்.

சேக்கிழாரைப்பற்றி மீனாட்சி சுந்தரம்பிள்ளை யவர்கள்,

பத்திச் சுவைநனி சொட்டச்
சொட்டப்பாடிய கவிவலவ

(சேக்கிழார்பிள்ளைத்தமிழ் தாலப்பருவம் :பா. எ: 8.)
என்று பாடியுள்ளார்.

**திருத்தொண்டர் புராணம்:**-சைவத்திருமுறை பன்னிரண்டில் இந்நூல் பன்னிரண்டாம் திருமுறை யாகும். இந்நூலுக்கு மற்றொரு பெயர் பெரிய புராணம் என்பது. அருண்மொழித் தேவராகிய சேக்கிழா ரடிகளால் இயற்றப்பெற்றது. இந்நூல் தமிழ கத்தில் பல்வேறு காலங்களிலும், பல்வேறு ஊர்களிலும், பல்வேறு குலங்களிலும் பிறந்த அறுபத்து மூன்று சிவனடியார்களின் உண்மை வரலாற்றைக் கூறும் வரலாற்றுத் தமிழ்க் காப்பிய

மாகும். சுந்தரர் இயற்றிய திருத்தொண்டத் தொகையையும், நாரையூர் நம்பியாண்டார் நம்பிகள் இயற்றிய திருத்தொண்டர் திருவந்தாதி யையும் ஆதார நூல்களாகக் கொண்டு சிவனடி யார்களின் வரலாறுகளைத் தொகுத்து விரித் துரைக்கின்றது இந் நூல். இந்நூல் மொத்தம் நாலாயிரத்து இருநூற்றைம்பத்து மூன்று பாடல் களைக் கொண்டது.

சேக்கிழார் தம் தமிழைப்பற்றிய பாடல்:—

அத்தன் அரனடிக்கீழ்
ஆழும் தவஅடியார்
பத்திநிலை காட்டும்
பலகனியோ?—முத்தமிழில்
வாக்குக் கொருநூலோ?
வாய்த்தசிவக் காப்பியமாம்
பாக்கமழும் சேக்கிழார் பா.

—ரெ. முத்துக்கணேசன்

ஒப்புமை:-

அலையார் புனல்அனல் ஞாயிறு அவனி
மதியம் விண்கால்
தொலையா உயிருடம் பாகிய
சோதியை

—சேரமான் பெருமாள் நாயனர்;
திருமுறை 11; பொன்வண்ணத்தந்தாதி; பா. எ: 15.

புகழுநல் லொருவன்என்கோ
பொருவில்சீர்ப் பூமியென்கோ
திகழும்தண் பரவைஎன்கோ
தீயென்கோ வாயுவென்கோ
நிகழுமா காசமென்கோ
நீள்சுட ரிரண்டுமென்கோ
இகழ்வில்இவ் வனைத்துமென்கோ
கண்ணனைக் கூவுமாறே.

—நம்மாழ்வார்;
திருவாய்மொழி; பா, எ: 2930.

# 40

## பள்ளிகொண்ட அழகர்

எழிலுடைய அம்மனைமீர்!
　　என்னரங்கத் தின்னமுதர்;
குழல்அழகர்; வாயழகர்;
　　கண்ணழகர்; கொப்பூழில்
எழுகமலப் பூவழகர்;
　　எம்மானர் என்னுடைய
கழல்வளையைத் தாமும்
　　கழல்வளையே ஆக்கினரே!

—ஆண்டாள்;
நாச்சியார் திருமொழி; பா. எ: 608.

அழகு உணர்ச்சியானது மனிதர்களை மயக்குகின்றது; மெல்ல அவர்கள் உள்ளங்களைப் பற்றிக் கொள்கின்றது; பின் அவ்வுள்ளங்களில் குடியேறி ஆட்சி புரிகின்றது; இன்ப உணர்ச்சியை வழங்குகின்றது; இயற்கை நலத்தை ஊட்டுகின்றது; அதிலும் பெண்களின் மனத்தை மிக எளிதில் தன்வயப்படுத்துகின்றது; ஆனல், இவ்வழகுணர்ச்சியோடு காதல் உணர்ச்சியையும் கலந்து விடுமேயானல் கேட்கவே வேண்டுவதில்லை! இந்தப் பெண்களைப் படாத பாடு படுத்தும்! ஆண்டாள் திருவரங்கத்து அழகனைக் கண்டாள்; கைதொழுதாள்; அவன் கண்ணழகு மயக்கிற்று; வாயழகு புன்சிரிப்பால் கவ்விற்று; அவன் உருவ அழகு அவள் உள்ளத்தில் கோயில் கொண்டது. காதலானள்; உருகினள்; வாடினள்; உடல் மெலிந்தாள்; கை வளைகள் கழன்றன; மெலிவை அடைந்த ஆண்டாளை நோக்கி, வளர்த்த செவிலித்தாய் ஏன் மெலிவுற்ருய் எனக் கேட்டாள். அதற்கு ஆண்டாள் பதில் கூறுகின்ருள்.

அழகை உடைய அன்னையிர்! எனக்குரிய திருவரங்கத்தே விற்றிருக்கும் அரங்கநாதர் இனிமை நல்கும் அமுதம் ஒத்த உருவத்தை உடைய அழகர்; அவர் சுருட்டி முடித்த கூந்தலை உடைய அழகர்; புன்சிரிப்பைக் காட்டும் சிவந்த திருவாயை உடைய அழகர்; காண்பாரை ஈர்க்கும் கண்ணழகர்; புதிதாக மலர்ந்தெழும் தாமரை மலரின் மென்மையையும் அழகையும் பெற்ற உந்திச் சுழிகொண்ட திரு வயிற்றைப் பெற்ற அழகர்; என்னை ஆட்கொண்ட அழகுருப் பெற்றவராகிய அத் தலைவர் காதல் பித்தேற்றி என்னை மெலிவித்தார். என்னுடைய, கழற்றவும் பின் சேர்க்கவும் இயல்புடைய கைவளையைக் கையைவிட்டே கழன்றேடும் கைவளையாகத் தாம் செய்து விட்டனரே! பார்த்தீர்களா? என்கின்ருள்.

குறிப்பு:- அழகை இறைவடிவாக வணங்கும் பண்பு நம் தமிழகத்தார் தம் தமிழ்ப் பண்பாகும். திருவரங் கத்திலே பள்ளிகொண்ட அழகரை அழகின் வடிவாகவே எண்ணி வணங்குகிருள் ஆண்டாள். காதலியின் நிலையினின்று திருமாலை அனுப வித்துப் பாடுகின்ருள்; மேலும் அவர்தம் தோற்றம்-வாய்முறுவல்-குழல் - கண் - திருவயிறு எல்லாம் அழகின் மறுபிறப்பாகவே - எல்லாம் அழகுமயமாகவே தோன்றுகின்றன. அழகிய மணவாளராம் அழகரிடத்து அத்துணை ஈடுபாடு ஆண்டாளுக்கு!

அழகின் வடிவை – திருமாலின் திருவுருவை மனக் கோயிலில் உள்ளிருத்திக் காதலொடு வழிபடுக என்றும், அழகே அனைத்திற்கும் ஆதாரம் என்றும் அறிவிக்கின்றது இப் பாடல்.

இன்னமுதர் - அமுது, உண்டார்தம் பிறவி நோயைத் தீர்க்குமென்பர்; ஆனல் அழகராகிய அமுது காதலொடு கண்டவுடனே பிறவி நோயை

நீக்கவல்லது என்பதனுல் பேரின்பத்தைச்சுட்டி இன்னமுது என்ருர் எனக்கொள்க.

**திருவரங்கம்:-** திருச்சி மாவட்டத்தில் காவிரிக்கும் கொள்ளிடத்திற்கும் இடைப்பட்ட ஆற்றிடைக் குறையான தீவாகும். அரங்கநாதர் கோயில் கொண்ட இடம். இக் கோயிலே நடுவாக வைத்துச் சுற்றிலும் ஏழு பிரகாரங்களேக் கொண்டது இவ்வூர். அரங்கநாதருக்குக் கோயில் கொண்ட பெருமான், அரங்கன், அழகிய மணவாளன், பெரியபெருமாள் என்று பெயர்கள் உண்டு. தாயார் பெயர் அரங்கநாயகி என்பதாகும். பெருமாள் கிடந்த திருக்கோலத்தில் காட்சி யளிக்கின்ருர். அழகிய மணவாளப் பெருமாளே ஆழ்வார் பன்னிருவருள் மதுரகவி ஆழ்வாரைத் தவிர மற்றைய பதினெரு ஆழ்வார்களும் பாடி யுள்ளனர். திருவரங்கத்தைப்பற்றித் திருவரங்கக் கலம்பகம், திருவரங்கத்து அந்தாதி, திருவரங்கத்து மாலே, ஸ்ரீரங்கநாயகர் ஊசல், என்று பிள்ளேப்பெருமாள் ஐயங்கார் நூல்கள் பாடி யுள்ளார். கவியரசர் கம்பர், தாம் பாடிய இராமாயணத்தை அரங்கேற்றிய இடம் திருவரங்கம் என்பர். அரங்கம் என்ருல் ஆற்றிடைக் குறை என்பது பொருளாகும்.

**ஆண்டாள்:-** இவர் வில்லிபுத்தூரில் நந்தவனத்தில் பெரியாழ்வாரால் கண்டெடுக்கப்பட்டவர் என்பர். இவருக்கு ஆழ்வார் திருமகளார் என்றும், கோதையார் என்றும், சூடிக்கொடுத்த நாச்சியார் என்றும், ஆண்டாள் என்றும் பெயர்கள் உண்டு. திருப்பாவை, நாச்சியார் திருமொழி என்ற நூல்கள் இவர் அருளிச் செய்தவை யாகும். இவர் பன்னிரு ஆழ்வார்களில் ஒருவராவர். இவரைப் பற்றி 'ஆண்டாள் பிள்ளேத்தமிழ்'—என்று ஒரு

நூல் கவிஞர் ஒருவரால் பாடப்பெற்றுள்ளது என்பர்.

கோதையார் தமிழைப்பற்றி வேதப்பிரான் பட்டர் அருளியமை காண்க:—

பாதகங்கள் தீர்க்கும்
பரமன் அடிகாட்டும்
வேத மனைத்துக்கும்
வித்தாகும்—கோதைதமிழ்
ஐயைந்து மைந்தும்
அறியாத மானிடரை
வையம் சுமப்பதூஉம் வம்பு!

—வேதப்பிரான் பட்டர்;
ஆண்டாள் வாழித் திருநாமம்.

## 41

### கன்னியும் கண்ணனும்

உள்ளே உருகி நைவேனை
உளளோ இலளோ என்னாத
கொள்ளை கொள்ளிக் குறும்பனைக்
கோவர்த் தனனைக் கண்டக்கால்
கொள்ளும் பயன்ஒன் றில்லாத
கொங்கை தன்னைக் கிழங்கோடும்
அள்ளிப் பறித்திட் டவன்மார்பில்
எறிந்தென் அழலைத் தீர்வேனே!

—ஆண்டாள்
நாச்சியார் திருமொழி; பா. எ. 634

காதல் உணர்வானது காலப் போக்கில் வளர்ந்து முற்றும்; முற்றி ஒருவகையான வெறித் தன்மையை அடையும்; ஒருபோது காதலனைப் பற்றிய நினைப்பை எழுப்பி மனத்தைக் களிப்பிக்கும்; மறுபோது சினப்பிக்கும்; இவ்வாறு காதல் வயப்பட்ட மனத்தை அலைக்கும் என்பர். ஆண்டாள் கண்ணனைக் கண்ணாரக் கண்டாள்; காதலுற்றாள்; அவனையே அடைவது என்ற வெறி உணர்வு பொங்க நின்றாள்; தன் அழகிய திருமேனியை ஒருமுறை தானே பார்த்துக்கொண்டாள்; கட்டுவிடாத தன் முலைகளைக் காதலன் கட்டித் தழுவ வரவில்லையே என ஏங்கி நின்றாள்: அந்த ஏக்கத்தோடு சினந்து தனக்குள்ளே பேசிக் கொள்கின்றாள்.

நான் கண்ணனைக் கண்டேன்; காதலுற்றேன்; காதலுற்ற நாள் முதலாக அவனையே நினைந்து உள்ளத்திற்குள்ளேயே காதல் துன்பத்தால் உருகி நைந்து கொண்டிருக்கின்றேன்; இங்ஙனம் துன்புற்று வாடும் என்னை, இப்பெண் இருக்கின்றாளா இல்லையா என்று ஒப்புக்குக்கூட ஒருவார்த்தை கேட்கவில்லையே! மென்மை

யான பெண் உள்ளத்தை அழகால் மயக்கிக் கொள்ளை கொள்ளும் குறும்புச் செயல் புரிபவனும், மலையினைக் குடையாகப் பிடித்து உயிர்களைக் காத்தவனுமான கண்ணனை நேரில் நான் காண்பனேயாகில் என்ன செய்வேன் தெரியுமா? கட்டித் தழுவுதலால் பெறும் இன்பப் பயன் ஒன்றும் அறியாத என் இருமுலைகளையும் அவற்றின் வேர்க்கிழங்கோடு பிடுங்கிப் பறித்து அவனுடைய திருமார்பின் மேல் விசி எறிந்து என்னுடைய சினக் களைப்பைத் தீர்த்துக்கொள்வேன் என்கின்றாள்.

குறிப்பு:- ஆண்டாள் தம் காதல் உள்ளம், தாம் அழகான முலைகளைப் பெற்றிருந்தும் அவற்றைக் கண்ணன் கட்டித் தழுவி இன்பந் துய்க்க வில்லையே என்று ஒருபால் ஏங்குகின்றது: மற்றொருபால் அவன் வந்து கட்டித் தழுவாத மூலைகளை நாமாகவே பிடுங்கி அவன் நெஞ்சில் எறிந்து விடுவோமே என்றும் எண்ணிச் சினக்கின்றது!; பிறிதொரு பால், அன்று கொடுமழையால் துன்புற்ற உயிர்களைக் காக்க, மலையைக் குடையாகப் பிடித்துக் காத்திட்ட கருணையாளன், இன்று துணையற்ற எளிய பெண் தன்னைக் காதலித்து அக் காதலால் வாடுபவள் உயிரோடு இருக்கின்றாளா? இல்லையா? என்றுகூட எண்ணாத கொடிய நெஞ்சு படைத் தவனா யுள்ளானே! என்று அவன் குறும்பை எண்ணிக் குமைகின்றது. இவ்வாறெல்லாம் காதல் உணர்வால் அலைபாயும் காதல் உள்ளத்தை இப்பாடலிலுள்ள சொற்கள் கண்ணாடிச் சாளரங்கள் போல அமைந்து நமக்குக் காட்டும் அழகு பாராட்டத்தக்க தொன்றாகும்.

உள்ளுறையாக உயிர்கள் நெஞ்சுவக்கக் காதலித்து இறைவனோடு ஒன்றி வணங்க வேண்டும் என்ற தத்துவத்தை இப்பாடல் புகட்டக் காண்கின்றோம்.

கோவர்த்தனன் – கண்ணன் திருப் பெயர்களுள் ஒன்றாகும். தேவேந்திரன் கண்ணனுடன் மாறு கொண்டு பசுக்களையும் மற்ற உயிர்களையும் வருத்த இடிநிறைந்த விடாத மழையைப் பெய்வித்தனன்; ஆனால் கண்ணன் கோவர்த்தனம் என்னும் மலையைத் தூக்கிக் குடையாகப் பிடித்துப் பசுக்களையும் மற்ற உயிர்களையும் காத்தருளினன்; கோவர்த்தனமலையைக் குடையாகப் பிடித்துக் காத்ததால் கோவர்த்தனன் என்று கண்ணனை அழைத்தனர் என்பர். ஆண்டாள் திருப்பாவை 24 ஆம் பாடலில்

''குன்று குடையாய் எடுத்தாய்
குணம் போற்றி!'' —எனப் பாடியுள்ளமையும்

காண்க.

மேலேகண்ட பாடலில் காணும் தலைவியின் காதல் ஏக்கத்தை ஒப்பக் கற்பனை நயம் செறியும் முத்தொள்ளாயிரப் பாடல் ஒன்றைக் காண்க:-

வாரிய பெண்ணை
வருகுரும்பை வாய்த்தனபோல்
ஏரிய ஆயினும்
என்செய்யும் – கூரிய
கோட்டானைத் தென்னன்
குளிர்சாந் தணியகலங்
கோட்டுமண் கொள்ளா முலை!

—முத்தொள்ளாயிரம்.
ரெ. முத்துக்கணேசன் பதிப்பு: பா. எ: 77

# 42

## ஞானத் தமிழ்விளக்கு

அன்பே தகளியா
ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை
இடுதிரியா—நன்புருகி
ஞானச் சுடர்விளக்
கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த
நான்!

—பூதத்தாழ்வார்
இரண்டாம் திருவந்தாதி; பா: எ2182

உலகில் இருள் கவிவது இயற்கை; ஆனால் ஒளி பிறந்திட அவ்விருள் மறைவதை நாம் பார்க்கின்றோம்; அதுபோல மக்கள் அறியாமை வயப்படுதல் இயற்கை; ஆனால் சமய குரவர்கள் இறைவனைப்பற்றிய ஞான ஒளி விளக்கை ஏற்றுவார்களேயானால் அவ்வறியாமை அகன்று விடுகின்றது. அவர்கள் தந்த ஞானமானது அறிவைக் கொடுக்கின்றது; ஐம்புலன்களையும் கட்டுப்படுத்துகின்றது; அறியாமையை அகற்றுகின்றது; இறைவனைக் காட்டுகின்றது; அவனை அடைய வழியையும் வகுத்துரைக்கின்றது. ஆக மனிதன் ஞான ஒளி விளக்கால் துன்ப இருள் நீங்கி இன்ப அருளைப் பெறுகின்றான். இக்காரணம் பற்றித்தான் தமிழர்கள் தாங்கள் இறைவனைத் தொழுகின்ற காலத்து, அவ் இறைவனுக்கு முன் திருவிளக்கை ஏற்றி வைத்துப் பின் இறைவனைத் தமிழால் வழிபாடு செய்கின்றனர் போலும்! பூதத்தாழ்வாரும் திருமால் திருநாமம் பயின்றார்; அவர் திருவடியையே சிந்தித்தார்; திருமால் அருளைப் பெற்றார்; இறைவனைப் பற்றிய மெய்யுணர்வை அடைந்தார்; தான் பெற்ற இன்பத்தை உலகினர்க்குத் தர விரும்பினார்; தமிழ்மாலை பாடினார்; ஞானத் தமிழ் விளக்கை

ஏற்றி நமக்கு அளித்து நம்மை வாழ்த்திக் கூறுகின்றார் பூதத்தாழ்வார்.

என்னுள் பிறந்த பேரன்பைத் திருவிளக்குக்குரிய அகலாக அமைத்தேன்; அருள்பெற என்னுள் விளைந்த ஆர்வத்தை அவ்வகலில் நெய்யாக ஊற்றினேன்; இறையை நினைந்து உருகி இன்பமயமாகும் என் உள்ளத்தை அவ்வகல் விளக்கிற்குத் திரியாக வைத்தேன்; செவ்வை யாகத் திருமாலுக்கு நான் இறையறிவை உணர்த்தும் ஞானத் தமிழைப் பாடிச் சுடர்விடும் ஞானத் தமிழ் விளக்கை ஏற்றினேன் என்கின்றார்.

**குறிப்பு;** ஆழ்வார் இப்பாடலில் அன்பைத் திருவிளக்கின் அகலுக்கும், ஆர்வத்தை நெய்யிற்கும், இன்புருகு சிந்தையை விளக்கின் திரிக்கும், ஞானத்தை எரியும் சுடருக்கும் உவமை யாக்குகின்றார். ஞானம் என்பது, ஐம்புல உணர்வையும் தனித்தனியாக வளரவிடாது இறைவன்பால் ஒரு நிலைப்படுத்தி இறைவனை உணரும் மெய்யுணர்வாகும் என்பர் திருவள்ளுவர். இதனை, 'ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே மெய்யுணர்வு இல்லா தவர்க்கு' —(பா. எ. 354) என்ற திருக்குறளின் மூலம் நமக்குக் கூறுவர். ஈண்டு மெய்யுணர்வாகிய ஞானத்தை நம்முடைய உள்ளமானது படிப்படி யாக எங்ஙனம் அடைகின்றது? என்பதைக் கூறு கின்றார் ஆழ்வார். முதலில் நம் உள்ளமானது இறைவன்பால் அன்பைச் செலுத்துகின்றது: பின்பு அவ்வன்பு பெருகிக் காதலாக மாறுகின்றது; மாறிய காதல், அருளைப்பெறவேண்டும் என்ற ஆர்வ மிகுதியினால் முற்றிப் பத்தியாக மலர் கின்றது: முற்றிய பத்தியில் ஐம்புலன்களும் ஒன்றி ஒரு நிலைப்படுகின்றன; அறியாமை விலகுகின்றது; உள்ளம் இன்ப நிலையை அடைகின்றது; இறையை உணருகின்றது; முடிவில் இறையறிவாகிய

'மெய்யுணர்வு' என்ற ஞானம் பிறக்கின்றது; ஒளிவிடுகின்றது என்று ஞானத்தின் பிறப்பு நிலைகளை இப்பாடல் மூலம் விளக்கி உணர்த்து கின்றார் ஆழ்வார். அவர்தம் ஞானத் தமிழ் வாழ்க!

**பூதத்தாழ்வார்:—** முதலாழ்வார்கள் மூவரில் ஒருவராவர். இவர் திருக்கடல் மல்லையில் ஐப்பசி மாதத்தில் அவதரித்தவர் என்பர். துறவியாக வாழ்ந்தவர். பலதலங்கள் சுற்றியவர். திருமாலுக்கு மொழி விளக்கு ஏற்றியவர். பதின் மூன்று வைணவத் தலங்களைப் பாடியவர்.

**பூதத்தாழ்வார் தம் தமிழைப் பற்றிய பாடல்:-**

படியளந்த மாலின்
  பதமறியும் ஞானம்
பொடியாய் அருள்வழங்கும்
  பொன்னாள்—அடியளிக்கும்
வெண்பாத் தமிழில்
  விளக்கேற்றும் பூதத்தார்
பண்பாவை நாம்பகர்ந்த நாள்.

—ரெ. முத்துக்கணேசன்

**மொழிவிளக்கு ஏற்றிய முதலாழ்வார்கள்:**

பொய்கையார், பூதத்தார், பேயார் மூவரும் முதலாழ்வார்கள் எனப்படுவர்; இம் மூவரும் துறவுபூண்டு தனித்தனியே திருமாலை வழிபட்டு வந்தனர். திருக்கோவலூருக்கு ஒரு முறை மூவரும் தனித் தனியே வந்தனர். அன்று இரவு மழைபெய்தது. ஒருவீட்டின் தாழ்வாரத்தில் ஒவ்வொருவராக வந்து ஒதுங்கினர். பின் நான் காவது ஆளாக இறைவன் வந்து சேர்ந்து நெருக்க மூவரும் தனித்தனியே மொழிவிளக் கேற்றி ஞானத்தால் இறைவனை உணர்ந்தனர் எனக் கூறுவர்.

பொய்கையார் பாடல்:

வையம் தகளியா
வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன்
விளக்காக—செய்ய
சுடர்ஆழி யானடிக்கே
சூட்டினேன் சொல்மாலை
இடர்ஆழி நீங்குகவே என்று.

முதல்திருவந்தாதி பா. எ: 2082

பேயாழ்வார் பாடல்:-

திருக்கண்டேன் பொன்மேனி
கண்டேன் திகழும்
அருக்கன் அணிநிறமும்
கண்டேன்—செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன்
புரிசங்கம் கைக்கண்டேன்
என்னாழி வண்ணன்பால் இன்று.

மூன்றும் திருவந்தாதி. பா. எ: 2282

ஒப்புமை:

சொல்லும் பொருளுமே
தூத்திரியும் நெய்யுமா
நல்இடிஞ்சில் என்னுடைய
நாவாகச் —சொல்லரிய
வெண்பா விளக்கா
வியன்கயிலை மேலிருந்த
பெண்பாகர்க் கேற்றினேன்
பெற்று.

—நக்கீரர்.

தி: 11; கயிலைபாதி காளத்தி பாதிஅந்தாதி பா. எ. 1.

# 43

## ஒளி அழகர்

முடிச்சோதி யாயுனது
　　முகச்சோதி மலர்ந்ததுவோ?
அடிச்சோதி நீநின்ற
　　தாமரையாய் அலர்ந்ததுவோ?
படிச்சோதி ஆடையொடும்
　　பல்கலனாய் நின்பைம்பொன்
கடிச்சோதி கலந்ததுவோ?
　　திருமாலே கட்டுரையே!

—நம்மாழ்வார்

திருவாய்மொழி; பா. எ: 2897

அழகுணர்ச்சியானது வாழ்க்கைக்கு இன்றியமையாத ஒன்றாகும்; அஃது கொண்டாரை வாழ்விக்கும்: அவர்தம் உள்ளத்தைச் செம்மைப்படுத்தும்; தூய்மைப் படுத்தும்; ஐம்புல அறிவையும் தன்பால் ஈர்க்கும்; காலத்தாலும் பிற வற்றாலும் அழியாது மூலப்பொருளாய் நின்று தன்னுடைய ஆற்றலால் மற்றைய பொருளையும் அழகுடையது ஆக்கும். இயற்கையில் காலைக் கதிரவனின் கதிர்ஒளி அழகுடையதாக இருக்கின்றது; அவ்வொளிபட்ட பொருள்கள் மின்னலிடக் காணுகின்றோம். பொருள்கள் அழகாக இருந்தாலும் கதிர் ஒளி அப்பொருள்களின் மேல் பட்டவுடன் அப்பொருள்கள் முன்னைய அழகினைக் காட்டிலும் பன் மடங்கு அழகு பெற்றுத் திகழ்தலைக் காண்கின்றோமல்லவா? கதிரொளியில் கலந்து நிற்கும் அழகு மற்றைய பொருளோடும் கலந்து மூலப்பொருளாய் நின்று ஒளிவீசுகின்றது. அஃதேபோல் இறைஅழகுஒளிவிசக்காண்கின்றார் நம்மாழ்வார். அவர் திருமாலின் திருமுகத்தின் அழகைப்பருகினார்; அவ்வழகையே கண்டு பரவசமுற்றார்; ஆனால் திருமாலின் திருமுடி அழகு கண்களைப் பறித்தது; திருமாலின் அணிகள் கண்களைப் பறித்தன; அழகு மயக்

கத்தில் மூழ்கிறர் ஆழ்வார்; சிந்தனை தோன்றியது. திருமாலின் திருமுக அழகால் திருமுடியின் அழகு ஒளி பெற்று விளங்குகின்றதோ? இல்லை, திருமுடியின் அழகால் திருமாலின் அழகு ஒளிபெற்று விளங்குகின்றதோ? என்ற ஐயம் தோன்றிற்று; மீண்டும் அழகு மயக்கத்தில் ஆழ்ந்த ஆழ்வார் அழகே உருவான திருமாலை நோக்கிப் பாடுகின்றார்.

திருமகள் தங்கும் திருமார்பை யுடைய திருமாலே! உன் திருமுக அழகின் ஒளியானதுதிருமுடியின் அழகொளி யாக மலர்ந்திருக்கின்றதோ? உன் திருவடியின் அழகொளி யானது நீ நிற்கின்ற அழகுத் தாமரையாக மலர்ந்திருக் கின்றதோ? உன் பசிய அழகுமிக்க திருவுருவ அழகொளி யானது நீ உடுத்தி யிருக்கும் ஆடைகளோடும் அணிந் திருக்கும் பலவகைப்பட்ட அணிகலன்களோடும் சிறப்பு மிக்க ஒளியாகக் கலந்து ஒளிர்கின்றதோ? இவ்வாறு உன்பால் ஒளிரும் அழகின் தன்மையை எனக்கு எடுத்துச் சொல்வாயாக! எனகின்றார்.

குறிப்பு:- அழகு மயக்கினின்றும் தெளிவடைகின்றார் நம்மாழ்வார். இப்பாடலின் மூலம் அழகு என்ற மூலப்பொருள் ஏனைய பலபொருள்களுக்கும் ஒளியைத் தருமாப்போல், இறைவன் திருமுக அழகால் திருமுடியும், திருவடி அழகால் தாமரை யும், திருவுருவ அழகால் ஆடையும் அணிகலன் களும் அழகுபெற்று மின்னலிடுகின்றன என்று கூறுகின்றார். திருமாலின் ஒவ்வொரு அங்கத்தை யும் முடிமுதல், அடிவரை கண்ணாரக் கண்டு மகிழ்ந்த ஆழ்வார், 'அழகும் திருமால் அழகரும்' ஒன்றே என்ற தத்துவ உண்மையைப்பாடல்மூலம் காட்டும் அழகே அழகு!

இவ்வாறு பிறிதோரிடத்தில் திருவேங்கடத்துப் பெருமானைப் பாடும் பொழுது, 'தெழிகுரல் அருவித் திருவேங்கடத்து எழில்கொள் சோதி'

திருவாய்மொழி; அழிவில்காலம் பா. எ: 2919) என்று ஒளி அழகராய்க் காண்பர் ஆழ்வார்.

படி—திருவுருவம், கடிச்சோதி-சிறப்புமிக்க ஒளியாக

இப் பாடலில், ஆழ்வார் உள்ளம் திருமாலின் அழகிலே கிடந்து அனுபவித்த விதத்தைக் கீழ்க் கண்டவாறு கூறுகின்றது ஈடு:—

"கடலுக்குள் பட்டதொரு துரும்பு ஒரு திரை ஒரு திரையிலே தள்ளக்கிடந்து அலையுமாறு போன்று ஓரழகு ஓரழகிலே தள்ளக்கிடந்து அனுபவிக்கிறார் இதில்".

—ஈட்டின் தமிழாக்கம்

சென்னைப் பல்கலைக்கழகப் பதிப்பு: பக். எ: 5.

**நம்மாழ்வார்:**

இவர் பன்னிரு ஆழ்வார்களில் ஒருவராவர்; முதன்மையானவர். இவர் ஆழ்வார் திருநகரி என வழங்கும் திருக்குருகூரில் சிற்றரசர் வழிவந்த காரியாரைத் தந்தையாகப் பெற்றவர். உடைய நங்கையாரைத் தாயாகப் பெற்றவர். இளமையில் இறையருள் பெற்றவர். இவருக்குச் சடகோபர், மாறன், பராங்குசன் என்ற பெயர்கள் உண்டு. இவர்தம் நூல்கள் திருவாய்மொழி, திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி என்பன. இவரையே வழிபட்டுப் பேரருள் பெற்றவர்தான் பன்னிருவரில் ஒருவராகிய மதுரகவி ஆழ்வார். இவரை வைணவர்கள் வைணவக்குலபதி எனப் போற்றுவர்.

இவரைப்பற்றிய கம்பர் பாடல் காண்க:-

சேரா தனவுள வோ?பெருஞ்செல்
வர்க்குவே தம்செப்பும்
பேரா யிரம்திண் பெரும்புய
மாயிரம் பெய்துளவத்

தாரார் முடியா யிரங்குருகூர்ச்
சடகோ பன்சொன்ன
ஆரா அமுதக் கவியா
யிரம்அவ் அரியனுக்கே!

—கம்பர்

சடகோபரந்தாதி பா எ. 45

நம்மாழ்வார்தம் தமிழைப் பற்றி மணவாள மாமுனிகள் அருளிய பாடல்:—

உயர்வே பரன்படியை
உள்ளதெல்லாம் தான்கண்டு,
உயர்வேத நேர்கொண்
டுரைத்து—மயர்வேதும்
வாராமல் மானிடரை
வாழ்விக்கு மாறன்சொல்
வேராக வேவிளையும் வீடு.

—மணவாள மாமுனிகள்

திருவாய்மொழி நூற்றந்தாதி; பா. எ. 1.

**திருவாய்மொழி:—**

நம்மாழ்வார் அருளிய பிரபந்தம் நான்கினுள் திருவாய்மொழி நான்காவதாகும். ஆயிரம் திருப்பாசுரங்களை உடையது. தமிழ்மறை எனப் பெயர்பெறும். இதன் சொல்லையும் பொருளையும் போற்றிய மணவாள மாமுனிகள் 'திருவாய்மொழி நூற்றந்தாதி' பாடியருளியுள்ளனர். திருவாய் மொழிக்கு ஐந்து வகையான வியாக்கியான உரைகள் உண்டு. அவையாவன:—

(1) திருக்குருகைப் பிரான்பிள்ளை அருளிய "ஆறுயிரப்படி". (2) நஞ்சீயர் அருளிய "ஒன்பதினுயிரப்படி". (3) வாதிகேசரி அழகிய மணவாளச்சீயர் அருளிய "பன்னீராயிரப்படி" (4) பெரியவாச்சான்பிள்ளை அருளிய "இருபத்து நாலாயிரப்படி" (5) வடக்குத் திருவீதிப்பிள்ளை எழுதிய "முப்பத்தாறுயிரப்படி". இதனை "ஈடு" என்ற பெயரால் வழங்குவர்.

## 44

### குற்றம் என்ன செய்தேன்?

கோடாத வேதனுக்கு யான்செய்த
குற்றம்என்? குன்றெறிந்த
தாடாள னே!தென் தணிகைக்
குமரநின் தண்டையம்தாள்
சூடாத சென்னியும் நாடாத
கண்ணும் தொழாதகையும்
பாடாத நாவும் எனக்கே
தெரிந்து படைத்தனனே!

—அருணகிரிநாதர்.
கந்தர் அலங்காரம். பா. எ: 76.

மக்களில் செல்வம் படைத்தவர்களும் உண்டு; செல்வம் இல்லாதவர்களும் உண்டு; செல்வம் இல்லாதவர்களுக்குச் செல்வம் வந்தவுடன் அவர்கள் செல்வர் என்ற இறுமாப்பு அடைவதை நாம் பார்த்திருக்கிறோமல்லவா? அவர்கள் செல்வச் செருக்கில் தங்கள் வாழ்வுப்போக்கையே மாற்றிக்கொள்வர்; அடக்கத்தைக் கைவிடுவர்; தன்னிலை மறந்து அடக்கமற்றவராய் வாழ்வர். இங்ஙனம் வாழ்பவர்கள், வாழ்வில் எங்ஙனம் உயர்நிலையை அடைய முடியும்? செல்வத்தைப் பெற்றாலும் வேறு பெரும் புகழைப் பெற்றாலும் அவர்கள் அடக்கமுடையவர்களாக வாழ்வார்களேயானால் உயர்வை அடைய முடியும்; அவர்கள் அடையும் உயர்வு பெரிய மலையைக்காட்டிலும் மிக உயர்ந்ததாக இருக்கும் என்பதைத் திருவள்ளுவர்,

'நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது,' —பா. எ: 124

என்ற திருக்குறளில் கூறுகின்றார். இதன்மூலம் மனித வாழ்க்கைக்கு - மக்கள் உயர்வுக்கு-அடக்கம் மிக இன்றி

யமையாத தொன்று என்பது புலனாகின்றது. அருணகிரி நாதர் முருகன் திருவருளைப் பெற்றவர்; முருகனைப் பற்றிப் பத்திச்சுவை சொட்டப் பாடியவர்; கிடைத்தற்கரிய திருவருளை, யாராலும் பெறமுடியாத முருகன் அருட் செல்வத்தைப் பெற்றும் மிகவும் அடக்கமுடையவராகக் காட்சியளிக்கின்றார். தன்னை எளியன் என்று கூறிக் கொள்கின்றார். திருத்தணிகை மலைக்கு வந்து சேர்ந்தார். அங்கு விற்றிருக்கும் குமரப்பெருமான் திருக்கோலத்தைக் கண்டார்; கைதொழுதார்; அவர்தம் அழகுக் கோலம் அவரை ஆட்கொண்டது. அவ்வழகுக் கோலத்தை வாயாரப் பாடவேண்டும் என்ற வேட்கை அவர் உள்ளத்தே எழுந்தது. குமரப் பெருமானை நோக்கிப் பாடுகின்றார்.

'கிரவுஞ்சமலை' என்ற குன்றை வேலால் பிளந்தெறிந்து வெற்றிவாகை சூடிய மேன்மையுடையவனே! தென்னாட்டில் திருத்தணிகையிலே வாழும் குமரனே! நான் உன்னுடைய தண்டைகள் அணியப்பெற்ற அழகிய திருவடிகளைச் சூடப்பெறாத தலையை உடையவனானேன்; உன்னுடைய அழகுக் கோலத்தைக் கண்குளிரக் கண்டறியாத கண்களைப் பெற்றவனானேன்; இருகை குவித்துத் தொழாத இந்த இருகைகளையும் கொண்டவனானேன்: உன் திருப்புகழை— திருப்பெயரை நாவாரப் பாடாத நாவை அடைந்தவ னானேன்; படைப்புக் கடவுளாகிய பிரம்மன் எனக்கு என்று தெரிந்து தேர்ந்தெடுத்துப் படைத்துவிட்டனனோ? பிழையாத படைப்புத் தொழிலை நடத்துபவ ராயிற்றே பிரம்மன்! அவருக்கு நான் குற்றம் என்ன செய்தேன்? இறைவா! என்கின்றார்.

குறிப்பு: அருணகிரிநாதர் முருகப்பெருமான் அருளைப் பெற்றவர்; கிடைத்தற்கரிய அருட்செல்வத்தைப் பெற்றவர்; அருட்செல்வத்தைப் பெற்றிருந்தும் இறையருளால் இறைவனை வாயாரப் பாக்கள் பல பாடியிருந்தும் இன்னும் பாக்கள் பாடித் தொழ

வேண்டுமென்று கூறுகின்றார். இங்ஙனம் கூறுவதின் மூலம் அவரது அடக்க உணர்வும், நன்றாக இறைவனை நாடிக் கண்டு தொழுது பாடி இன்புற வேண்டுமென்ற உள்ளத்து வேட்கையும் வெளிப் படக் காண்கின்றோம். மேலும் தலை பெற்றதின் பயன் இறைவனைத் தாழ்ந்து பணிவதே என்றும், கண் பெற்றதின் பயன் திருவழகைக் கண்ணாரக் காண்பதுவே என்றும், கை பெற்றதின் பயன் இருகை குவித்துத் தொழுவதுவே, என்றும், நாவினைப் பெற்றதின் பயன் நாவார அவன் புகழ் பாடுவதே என்றும் புலன்களின் பயன்களெல்லாம் இறைவனுக்குரியவை என்பதைத் தெளிவுபடுத்து கின்றார்.

கோடாதவேதன்—பிழையாது படைக்கும் பிரமன். குன்றெறிந்த தாடாளன் — கிரவுஞ்ச மலையை வேலால் பிளந்தெறிந்து வெற்றிவாகை சூடிய குமரன். சிங்கமுகாசூரன் பட்டணத் திலிருந்த அரக்கனாகிய கிரவுஞ்சன், கிரவுஞ்சத் தீவிற்கு வந்து அங்கு மலையுருக்கொண்டு, அகத்திய முனிவர் வரும் வழியை அடைத்தனன். முனிவர்சினந்து.என்றும் நீ மலையுருவை அடைவாய் எனச் சபித்தனர். பின் குமரக் கடவுள் வேலால் சாபம் நீங்குமெனக், குமரக் கடவுள் வேலால் குன்றைப் பிளந்தெறியச் சாபம் நீங்கியதோர் கதையைக் கருதியது.

திருத்தணிகை: இத்தலம் சிறந்த முருகன் திருப்பதியாகும். முருகப்பெருமான் சூரனை வென்ற பிறகு போர் வினை தணிந்து, வள்ளி தெய்வானையுடன் விற்றிருந்த தலமாதாதலால் தணிகை என்றும், வள்ளியம்மையாரின் மேல் காதல் கொண்டு, திருவிளையாடல்கள் பல நிகழ்த்தி, வள்ளி யம்மையாரை மணந்து காதல் மோகம் தணிந்த தினால் தணிகை என்றும் பெயர் வந்ததென்பர்.

இத்தலத்தைப் பற்றிய நூல்கள்:

(1) கச்சியப்ப முனிவர் இயற்றிய தணிகைப் புராணம் (2) திருத்தணிகைப் பதிற்றுப்பத்தந்தாதி (3) திருத்தணிகை யாற்றுப் படை. (4) அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ். (5) கந்தப்ப ஐயர் இயற்றிய தணிகாசல புராணம் (6) தணிகைச் சந்நதிமுறை (7) தணிகைஉலா, (8) தணிகைக் கலம்பகம் (9) தணிகை யந்தாதி (10) தணிகைப் பிள்ளைத் தமிழ் (11) இராமலிங்க அடிகள் பாடிய அருட்பா.

**அருணகிரிநாதர்:-** இவர் தமிழ் நாட்டில் திருவண்ணுமலையில் தோன்றியவர். முருகன் அருள் கிடைத்த பெரியார். தோற்ற புலவர்தம் காதுகளை அறுக்கும் கொடுமையை மேற்கொண்ட வில்லிபுத்தூரார் என்ற புலவரை வாதில் வென்று அவரைத் திருத்தினர். சம்பந்தாண்டான் என்ற சக்தி தாசனையும் வென்றார். கருணைக்கு அருணகிரி எனப் போற்றப்படுபவர். இவர் கிளியுருவில் இறையடி சேர்ந்தார் என்று உரைப்பர்.

இவர்தம் நூல்கள்:-

1. திருப்புகழ் 2. திருவகுப்பு 3. கந்தரந்தாதி
4 கந்தரலங்காரம் 5. கந்தரனுபூதி
6. வேல்விருத்தம் 7. மயில்விருத்தம்

இவரைப்பற்றித் தாயுமானவர்:-
ஐயா அருணகிரி அப்பா உனைப்போல
மெய்யாக ஓர் சொல் விளம்பினர்யார்?
(உடல் பொய்யுறவு பா. 26)

**அருணகிரி நாதர்தம் தமிழைப் பற்றிய பாடல்:**

சந்தம் முழங்கும்;
சரவணத்தான் வேல்முழங்கும்;
கந்தன் கருணைக்
கழல்முழங்கும்; —சந்ததமும்
நாவால் அருள்முழங்கும்
நாதர் அருணகிரிப்
பாவாம் திருப்புகழின் பண்!

—ரெ. முத்துக்கணேசன்

**கந்தர் அலங்காரம்:-** கந்தப்பெருமானது அன்பு-அருள் புகழ் - விரம் முதலிய பண்புகளைச் சிறப்பித்துக் கூறும் நூல். கட்டளைக் கலித்துறை என்னும் யாப்பில் அமைந்துள்ளது. மொத்தம், காப்புச் செய்யுள் சேர்த்து 101 பாடல்களை உடையது.

# 45

## ஏது செய்வேன்?

கல்லால் எறிந்தும்கை வில்லால்
அடித்தும் கனிமதுரச்
சொல்லால் துதித்தும்நற் பச்சிலை
தூவியும் தொண்டரினம்
எல்லாம் பிழைத்தனர் அன்பற்ற
நான்இனி ஏதுசெய்வேன்!
கொல்லா விரதியர் நேர்நின்ற
முக்கட் குருமணியே!

—தாயுமானவர்
திருப்பாடல்கள்; பாயப்புலி; பா. எ: 22.

இவ்வுலகத்தே அன்பு வடிவமாக வாழ்பவரும் உண்டு; அன்பின்றி வாழ்பவரும் உண்டு; அன்பின்றி வாழ்பவர்கள் பொருளையும், செல்வத்தையும் தமக்கே உரிமையாக்கிக் கொள்வர்; பிறர்க்கு ஈயார்; பிறர் துன்பம் கண்டும் காணாது போலிருப்பார்; தன்னல மிக்கவராக வாழ்வர். ஆனால் அன்பு வடிவமானவர் பிறர் துயர் கண்டு வருந்துவர்; பொருளையும் செல்வத்தையும் வாரி வழங்குவர்; தம்முடைய உடலைக்கூடப் பிறர்க்கு உரிமையாக்குவர்; பிறர்க்கென வாழ்வர்; அனைத்து உயிரையும் ஒன்றாகவே காண்பர். இவ்வாறு அன்புடையாரைப் பற்றித் திருக்குறளில்,

'அன்பிலார் எல்லாந் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு.' (பா. எ: 72.)

என்று திருவள்ளுவர் கூறுகின்றார். இத்தகைய அன்புடையவர்களை, இறைவன்பால் பேரன்பு உடையவர்களை, நாம் தொண்டர்கள் என்றுதானே அழைக்கின்றோம். தொண்டர்கள் தங்கள் செல்வத்தைத் தங்களுடையதாக

எண்ணுவதில்லை, இறைவன் தந்தவை என்று எண்ணுவர்; இறைவனால் படைக்கப்பட்ட உயிர்களுக்கே, அவர்கள் நலத்திற்கே அச்செல்வத்தைப் பயன்படுத்துவர்; உயிர்களிடத்து அன்பினைச் சொரிவர்; தாங்கள் படுகின்ற இன்பத்தையும் துன்பத்தையும் இறைவனுக்கே விடுத்து இறைவழிபாடு செய்வர்; இத்தகைய தொண்டர்களில் ஒருவனாக, அல்லும் பகலும் இறைவனிடத்தே அன்பு பூண்டு வாழும் தொண்டர்களில் ஒருவனாக, நான் வாழ்ந்து உய்யவில்லையே என்று இறைவனை நோக்கி வருந்திப் பாடுகின்றார் தாயுமானவர்.

உயிர்கள்பால் அன்பு பூண்டு கொல்லாமை என்னும் அற நோன்புடைய தொண்டர்தம் நேர்மையைப் பாராட்டி நிற்கும் முக்கண்களை யுடைய பெருமானே! கல்லாலின் கீழிருந்து அறமுரைத்த குருமணியாகிய சிவபெருமானே! தொண்டர்கள் உம்பால் அன்புடையராய் உம்மைக் கல்லால் அடித்து வழிபட்டனர்; கை நிறைந்த வில்லால் அடித்தும் வழிபட்டனர்; பத்திச்சுவை ததும்பும் மதுரச் சொற்களால் போற்றியும் வழிபட்டனர்; உயர்ந்த மலர் களோடுகூடிய பச்சிலைகளை உம்மீது தூவியும் வழிபட்டனர்; இவ்வாறு பல்வேறு வகைகளில் அன்போடு தொண்டரினம் உம்மை நாளும் வழிபட்டு இவ்வுலக வாழ்வினின்றும் விடுபட்டுப் பிழைத்து இறையுலக வாழ்வாகிய உம்மை அடைந்து விட்டனர். ஆனால் நானோ அன்பற்றவன்; அன்பின்றி வாழும் நான் இனி ஏது செய்வேன்? எவ்வாறு வழிபடுவேன்? உன்னை வந்து எங்ஙனம் அடைவேன்? வழியறியேன் என்கின்றார்.

குறிப்பு:- பொதுவாகத் தொண்டர்கள் இன்பத்தையும் துன்பத்தையும் இறைவனுக்கே விடுத்து வாழ்பவர்கள்; மண் ஓட்டையும் செம்பொன்னையும் ஒன்றாகவே மதித்து வாழ்பவர்கள்; உயிர்களிடத்து நிறைந்த அன்புடையவர்கள்; இறைவனை அன்புமயமாகக் கண்டு பேரன்போடு

வழிபடுபவர்கள். இறைவழிபாட்டைத் தவிர 'வீடு' என்று சொல்லக் கூடிய பேரின்பத்தைக் கூட விரும்பாதவர்கள்; இறைபணியே திருப்பணியாகக் கொள்பவர்கள். — இதனை,

'கேடும் ஆக்கமும் கெட்ட திருவினர்
ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்
கூடும் அன்பினில் கும்பிட லேஅன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினர்'

—பெரியபுராணம்; திருக்கூட்டச்சிறப்பு. பா. எ. 8.

என்று தொண்டர்தம் பெருமையைக் கூறுவர் சேக்கிழார் பெருமான். இவ்வகையில் அன்போடு வழிபடும் தொண்டர்கள் இறைவனைக் கல்லால் எறிந்தும் கை வில்லால் அடித்தும் வழிபடுவார் களா என்ற ஐயம் நம் உள்ளத்தே எழுதல் இயல்பல்லவா? பொதுவாக இறைவனுக்குப் பொருள் பல படைத்து மலர்தூவி வழிபடும் வெளிச்சடங்கு வெற்றுச் சடங்கே தவிர, உண்மை வழிபாடு ஆகாது; அச் சடங்கினைக் காட்டிலும் இறைவனிடத்து அன்புமயமாகி உள் நினைந்து வழிபாடு செய்தலே உண்மை வழிபாடாகும் எனக் கொண்டனர் தமிழர்கள். இறைவனை அன்பு வடிவமாகக் கண்டனர்; அன்பே சிவம் எனவும் மொழிந்தனர். சாக்கிய நாயனர் இறைவனைக் கல்லால் அடித்திருக்கலாம்; ஏதோ ஒரு சில சூழ்நிலை கருதி அவர் அவ்வாறு செய்திருக்கலாம்; இருந்தாலும் கல்லால் அடித்தது வெளிச்சடங்கே எனவும் அவர் உள்ளம் அன்புமயமாகி அன்பு வடிவமான இறைவனையே உள் நினைந்து வழிபட்டது எனவும் அவ்வக வழிபாட்டைப் போற்றி இறைவன் அவரை ஆட்கொண்டார் எனவும் இப் பாடலில் தாயுமானவர் கூறுகின்ருர். தொண்டர்களில் சிலர் சடங்கினை ஒதுக்கி அறிவினை ஒருமுகப்படுத்தி அன்புள்ளத்தோடு

இறைவனை வழிபட்டு இறைநிலையையடைய, அன்பின்றி வாழும் நான் எங்ஙனம் இறைவனை அடைவேன் என்று வருந்துகின்றார். இங்ஙனம் வருந்துவதின்மூலம் இறைவனால் படைக்கப்பட்டு உயிர்களிடத்து அன்பு பூண்டு பணியாற்ற வேண்டுமென்றும், உண்மை அன்போடு இறைவனை இடையறாது உள்நினைந்து வழிபட வேண்டுமென்றும், தமிழர்க்குரிய வழிபாட்டு முறைப்படித் திருமுறைகளையும், ஞானப் பாடல் களையும் நா மணக்க ஓதி வழிபடவேண்டு மென்றும் வலியுறுத்திக்கூறுகின்றார் தாயுமானவர்.

**கல்லால் எறிந்தும்:**- கல்லைச் சிவன்மேல் எறிந்துவழிபட்டும். இது சாக்கிய நாயனார் வரலாறு. சாக்கிய நாயனார் அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவராவர். காஞ்சிபுரத்தை அடுத்த திருச்சாத்தமங்கை என்னும் ஊரில் வேளாளர் குலத்திற் பிறந்தவர். சமய ஆராய்ச்சி செய்தவர். முதலில் சாக்கிய மதத்தைத் தழுவிப் பின் சைவ சமயத்தை மேற் கொண்டவர். சிவன்பால் காதல் கொண்டவர். சாக்கிய மதத்தினர் மகிழப் புறத்தே சிவன்மேல் கல்லெறிந்து அகத்தே ஆராக் காதலுடன் அன்பால் சிவனை வழிபட்டு இறையடி சேர்ந்தவர். இவரைச் சுந்தரர்,

'வார்கொண்ட வனமுலையாள் உமைபாகன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியற்கும் அடியேன்'

(பா. எ. 6) என்று தாம் பாடிய திருத்தொண்டத் தொகையில் போற்றுவர்.

**கைவில்லால் அடித்தும்—** கையகத்தேயுள்ள காண்டீப மென்னும் வில்லால் சிவபெருமானை அடித்தும். வில்லால் அடித்தது அருச்சுனன்'

காமிய வனத்தில் அருச்சுனன் சிவபெருமானை நோக்கிப் பாசுபதம் பெறத் தவ மிருந்தனன். அருச்சுனனைக் கொல்ல மூகாசுரன் என்ற அரக்கன் பன்றியுருக் கொண்டு வந்தான், அப் பன்றியை எதிர்த்து அருச்சுனன் அம்பு எய்த, அதே நேரத்தில் சிவபெருமான் வேடன் உருத் தாங்கி வந்து தானும் அம்பு எய்யப் பன்றி விழ்ந் திறந்தது. யார் கொன்ருர் என்பதின் காரணமாக, சிவவேடருக்கும் அருச்சுனனுக்கும் போர் தொடங் கிற்று. போரில் தளர்ந்தனன் அருச்சுனன். பின் அருச்சுனன் தனது காண்டீபமென்னும் வில்லின் து தண்டத்தால் சிவ வேடனது தலையில் மோதினன். பின் இறைவன் அருச்சுனன் அன் பைப் பாராட்டிக் காட்சி நல்கிப் பாசுபதத்தைத் தந்தருளினன் என்பர். இறைவன் என்று அறிந்ததும் அருச்சுனன் பலவாறு தன்னை மன்னிக்குமாறு வேண்ட, அதற்கு இறைவன் அவனைத் தேற்றி யாது வேண்டும் என்று கூறும் இடத்தில் வில்லிபுத்தூரார்,

'நின்னுடன் அமர்செய்து நின்வில் நாணறுத்து
அந்நெடு,வில்லினல் அடியு முண்டனன்
உன்னரு மல்லினல் உதையு முண்டனன்
என்னினி யுன்கருத் தென்று கூறினன்'

(வில்லிபாரதம்; அருச்சுனன் தவநிலைச் சருக்கம்;
பா. எ. 127)

என்று வில்லினல் அடியுண்டதை இறைவன் வாயிலாகவே கூறுகின்றமை அறிக. மேலும் அருச் சுனனுக்குச் சிவபெருமான் பாசுபதம் அருளியதை

'வெங்கடுங் கானத்தேழை
தன்றெடும் வேடனய்ச்சென்
றங்கமர் மலைந்து பார்த்தற்கு
அடுசரம் அருளினனை'

—திருநாவுக்கரசர்: தி: 4; பதிகம்; 71 பா. எ: 7

என்று அப்பர் பெருமான் பாடுவர்.

**தாயுமானவர்:-** தமிழ் நாட்டில் வேதாரணியம் என்று வழங்கும் திருமறைக்காட்டில் வேளாளர் குலத்தில் பிறந்தவர். தகப்பனர் பெயர் கேடிலியப்ப பிள்ளை. தாயார்பெயர் கயவல்லி அம்மை. திருச்சியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்த விசயரங்க சொக்கநாதரிடம் இவர் தந்தையார் அமைச்சராக இருந்தவர். அவர் காலத்திற்குப் பின் தாயுமானவர் அமைச்சராய்ப் பணியாற்றினர்; ஆறல் மனம் சிவபெருமானை நாட ஞானிபோல் வாழ்ந்தார். மட்டுவார் குழலி என்ற அம்மையாரை மணந்து கனகசபாபதி என்னும் மகனைப் பெற்ருர். பின் மனைவி இறந்திட அமைச்சர் பதவியைத் துறந்து துறவறம் ஏற்று ஊர்பல சுற்றிச் சிவ வழிபாடு செய்தார்; திருச்சி மௌன குரு மடத்துத் தலைவரா யிருந்து: சிவப்பணி புரிந்தார்; இறுதியில் இராமநாதபுரம் சென்று இறைவன் திருத்தாளடைந்தார் என்பர். இவர் தம் பாடல்கள்' 'தாயுமான அடிகள் திருப் பாடல்கள்' என்ற பெயரில் வெளியாகியுள்ளன.

தாயுமானவர் தம் தமிழைப்பற்றிய பாடல்:—

மன்ருடும் பாதம்
மருவுதலே செல்வமென
நன்ருய் அறங்கூறும்
நற்ருய்காண்—பொன்ருத்
தமிழ்க்"கண்ணி"ப் பாவழங்கும்
தாயுமான வர்தம்
அமிழ்தத் தமிழாம் அருள்.

—ரெ. முத்துக்கணேசன்.

**ஒப்புமை: —**

கரும்பு பிடித்தவர் காயப்பட்
டாரங்கொர் கோடலியால்
இரும்பு பிடித்தவ ரின்புறப்
பட்டா ரிவர்கள் நிற்க
அரும்பவிழ் தண்பொழில் சூழ்அணி
ஆரூர் அமர்ந்தபெம்மான்
விரும்பு மனத்தினை யாதென்று
நானுன்னை வேண்டுவனே!

—திருநாவுக்கரசர்
திருமுறை: 4. பதிகம் 103; பா. எ: 5.

வாளால் மகவரிந்து ஊட்டவல்லேன்
அல்லன்; மாதுசொன்ன
சூளால் இளமை துறக்கவல்லேன்
அல்லன்; தொண்டுசெய்து
நாளாறில் கண்ணிடந்து அப்பவல்லேன்
அல்லன்; நானினிச்சென்று
ஆளாவது எப்படி யோதிருக்
காளத்தி அப்பனுக்கே.

—பட்டினத்தார்
திருப்பாடல் திரட்டு; திருக்காளத்தி; பா. எ: 3.

## 46

## இருந்தாடும் அழகர்

கண்ணனூர் பொய்ச்சூள்
கடைப்பிடித்தோ? தென்புலத்தார்
அண்ணலார் அஞ்சுவரென்
றஞ்சியோ? —விண்ணோர்
விருந்தாடும் ஆரூரா!
மென்மலர்த்தாள் தூக்கா
திருந்தாடு கின்றவா
வென்?

—குமரகுருபரர்
திருவாரூர் நான்மணிமாலை பா. எ: 18

ஒரு மனிதன் சிறந்த தவமுடையவனாக இருக்கலாம்; கல்வியில் வல்லவனாக இருக்கலாம், மக்களால் பெரிதும் பாராட்டக் கூடியவனாக இருக்கலாம்; ஆனால் இத்துணைச் சிறப்புக்களை யெல்லாம் பெற்றிருந்தாலும் வாழ்வில் அடங்கம் உடையவனாக வாழவேண்டும்; அப்பொழுதுதான் அவ்வடக்கம் அவனது உயிருக்கு ஆக்கமாகவும் பாதுகாவலாகவும் அமையும் என்று கூறுகின்றார் திருவள்ளுவர், 'காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம் அதனினூஉங் கில்லை உயிர்க்கு' (பா. எ. 122) இத்திருக்குறளின் மூலம் அடக்கத்தைக் காக்க வேண்டு மென்கின்றார்; ஆனால் அடக்கத்தைக் காக்காது விட்டால் 'தான்' என்ற உணர்வாகிய அகந்தை பிறக்கும். அகந்தையால் கல்வியும் தவமும் அகற்றப்படும். இறுதியில் உயிருக்கே அகந்தை அழிவை ஏற்படுத்திவிடும் என்ற கருத்தையும் வலியுறுத்தி உணர வைக்கின்றார். உண்மையில் அகந்தை வாழ்வையே பாழாக்கும்; அறிவை மயக்கும்; அன்பை இகழும்; அருளை அழிக்கும்; அகந்தை வயப்பட்டாரை ஆன்றோர் விரும்பார், ஆன்றோர் மட்டுமென்ன? போற்றுதற்குரிய தெய்வமும் வெறுக்குமல்லவா? இக் கருத்தை மிக அருமையாக நம்

உள்ளத்தில் பதிய வைக்கின்ருர் குமரகுருபரர். அவர் பல தலங்களைச் சுற்றிக்கொண்டு திருவாரூருக்கு வந்து சேர்ந் தார். அங்குப் பூங்கோயிலில் விற்றிருக்கும் தியாகராசப் பெருமானைக் கண்ணுரக் கண்டார்; இருந்தாடும் அழக ராகிய அவர் திருவுருவம் இவரைப் பெரிதும் ஆட்கொண் கொண்டது; அவர்தம் திருப்பாதங்கள் மறைக்கப்பட் டிருந்தன. ஏன் இவர் கால் தூக்கி நின்று ஆடவில்லை; இருந்தாடுகின்ருர்? என்றெல்லாம் கேள்விகள் அவர் உள்ளத்தே எழுந்தன. சிந்தித்தார். கற்பனை தோய்ந்த பாடல் ஒன்று அவர் உள்ளத்தே எழுந்தது. இறைவனை நோக்கிப் பேசுகின்ருர்.

விண்ணுலகத்துத் தேவர்கள்தம் அன்பாகிய விருந்தைப் பெற்றுத் திளைத்து ஆடுகின்ற திருவாரூரில் விற்றிருந்தருளும் பெருமானே! உம்முடைய மென்மையான மலர் போன்ற திருவடியைத் தூக்கிநின்று ஆடாது, இருந்துகொண்டே ஆடுகின்றீரே; ஏன்? ஒருவேளை முன்னர் திருமால் உமது திருவடியைக் காணுது வருந்திஞர்; இப்பொழுது கால்தூக்கி ஆட அவர் கண்டேன் என்று கூறிவிடுவாரோ என்று உறுதியாக எண்ணியதனுல் கால் தூக்கி ஆடாத நிலையைக் கடைப் பிடித்தீரோ? இல்லை, தென்புலத்தார்களுக்குத் தலைவனுன எமன் முன்பு அகந்தை வயப்பட உமது திருவடியால் உதையுண்டானல்லவா? இப்பொழுது கால்தூக்க அதனைக் கண்டு அவன் அஞ்சுவானென்று எண்ணியதனுல் கால் தூக்கி ஆடாத நிலையைக் கடைப்பிடித்தீரோ? யாது காரணம் நீர் இருந்து ஆடுவதற்கு? கூறுவீராக! என்கின்ருர்.

குறிப்பு:- திருவாரூரில் கோயில் கொண்டுள்ள தியாகராசப் பெருமான் ஆடும் நடனத்திற்கு அசபா நடனம் என்று பெயர். இந்த நடனத்தை இருந்து ஆடுதலால் இறைவன் 'இருந்தாடும் அழகர்' எனப் பெயர் பெற்ருர் என்பர். இவர்தம் திருப்

பாதங்களில் மார்கழித் திருவாதிரையில் இடத் திருப்பாதத்தையும், பங்குனி உத்திரத்தில் வலத் திருப்பாதத்தையும் சிறப்பாகக் கண்டு வணங்க இயலும் என்பர்.

இருந்தாடும்அழகரை இவர்ஏன்இருந்துகொண்டு ஆடுகின்ருர் என்பதற்குச் சில காரணங்களைக் கற்பனை செய்கின்ருர் குமரகுருபரர்.

முன்பு காணுத திருமால் இப்பொழுது திருவடியைக் கண்டேன் என்று கூறிவிடுவாரோ என்று எண்ணியோ, எமன் அஞ்சுவான் என்று எண்ணியோ, கால்தூக்கி நின்று ஆடாது இருந் தாடுகின்ருர் என்று குமரகுருபரர் கூறும் கற்பனை இன்பம் கவிதையில் களிநடம்புரியக் காண்கின்ரேம். உண்மையிலேயே அறிவுக்கு விருந்தாம் இக் கற்பனையில் தேவராயினும் மனிதராயினும் அகந்தை உடையாருக்கு அரன் திருவருள் அனுவளவும் கிட்டாது என்ற பேருண்மைக் குறிப்பினையும் பெறவைக்கின்ருர் குமரகுருபரர். மேலும், மலரானது மணத்தை அள்ளி வழங்குவதுபோன்று இறைவன் திருத்தாள் அருளை அள்ளிவழங்குகின்றது என்ற கருத்தில் மலரை உவமிக்கும் அழகு பாராட்டத் தக்கதொன்ருகும்.

இப்பாடல் தற்குறிப்பேற்ற அணி அமையப் பாடப்பெற்றுள்ளது.

ஆடுகின்றவா — ஆடுகின்றவாறு என்க; ஈண்டு ஈறு குறைந்தது.

**கண்ணனர் பொய்ச்சூள்:—** திருமாலும் அயனும் தமக்குள் சூளுரைத்துக்கொண்டு சிவபெருமானின் அடியைத் திருமாலும் முடியை அயனும் காணப் புறப்பட்டனர். முடியைக் கண்டதாகப் பொய் யுரைத்தார் அயன்; ஆனுல் திருவடியைக் காணுது

வருந்தினர் திருமால்; ஆக இருவரும் சிவபெருமான் முடியையும் அடியையும் காணுமல் திகைத்திருந்தபொழுது இலிங்கத்தே தோன்றி காட்சியருளினுர் சிவபெருமான். இதனை அப்பர் பெருமான்,

செங்க ணானும் பிரமனும் தம்முளே
எங்குந் தேடித் திரிந்தவர் காண்கிலார்
இங்குற் றேனென் றிலிங்கத்தே தோன்றினுன்
பொங்கு செஞ்சடைப் புண்ணிய மூர்த்தியே!

—திருநாவுக்கரசர்.
தி: 5. ப. 209: பா. எ: 11.

என்று கூறுவர்.

**தென்புலத்தார் அண்ணலார் அஞ்சுவர்:-** தென்புலத்தார் அண்ணல் எமன் ஆவார். மிருகண்டு முனிவரின் புதல்வராகிய மார்க்கண்டேயர் பதினுறு ஆண்டுகள் வாழ்ந்தார்; இறுதியில் அவரது உயிரைக் கவர எமன் வந்தார்; இதனை முன் கூட்டியே உணர்ந்த மார்க்கண்டேயர் நாள் தவருமல் சிவனை நினைந்து சிவபூசை செய்தனர். எமன் வந்த காலை சிவலிங்கத்தைக் கட்டிக் கொண்டனர். எமன் அகந்தை மேலிடத் தன் பாசக் கயிற்ருல் சிவனையும் சேர்த்திழுக்க இறைவன் இலிங்கத்தே தோன்றி எமனைத் தன் திருவடியால் உதைத்தனர், அகந்தை அழிந்து ஞான முற்ருர் எமன் என்பர்; இதனை அப்பர் பெருமான்,

சேலினே ரனையகண்ணுர்
திறம்விட்டுச் சிவனுக்கன்பாய்
பாலுநற் றயிர்நெய்யோடு
பலபல வாட்டியென்றும்

மாலினைத் தவிர நின்ற
மார்க்கண்டற் காகவன்று
காலனை உதைப்பர்போலும்
கடவூர் விரட்டனாரே!

என்றுபாடுவர். — திருநாவுக்கரசர்
தி: 4. ப: 31: பா. எ. 9.

**இருந்தாடும் அழகர்:** அழகரைப்பற்றி அப்பர்பெருமான் திருவாரூர்த் திருத்தாண்டகத்தில்—

'அழகனை ஆரூரில் அம்மான் தன்னை' — என்றும்
தி. 6. ப. 243. பா. எ. 5

'அணி ஆரூர் இடங்கொண்ட அழகர்' என்றும்
தி. 6. ப. 245. பா. எ. 5

கூறுவர், பூந்துருத்தி காடகநம்பி அவர்கள் திருவிசைப்பாவில், 'சீராரூர் ஆதியாய் வீதி விடங்கராய் நடம் குலாவினரே' (பா. எ: 1)என்பர்

**குமாருருபரர்:-** தாமிரபருணி ஆற்றின் வடகரையிலிருக்கும் கைலாசம் என்ற ஊரில் பிறந்தவர். சைவ வேளாளர். தந்தையார்பெயர் சண்முகசிகாமணிக் கவிராயர். தாயார் பெயர் சிவகாமசுந்தரி. குமரகுருபரர் ஊமையாய் ஐந்தாண்டுகள் வளர்ந்து, திருச்செந்தூர் முருகன் அருளால் பேசும் ஆற்றல் பெற்றவர். துறவு பூண்டு முனிவர் ஆனவர். வடநாட்டில் காசியில் குமாரசாமி மடம் ஒன்றை நிறுவி வளர்த்தவர். இவர் தம் நூல்கள்:-

(1) கந்தர் கலிவெண்பா, (2) மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், (3) மீனாட்சியம்மை குறம், (4) மீனாட்சி இரட்டைமணிமாலை, (5) தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை, (6) திருவாரூர் நான்மணிமாலை, (7) முத்துக் குமாரசாமி பிள்ளைத்தமிழ், (8) சகலகலாவல்லி மாலை, (9) சிதம்பரம் மும்மணிக்கோவை,

(10) சிதம்பரச் செய்யுட்கோவை, (11) பண்டார மும்மணிக் கோவை, (12) மதுரைக் கலம்பகம், (13) காசிக் கலம்பகம், (14) நீதிநெறி விளக்கம்.

குமரகுருபரர்தம் தமிழைப்பற்றிய பாடல்:-

குமரகுருபரர் தமிழுக்கும் வெற்புக்கும் சிலேடை.

மாலை மணிதோற்றும்;
      மாபத்தி நீர்பொழியும்;
வேலின் புகழை
      விழையுமே! – கோலக்
குமர குருபரர்
      கோத்தமிழும் வெற்பும்
சமமெனப் பாவாய்நீ சாற்று.

—ரெ. முத்துக்கணேசன்

உரை:—

குமாகுருபரர் தமிழ்:—

இயல்பான அருள் ஒளியைத் தோற்றுவிக்கும்; நான்மணிமாலை, மும்மணிக் கோவை, இரட்டை மணிமாலை போன்ற தமிழ் நூல்களைத் தோற்றுவிக்கும்; பெருமைமிக்க பத்தியாம் நீரைப்பொழியும்; கந்தப்பெருமானது திருவேலின் புகழ் பாட விரும்பும். கந்தர் கலிவெண்பா பாடும்.

வெற்பு: பூமாலைக்குரிய மலர்களையும் இரத்தினக் கற்களையும் தோற்றுவிக்கும்: பெரிய ஒழுங்காக வற்றாத அருவி நீரைப் பொழியும்; குன்றில் அமரும் முருகன் புகழைப் பத்தர்கள் பாட அதனை விரும்பும். வேடர்கள் வெளிப்படுத்தும் வேலின் ஆற்றல்மிகு புகழை விரும்பும்.

திருவாரூர் நான்மணிமாலை:- திருவாரூரில் பாடப்பெற்றது. நான்கு மணிகளைத் தொடுத்த மாலைபோல, வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம், ஆசிரியப்பா என்னும் பாவகையால் ஆனது. அந்தாதி அமையப் பாடப்பெற்றது. மொத்தம் நாற்பத்தொரு பாடல்களைக்கொண்டது

## 47

### சிற்றம்பலம் பற்றுமோ!

வேதண்ட மேபுயங்கள்
விண்ணே திருமேனி
மூதண்ட கூடமே
மோலியாம்—கோதண்டம்
ஒற்றைமா மேரு
உமாபதியார் நின்றாடப்
பற்றுமோ சிற்றம் பலம்!

—குமரகுருபரர்
சிதம்பர மும்மணிக் கோவை. பா. எ. 9.

உடல் பருத்தவர்களைப் பார்த்து விளையாட்டாக உட்கார இடம் போதுமா என்று கேட்பது இயற்கை. குமர குருபரர் சிதம்பரம் வந்து சேர்ந்தார். அங்கு அல்லும் பகலும் நின்றாடும் கூத்தப் பிரானைத் தொழுதார். அவன் திருவுருவ அழகில் பெரிதும் ஈடுபட்டார். அவ்வுருவை ஆழ்ந்து நோக்கினர். நோக்க நோக்க அவ்வுருவத்தின் உயர்வு புலனாயிற்று; புகழின் ஆழஅகலம் விளங்கிற்று; சிந்தனைபெருகிற்று, கற்பனைவிரிந்தது, வியப்பு மேலிட்டது. இறைவன் பெருமையை அவர் கூறுகின்றார்.

உமையின் பதியாவார் சிவபெருமான். இவர், இவ்வுலகத்துப் பெரிய மலைகளையே தோள்களாக உடையவர். நம் தலைக்கு மேலேயுள்ள பரந்த வானகத்தைத் திருமேனியாகப் பெற்றவர். இவ்வுலக அண்டத்தின் முகட்டைப் பெரிய திருமுடியாக அணிந்தவர். பொன்மயமான மேருமலையையே வில்லாகக் கொண்டவர். இவ்வாறு பெருமையும் —உயர்வும் கொண்ட மிகப் பெரிய திருவுருவைப் பெற்றவர் சிவபெருமான். இவர் கால்தூக்கி நின்று ஆடுவதற்கு இந்த மிகச் சிறிய சபையாகிய சிற்றம்பலம் போதுமா? என்று கேட்கின்றார்.

**குறிப்பு:-** 'அவன் அன்றி ஓரணுவும் அசையாது' என்பர் ஆன்றோர். வானகமும், மாமேரு மலைகளும் இறைவன் திரு அங்கங்களானால், அவன் திருவுருவை என்னவென்று சொல்லுவது? அவ்வுருவம் சொல்லுக்குஅடங்காத ஒன்றல்லவா? காணுகின்ற பொருளில் எல்லாம் சிவன் வடிவத்தைக் காணுகின்றார் குமரகுருபரர். இவ்வுலகம் குமரகுருபரருக்குச் சிவமயமாகத் தோன்றுகின்றது. மேலும் இறைவன் அணுவாகவும் அடங்குவான்; அண்டமாகவும் விரிவான்; அண்டமாய் அணுவிலும், அணுவாய் அண்டத்திலும் மாறுவான்; பெரிய திருவுருவைப் படைத்தோன் சிறிய உருவிலும் சிறந்தோங்குவான் என்றெல்லாம் இறைவன் உயர்வை இப்பாடலில் உணர்த்துகின்றார் குமரகுருபரர்.

**சிற்றம்பலம்:-** இது சிதம்பரம் கோயிலிலுள்ள அரங்காகும். சிறியசபை என்று பெயர் பெறும். தஞ்சைச் சோழர்கள் இச்சபைக்குப் பொன் வேய்ந்தனர். இதனால் இச்சபை கனகசபை எனப் பெயரினைப் பெற்றது. நடராசர் இச்சபையில் ஆடிய நடனம் நாதாந்த நடனமாகும்.

இச்சிற்றம்பலத்தைப் பல இடங்களில், அம்பலம், கடவுள்மன்று, சிற்சபை, பொன்மன்றம், மணிமன்று, மன்று என்றெல்லாம் இந் நூலாசிரியர் உரைப்பர்.

**சிதம்பர மும்மணிக்கோவை:—** சிதம்பரத்தின்கண் பாடப்பெற்றது. மூன்று வேறு மணிகளால் ஆன மாலையைப் போல நேரிசையாசிரியப்பா, நேரிசை வெண்பா, கட்டளைக் கலித்துறை என்னும் பாவகைகளால் ஆனது இந்நூல். அந்தாதி அமையப் பாடப்பெற்றது. மொத்தம் பாக்கள் முப்பத்தொன்றாகும்.

ஒப்புமை:-

அடிபேரிற் பாதாளம்
பேரும்; அடிகள்
முடிபேரின் மாமுகடு
பேரும்; —கடகம்
மறிந்தாடும் கைபேரில்
வான்திசைகள் பேரும்;
அறிந்தாடும் ஆற்ரு தரங்கு.

—காரைக்காலம்மையார்;
தி; 11; அற்புதத் திருவந்தாதி பா. எண்: 77

பாதம் புவனி சுடர் நய னம்பவனம் உயிர்ப்பு ஓங்கு
ஓதம் உடுக்கை உயர்வான் முடிவிசும் பேஉடம்பு
வேதம் முகந்திசை தோள்மிகு பன்மொழி கீதமென்ன
போத மிவற்கோர் பனிநிறந் தோற்பது பூங்கொடியே.

—சேரமான் பெருமாள் நாயனர்;
தி: 11; பொன்வண்ணத்தந்தாதி; பா, எ. 19

பவ்வநீர் உடைஆடை யாகச் சுற்றிப்
பாரஅகலம் திருவடியா பவனம் மெய்யா
செவ்விமா திரம்எட்டும் தோளா அண்டம்
திருமுடியா நின்ருன்பால் செல்ல கிற்பீர்!

—திருமங்கையாழ்வார்.
பெரியதிருமொழி: 6; பா. எ. 1500

## 48

## செவியும் கதவும்

விட்டார் இறைநீ
விடைமேல் வரும்பவனி
காட்டா தடைத்த
கதவன்றோ? —நாட்டாதி
நல்ல துளையா
நதிச்சடையா யென்னுஞ்சீர்ச்
செல்லத் துளையாச்
செவி.

—இராமலிங்கஅடிகள்

திருமுறை: 1: திருவருட்பா; சிவநேசவெண்பா; பா. எ: 25

மனிதனுக்கு அறிவு வளர்ச்சி இன்றியமையாததாகும். அறிவு வளர்ச்சிக்கு வேண்டிய எத்துணையோ நூல்களை அறிஞர்கள் ஆக்கித் தந்திருக்கின்றனர்; ஆனால் அத்துணை நூல்களையும் நம்மால் படிக்க முடியுமா என்றால் முடியாது; படித்தவற்றோடு பயின்றவர் கூறுவனவற்றையும் கேட்டு, அக்கேள்வி அறிவையும் பெற்று வளர்ச்சிபெற வேண்டும். கேள்வி அறிவுக்கு இன்றியமையாத உறுப்பு செவியாகும். ஒரு மனிதன் செவியைப் பெற்றிருக்கலாம்; செவியில் துளையைப் பெற்றிருக்கலாம்; அத்துளையின் உதவியால் ஓசை முதலியவற்றையும் கேட்கலாம்; இவ்வளவும் பெற்றிருந்தாலும் அறிஞர்கள் கூறும் அறிவுரைகளால் துளைக்கப்படாத செவிகளைப் பெறுவிடின் பயனில்லை; அவை செவிகள் அல்ல; செவிட்டுச் செவிகளாகும் என்று கூறுகின்றார் திருவள்ளுவர்.

'கேட்பினும் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி' (பா. எ: 418)

என்ற திருக்குறளின் வாயிலாகக் கேள்வி அறிவால் துளைக்கப்பட்ட செவியே செவியாகும் என்பதனை

வலியுறுத்துகின்றார். இக்கருத்தை மேலும் அழகாக வலியுறுத்துகின்றார் இராமலிங்க அடிகள். அறிவு வடிவின னாகிய சிவபெருமான் திருப்புகழின் ஒலிகளால் நம் செவிகள் துளைக்கப்படவேண்டும்; அவன் திருப்பெயர் களைக் கேட்பதனால் செவிகள் துளைக்கப்பட வேண்டும்; அவன் பெருமைசேர் சொற்களினால் செவிகள் துளைக்கப் படவேண்டும்; இவ்வாறு இறைவனைப்பற்றிய சீர் நிறைந்த சொற்களால் துளைக்கப்பட்ட செவிகளே செவிகளாகும்; மற்றவை உயிரற்ற மரம்போன்ற வெற்றுச் செவிகளே என்று அழுத்தமாக இறைவனை நோக்கிப் பேசுகின்றார் இராமலிங்க அடிகள்.

விடுபேற்றை அளிக்கும் இறைவனே! நீ கேட்பாயாக! உலகங்களுக் கெல்லாம் பழமையும் முதல்வனுமான கடவுளே என்றும், தீமை புகாமல் நல்லனவற்றால் துளைக்கப்பட்ட செவிச் செல்வா! என்றும், வற்றாத கங்கையைச் சடையிலே பெற்ற சிவபெருமானே! என்றும் உளமாரக் கூறும் சீர்நிறைந்த புகழ்ச் சொற்களால் துளைக்கப்படாத செவியானது, காளை வாகனத்தின்மேல் வருகின்ற உன்னுடைய அழகிய திருவுலாவை உன் அருட்காதலுடையார் காணு வண்ணம் மூடி அடைக்கப் பட்ட துளையைக்கொண்ட வெற்றுக் கதவு போன்றதாகும் என்கின்றார்.

குறிப்பு:- இறைவன் திருப்புகழைக் கேட்டு அதனால் துளைக்கப்படாத வெற்றுத் துளைகொண்ட செவிக்கு, இறைவன் திருவுலாவைக் காதலு டையார் காணுவண்ணம் அடைத்த துளை கொண்ட மரக் கதவை உவமை கூறுகின்றார் இராமலிங்க அடிகள். பொதுவாகச் செவிகள் வெற்றுத் துளைகொண்ட செவிகளாயின் அவை முழுமை பெற்றனவல்ல; அவை இறைவன் திருப்பெயர் கொண்ட சொற்களால் துளைக்கப் பட்டால் தான் முழுமை பெற்ற திருச்செவியாகும் என்றும் செவி பெற்றதின் பயனையும் பெற்றதாகும்

என்றும் மிக நன்ருக வலியுறுத்துகின்ருர்; மேலும் செவி பெற்றதின் பயனைக் கூறுவதின்மூலம் மந்திர சத்தி வாய்ந்தஇறைவன் திருப்பெயர்களின் உயர்வையும், அவற்றை நாள்தோறும் மக்கள் ஓதியும், பிறர் ஓதக் கேட்டும் இறை வழிபாடு செய்ய வேண்டுமென்ற அறிவுரையையும், இறை உணர்வையும் ஒருசேரப் பெற வைக்கின்ருர் இராமலிங்க வள்ளலார்.

நாட்டாதி – நாடு + ஆதி எனக்கொள்க;

நல்ல துளையா – தீமை புகாமல் நல்லனவற்ருல் துளைக்கப்பட்ட செவிச் செல்வா எனக்கொள்க;

**இராமலிங்கஅடிகள்:-**

இவர் 5—10—1823இல் தென்ஞர்க்காடு மாவட்டத்தில் சிதம்பரத்திற்கு வடமேற்கில் மருதூரில் தோன்றியவர். தந்தையார் பெயர் இராமையா பிள்ளை. தாயார் பெயர் சின்னம்மையார். மனைவியார் பெயர் தனக்கோட்டி அம்மையார். உடன் பிறந்தவர் நால்வராவர். இவர் ஐந்தாவது குழந்தையாகப் பிறந்தவர். நால்வரின் பெயர்கள் சபாபதி - பரசுராமன் - சுந்தராம்பாள்—உண்ணுமுலை என்பன. பெற்ருேர்க்குப்பின் தமையஞர் பாதுகாப்பில் வளர்ந்தார். படிப்பில் நாட்டமில்லை. வீட்டை விட்டகன்ருர்; தில்லையை அடைந்தார்; நடராசப் பெருமானைக் கண்டார்; அவன் அருள் பெற்ருர்; வடலூருக்கு வந்தார்; அவ்வூருக்கு மூன்றுகல் தொலைவிலுள்ள மேட்டுக்குப்பத்தில் சித்திவளாகத்தில் ஒரு குடிலில் வாழ்ந்தார். எம்மதத்தினரும் வணங்கும் சத்திய ஞானசபையைக் கட்டினுர்; அச்சபைமூலம் ஒளி வழிபாட்டின் உயர்வைத் தெளிவுபடுத்திச் சமயப் பணிபுரிந்தார்; 'அருட்பெருஞ்சோதி தனிப் பெருங்கருணை'– என்பது அடிகளின் அருள் வாக்காகும். பசிப்பிணி போக்கச் சத்திய

தருமசாலை ஒன்றையும் கட்டுவித்தார்; அத்தரும சாலையின்மூலம் அறப்பணி புரிந்தார். அவ்வப் பொழுது இறைவன் அருட்புகழ் பற்றியும் சமரச சன்மார்க்க நெறியினைப் பற்றியும் பாடிய பாடல் களின்மூலம் தமிழ்ப்பணி புரிந்தார். அவற்றை ஒருசேரத் தொகுத்து ஆறு திருமுறைகளாக வகுத்துத் 'திருவருட்பாத் திருமுறை'- என்ற பெயரில் தொழுவூர் வேலாயுத முதலியாரவர்கள் வெளியிட்டனர். மரணமிலாப் பெருவாழ்வு வாழலாம்—என்பது அடிகளின் கொள்கையாகும். பின்னர் அடிகள் 1874 இல் ஒரு சிறு குடிலில் திருக்காப்பிட்டுக் கொண்டார்.

இராமலிங்க அடிகளார் தம் தமிழைப்பற்றிய பாடல்:—

நாடி வருவார்க்கு
    நல்விருந்து; வாழ்வெண்ணத்
தேடி வரும்வினைக்குத்
    தீநஞ்சாம்—பாடியே
இன்பம் திளைப்பவர்க்
    கின்தேன் இராமலிங்கர்
அன்பாய் அளித்தஅருட் பா!

—ரெ. முத்துக்கணேசன்

திருவருட்பா:- இராமலிங்க அடிகள் அருளிய பாடல்கள், உரைநடைப் பகுதிகள், கீர்த்தனைகள் முதலிய வற்றை ஆறு திருமுறைகளாகத் தொகுத்துத் "திருவருட்பா"—என்றபெயரில் வெளியிடப்பெற்ற நூல். இதனைவெளியிட்டவர் தொழுவூர் வேலாயுத முதலியாரவர். இந்நூலில்,அடிகள்எல்லாவகைப் பாவினங்களாலும் பாடியுள்ளமை காணலாம். எளியநடையில் தேவார, திருவாசகச் சொற்களைப் பொன்னேபோல் போற்றிப் பாடியுள்ளார்.

சிவநேச வெண்பா முதலாவது திருமுறையில் சிறு தலைப்புடைய ஒரு நூல். காப்புச் செய்யுட்கள் சேர்த்து மொத்தம் பாக்கள் நூற்று இரண்டு ஆகும்.

ஒப்புமை:—

மூஉலகும் ஈரடியால்
    முறைநிரம்பா வகைமுடியத்
தாவியசே வடிசேப்பத்
    தம்பியொடும் கான்போந்து
சோஅரணும் போர்மடியத்
    தொல்இலங்கைக் கட்டழித்த
சேவகன்சீர் கேளாத
    செவியென்ன செவியே!
திருமால்சீர் கேளாத
    செவியென்ன செவியே!

—இளங்கோ அடிகள்
சிலப்பதிகாரம்-ஆய்ச்சியர்குரவை.

செவிகாள்! கேண்மின்களோ! – சிவன்
    எம்மிறை செம்பவள
எரிபோல் மேனிப்பி ரான்திறம் எப்போதும்
    செவிகாள் கேண்மின்களோ!

—திருநாவுக்கரசர்
திருமுறை: 4. பதிகம்: 9. பா. எ: 3.

## 49

### எதற்காவேன்?

புல்லும் பசுவிற்காம்;
　　பூண்டும் மருந்திற்காம்;
கல்லும் திருக்கோயில்
　　கட்டுதற்காம்;—தொல்லுலகில்
ஏழை எளியேன்
　　எதற்காவேன்? செந்திநகர்
வாழும் வடிவேல வா!

—கவிமணி தேசிகவிநாயகம்பிள்ளை
மலரும் மாலையும்; முருகன் புகழ்மாலை; பா: எ. 22

இயற்கை நமக்கு எவ்வளவோ உண்மைகளைப் புகட்டக் காணுகின்றோம். மக்களுக்குச் செடி கொடிகள் உணவுக்குரிய காய்கறிகளைக் கொடுத்து உதவுகின்றன. மரங்கள் வளமையான பழங்களைத் தந்து உதவுகின்றன; நிலமும் கடலும் எவ்வளவோ பொருள்களை அள்ளித் தந்து உதவுகின்றன; இவ்வாறு தம்மிடமுள்ளவற்றைப் பிறர்க்குக் கொடுத்து உதவ வேண்டுமென்ற உண்மையை இவ்வியற்கைச் செயல்கள் நமக்கு உணர்த்துகின்றன. உண்மையிலேயே பிறர்க்குப் பயன்படுமாறு நாம் நமக்குரிய பொருள்களை வழங்கவேண்டும்; அங்ஙனம் வழங்குவதிலேதான் வாழ்வின் முழுப் பயனையும் நாம் அடைந்தவர்களாவோம். அதிலும் பொருள் இல்லாதவர்களுக்கு ஈவதுதான் மிகச்சிறந்த அறமாகும் என்பர். அத்தகைய அறத்தால் பெறும் புகழ்தான் நிலைத்த புகழாகும் என்பர் ஆன்றோர். இவ்வுலகில் மனிதனுகப் பிறக்கலாம்; செல்வனுக வாழலாம்; ஆற்றல் படைத்தவனுக இருக்கலாம்; பிறர் புகழவும் வாழலாம்; இவ்வாறு இருந்தாலும் ஒரு மனிதன் மனமாரப் பிறர்க்கு ஈந்து வாழும் வாழ்வு ஒன்றினுலேதான் நிலைத்த புகழினை அடையமுடியும்; வாழ்வின் முழுப்பயனையும் துய்க்கமுடியும்; மண்ணில்

பிறந்த உயிருக்கு ஈயும் அறத்தினுல் பெறப்படும் புகழினைக் காட்டிலும் வேறு ஒன்று சிறந்ததாக இருக்க முடியாதல்லவா? இக்கருத்தைத்தான் திருவள்ளுவர்,

ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு. (பா. எ: 231)

என்ற திருக்குறளால் கூறுவர்: ஆக இந்த நிலவுலகத்திலே நெடுங்காலம் நிற்கக் கூடிய புகழை மனிதனுகப் பிறந்த ஒவ்வொருவனும் ஆற்ற வேண்டும் என்கின்ருர் திருவள்ளுவர். திருவள்ளுவர் தம் திருவாய் மொழிக்கிணங்க அத்தகைய புகழை அடைய வேண்டுமென்று எண்ணினர் கவிமணியவர்கள். அவர்கள் திருச்செந்தூரில் வீற்றிருக்கும் முருகப் பெருமானிடம் பெரிதும் ஈடுபாடுடையவர்கள். அப்பெருமானை நாள்தோறும் நினைந்து வழிபடும் உள்ளத்தவர்கள். அவர்கள் முருகப்பெருமானிடம், நீ என்னை மண்ணில் பிறக்க வைத்ததற்காக மங்காப்புகழையும் தந்தருள்வாயாக என்று அவனிடமே வேண்டுகின்ருர்.

திருச்செந்தூரில் வீற்றிருந்து அருளும் வெற்றி வடிவேலையுடைய செந்தில் ஆண்டவனே! இந்தப் பழமையான உலகத்திலே மக்களால் தேடுவாரற்றுக் கிடக்கும் பொருள்களில் ஒன்று பசும் புல்லாகும். ஆனுல் அந்தப் பசும்புல்லோ பாலைத் தருகின்ற பசுவிற்கு உணவாக உதவுகின்றன. ஊருக்கு வெளியில் தானுக வளரும் பூண்டு வெள்ளைப் பூண்டாகும்; அவ் வெள்ளைப் பூண்டுகள் மக்களுக்கு உணவாகவும் மருந்தாகவும் பயன்படுகின்றன. இவைதவிரச் சாலைகளிலும் காடுகளிலும் ஒதுக்கப்பட்டுக் கிடக்கும் பொருள் கற்களாகும்; அங்ஙனம் ஒதுக்கப்பட்ட அக்கற்களோ நம்முடைய அறியாமையை அகற்றி ஞான ஒளி நல்கும் இறைவன் திருவுருவங்களைச் சமைக்கவும் அத்திருவுருவங்கள் வீற்றிருக்கத் திருக்கோயில்கள் எழுப்பவும் வீடுகள் கட்டவும் பயன்படுகின்றன; இவ்வாறு மேற்

கண்ட பொருள்கள் ஒவ்வொன்றும் அதனதன் தன்மைகளுக் கேற்ப மக்களுக்குப் பயன்படுகின்றன; உதவுகின்றன. பயன்படுதலாம் நிலைத்த புகழினைப் பெறுகின்றன. ஆனால் எந்த விதத் திறமையும்- பிறருக்குப் பயனாகுந் தன்மையும் அற்றவனாக நான் இருக்கின்றேன்; பிறருக்கு உதவமுடியாத எளியவனாக இருக்கின்றேன். நான் மண்ணில் பிறந்ததின் பயன்தான் என்ன? நான் எதற்காவேன்? என்னைப் பயனுடையவனாக்கி நிலைத்த புகழினை யான் பெற அருள்புரிவாயாக! என்கின்றார்.

குறிப்பு:- 'வெந்த சோற்றைத் தின்று விதிவந்தால் சாவது' என்ற கோட்பாட்டின்படி வாழ்வது மனித வாழ்க்கையன்று:பசும் புல்லைப்போன்றோ பூண்டைப் போன்றோ, கற்களைப் போன்றோ மக்களுக்குப் பயன்பெற வாழவேண்டும்; மண்ணில் பிறந்த ஒவ்வொருவரும் தம்மாலியன்றவரை பிறர்க்கென வாழ்ந்து அதனால் நிலைத்த புகழினைப் பெற வேண்டும் என்றுகூறுகின்றார் கவிமணி அவர்கள். பிறர்க்கென வாழ்ந்து புகழ்பெறுதல் வேண்டும் என்ற ஏக்கமும், அதற்குரிய அருளை முருகப் பெருமான்பால் வேண்டிக்கொள்ளும் இறை உணர்வும், தன்னை எளியனாகக் கூறிக்கொள்ளும் தன்னடக்கமும் கவிதையில் சிற்பவடிவு போல் சிறந்து காட்சி நல்கக் காணுகின்றோம்.

**கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை:-** 1876 ஆம் ஆண்டு நாஞ்சில் நாட்டிலுள்ள தேரூரில் பிறந்தவர். தந்தையார் பெயர் சிவதாணு பிள்ளை. தாயார் பெயர் ஆதிலட்சுமி அம்மையார். மனைவியார் புத்தேரி என்ற ஊரில் பிறந்த உமையம்மையார் ஆவார்கள். கவிமணியவர்கள் திருவாடுதுறை ஆதீனம் சாந்தலிங்கத் தம்பிரானிடம் தமிழ்க் கல்விபயின்றார். தமிழாசிரியராக உயர்நிலைப் பள்ளியிலும் கல்லூரியிலும் பணியாற்றினார்.

1940ஆம் ஆண்டு சென்னைத் தமிழ்ச்சங்கத்தார் தேசிகவிநாயகம்பிள்ளை அவர்களுக்குக் 'கவிமணி' என்ற பட்டத்தை வழங்கினார்கள். இவர்தம் புனைபெயர்கள்; ஆண்டான், கவிராயன், ஐயம் பிள்ளை, தேவி, குயில், யதார்த்தவாதி.

இவர் இயற்றிய நூல்கள்: மலரும் மாலையும், ஆசிய ஜோதி, உமர்க்கய்யாம் பாடல்கள், நாஞ்சில் நாட்டு மருமக்கள் வழி மான்மியம், காதல் பிறந்த கதை, தேவியின் கீர்த்தனங்கள், காந்தளூர்ச்சாலை முதலியனவாகும்.

பேரும் புகழும் பெற்ற இக் கவிஞர் பெருமான் ஜெய ஆண்டு புரட்டாசித் திங்கள் 10 ஆம் நாள் 26—9—1954இல் இறைவன் திருவடி எய்தினர். இவர்தம் வெண்பாவின் பா இனிமையைப் பற்றிய பாடல் காண்க:

கொஞ்சு மொழியும்
குலவிவரும் சொல்லழகும்
பிஞ்சு மொழியாகப்
பேசுமே!—நெஞ்சுதனில்
பூவினிக்கத் தேன்வடியும்
புத்தேரி வாழ்கவிஞன்
பாவினிக்கப் பாடும்வெண் பா!

—ரெ. முத்துக்கணேசன்
'முத்துமாலை'

## 50

### அரன் அருள்

சந்த மொழியோ
 சரக்கொன்றைப் பூமணமோ
பந்த மறுக்கும்
 படைவிடோ — அந்தமிகும்
அந்தி அழகோ
 அரனருள்தான் நெஞ்சேநீ
செந்தீ யனையான்தாள்
 சேர்.

—ரெ. முத்துக்கணேசன்
'முத்துமாலை'

அன்பின் முதிர்ந்த நிலையை அருள் என்பர் ஆன்ருேர். எல்லாவகைச் செல்வங்களுக்குள்ளும் சிறந்த செல்வம் அருட்செல்வம் என்றும், அது பிறர் துயர் கண்டு இரக்க உணர்வு பெருகப் பிறருக்கு உதவிக் காக்கும் தன்மை வாய்ந்தது என்றும் கூறுவர் திருவள்ளுவர். அத்தகைய அருள் எங்கு இருக்கின்றதோ அங்குத் தெய்வமும் இருக்குமன்ருே? சிவபெருமானின் திருவருள் எத்தகைய தன்மை வாய்ந்தது என்பதைக் கவிஞர் ஈண்டு தன் நெஞ்சை நோக்கிக் கூறுகின்ருர்.

நெஞ்சே! ஒப்பற்ற எல்லாம் வல்ல சிவபெருமானின் திருவருளானது அழகும் சந்த வண்ணமும் கொண்ட அருட் கவிதை மொழியைப் போன்றதோ? கொத்தாக நிறைந்துள்ளகொன்றைமலரின்மணத்தைப்போன்றதோ? காயும் தீவினைக்கட்டை அறுத்துக் காக்கும் ஆயுதசாலை போன்றதோ? அழகின்பம் நிறைந்த மாலைக்கால அழகு போன்றதோ? நீ செந்தீயின் நிறம் அனைய நிறங்கொண்ட சிவபெருமான்தன் திருவடிகளைச் சென்று சேர்வாயாக என்கின்ருர்.

குறிப்பு:- சிவபெருமான் திருவருளை நினைந்து அவன் திருத்தாளைப் பற்றுமாறு நெஞ்சை நோக்கிக் கூறுகின்றார் கவிஞர்; மேலும் சிவபெருமான் திருவருளானது - 'சந்தமொழி' என்பதனால் 'அறிவின்' தன்மையையும், 'கொன்றை மணம்' என்பதனால் 'அன்பின்' தன்மையையும், 'படைவீடு' என்பதனால் வீரத்தின் தன்மையையும், 'அந்தி அழகு' என்பதனால் 'அழகின்' தன்மை யையும் பெற்றுள்ளது என்றும் கூறுகின்றார். ஆக, சிவனருள் மக்களுக்கு அறிவாகி நின்று வழி காட்டியும் அன்பாக நின்று வாழ்வளித்தும், வீரமாகி நின்று பாதுகாத்தும், அழகாகி நின்று ஆட்கொண்டும் உய்விக்கும் என்ற குறிப்பையும் பெற வைக்கின்றார் கவிஞர். அவர்தம் கவிதை வாழ்க!

ரெ. முத்துக்கணேசன்:-

இவர் கவிஞர். உரையாசிரியர். கட்டுரையாளர். இவர் இராமநாதபுர மாவட்டத்தில் காரைக்குடி யில், பிரபவ ஆண்டு ஆவணித்திங்கள் 4ஆம் நாள் (20—8—1927)இல் பிறந்தவர். தந்தையார் பெயர் ரெங்கநாதன். தாயார் பெயர் வள்ளியம்மை. இவர் கம்பன் கழகம் முதலிய பல இலக்கியக் கழகங்களின் நிகழ்ச்சிகளிலும், அகில இந்திய திருச்சி வானொலி நிலைய நிகழ்ச்சிகளிலும், பல்வேறு கவியரங்குகளிலும் பங்குபெற்றுச் சிறப் புற்றவர். இவர்தம் தனிப்பாடல்களும் கட்டுரை களும் பாராட்டத்தக்க வகையில் பத்திரிகைகளில் இடம் பெற்றுள்ளன.

இவர்தம் நூல்கள்:

கவிதை:- நல்லுரை வெண்பா:

11-3-1956இல் காரைக்குடித் தமிழ்க் கலைமன்றத் தார் இந்நூலைப் பாராட்டிப் பரிசு ஈந்து சிறப்பித்

துள்ளனர். இந்நூல், ஆங்கிலத்தில் 'RUBIES OF WISDOM'—என்ற தலைப்பில் திரு. வி. ஆர். எம். செட்டியார் பி. ஏ., அவர்களால் மொழி பெயர்க்கப் பெற்று 16—10—1962 இல் வெளிவந் துள்ளது.

முத்துமாலை:- கவிதைத் தொகுப்பு

உரை நூல்:- முத்தொள்ளாயிரம்: (இவ்வுரை நூல் சென்னைப் பல்கலைக்கழக ஓரியண்டல் கல்லூரியில் வித்துவான் வகுப்பிற்கு 1960 ஜூன் முதல் நான்கு ஆண்டிற்குப் பாடமாக வைக்கப்பட்டிருந்தது). மூன்றாம் பதிப்பு:

தமிழ்த்தொகை: தொகுப்புரை நூல், இரண்டாம் பதிப்பு.

கட்டுரை:- தமிழர்வாழ்த்து

முத்துமாலை:- இது தனித்தனித் தலைப்புக்களைக் கொண்ட கவிதைத் தொகுப்பு நூல். கடவுள் வாழ்த்து - தமிழ் - இயற்கை-பண்பு-கவிஞர்-என்ற பொதுத் தலைப்புக்களில் முப்பது சிறு தலைப்புக்களைக் கொண்டது. இந்நூல் காரைக்குடி இந்து மதாபி மான சங்கத்தாரால் 1—2—1965இல் பாரதி விழா வில் வெளியிடப்பட்டுச் சிறப்பிக்கப்பெற்றது. இந் நூல் அகில இந்திய திருச்சி வானொலி நிலையத் தாலும், பத்திரிகை களாலும் பாராட்டுப் பெற் றுள்ளது.

"தமிழ்பற்றிய பாடல்களில் கவிஞர் புலப்படுத்தும் உணர்ச்சியும் உள்ளப் பாங்கும் நம்மை இன்புறுத்துகின்றன.

'பொய்யே காமம்'— என்றகுறுந்தொகை வரிக்கு விளக்கமாக அமைந்த கவியரங்கப் பாடல் கற்கண்டாய் இனிக்கின்றது.

இத்தகைய சிறப்புக் கவிதைகளான இம் முத்து மாலையை இன்றைய தமிழ்க்கவிதை வளர்ச்சி தந்த காணிக்கையாகத் தமிழ்த்தாய் போற்றி அணிவாள் என்று மதிப்பிடலாம்"

—அகிலஇந்திய திருச்சி வானொலி நிலையம்:
மதிப்புரை; 2—4—1964

"கவிதை பேசும் மொழியில் இனிமையும் இருக்க வேண்டும்; எளிமையும் இருக்க வேணடும்; கருத்தும் இருக்கவேண்டும்; அத்துடன் கவிதையும் இருக்கவேண்டும். 'முத்துமாலை'– என்ற இச்சிறு நூலில் அடங்கியிருக்கும் கவிதைகள் சொல்நயம், பொருள் நயம், ஓசை நயம் ஆகியவைகளைக் குறைவறக் கொண்டு விளங்குகின்றன."

"கல்கி" 17—5—1964

"கவிதைகள் அத்துணையும் நன் முத்துக்களே! இயற்கையின் எழில்நலத்தை எடுத்துரைக்கும் நூலாசிரியர் தமது புலமை நலத்திற்கு முத்திரை பொறித்து விடுகின்ருர். எளிமையில் புலமையும், இனிமையும் தருவது இந்நூல். கவிநலம் காண விழையும் உள்ளங்களுக்கு இப்படைப்பு நல்ல தொரு விருந்தாகும்."

—'தமிழ்நாடு' நாளிதழ்; 19—5—1964

——

## பயன்

கல்லுயர் கழுமல
விஞ்சியுள் மேவிய கடவுள்தன்னை
நல்லுரை ஞானசம்
பந்தன்ஞா னத்தமிழ் நன்குணரச்
சொல்லிடல் கேட்டல்வல்
லோர்தொல்லை வானவர் தங்களொடும்
செல்குவர் சீர்அரு
ளாற்பெற லாஞ்சிவ லோகமதே.

—திருஞானசம்பந்தர்
திருமுறை: 1; பதிகம்: 117 பா எ: 12

திருச்சிற்றம்பலம்

## தொகுத்த பாடல்களின் எண்ணிக்கையும் வைப்பு முறையும் வருமாறு:-

| | | |
|---|---|---|
| திருஞானசம்பந்தர் | (2-ஆம் திருமுறை) | 1 |
| திருநாவுக்கரசர் | (4-ஆம் திருமுறை) | 9 |
| ” | (5-ஆம் திருமுறை) | 3 |
| ” | (6-ஆம் திருமுறை) | 2 |
| சுந்தரர் | (7-ஆம் திருமுறை) | 1 |
| மாணிக்கவாசகர் | (8-ஆம் திருமுறை) | 10 |
| சேந்தனர் | (9-ஆம் திருமுறை) | 2 |
| திருவாலியமுதனர் | ” | 1 |
| புருடோத்தம நம்பி | ” | 1 |
| திருமூலர் | (10-ஆம் திருமுறை) | 1 |
| காரைக்காலம்மையார் | (11-ஆம் திருமுறை) | 1 |
| நக்கீரர் | ” | 2 |
| கபிலதேவ நாயனர் | ” | 1 |
| பட்டினத்தார் | ” | 1 |
| ” | (திருப்பாடல் திரட்டு) | 1 |
| நம்பியாண்டார் நம்பி | (11-ஆம் திருமுறை) | 1 |
| சேக்கிழார் | (12-ஆம் திருமுறை) | 1 |
| ஆண்டாள் | (நாச்சியார் திருமொழி) | 2 |
| பூதத்தாழ்வார் | (2-ஆம் திருவந்தாதி) | 1 |
| நம்மாழ்வார் | (திருவாய்மொழி) | 1 |
| அருணகிரிநாதர் | (கந்தர் அலங்காரம்) | 1 |
| தாயுமானவர் | (திருப்பாடல்கள்) | 1 |
| குமரகுருபரர் | (திருவாரூர் நான்மணிமாலை) | 1 |
| ” | (சிதம்பர மும்மணிக்கோவை) | 1 |
| இராமலிங்க அடிகள் | (திருவருட்பா) | 1 |
| தேசிகவிநாயகப்பிள்ளை | (மலரும் மாலையும்) | 1 |
| முத்துக்கணேசன் | (முத்துமாலை) | 1 |
| | மொத்தம் | 50 |

# பாட்டு முதற் குறிப்பு

## பாட்டு முதற் குறிப்பு



—